


# வ.வே.சு. ஐயர்

கோ. செல்வம்



இந்திய
இலக்கியச்
சிற்பிகள்

உள்அட்டையில் காணும் சிற்பக் காட்சியில் பகவான் புத்தரின் அன்னை மாயாதேவி கண்ட கனவின் பலனை மன்னர் சுத்தோதனருக்கு நிமித்திகர் மூவர் விளக்குகின்றனர். அவர்களுக்குக் கீழே அமர்ந்து அந்த விளக்கத்தை எழுதுகிறார் ஓர் எழுத்தர். எழுதும் கலையைச் சித்திரிக்கும் முதல் இந்தியச் சிற்பம் இதுவாகவே இருக்கலாம்.

(நாகார்ஜுன மலைச்சிற்பம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு. பட உதவி: நேஷனல் மியூசியம், புதுதில்லி)

*Va.Ve.Su. Iyer Monograph in Tamil by G. Selvam, Sahitya Akademi, New Delhi; 2000, Rs. 25.*


முதல் பதிப்பு: 2000
ISBN 81-260-0827-X

சாகித்திய அக்காதெமி

தலைமை அலுவலகம்:
ரவீந்திர பவன், 35, பெரோஸ்ஷா சாலை,
புதுதில்லி 110 001.

விற்பனை:
'ஸ்வாதி' மந்திர் சாலை, புது தில்லி 110 001.

மத்தியக் கல்லூரி வளாகம், பல்கலைக்கழக நூலகக் கட்டிடம்,
டாக்டர் அம்பேத்கார் வீதி, பெங்களூர் 560 001

'குணா பில்டிங்', 304-305, அண்ணா சாலை,
தேனாம்பேட்டை, சென்னை 600 018.

ஜீவன்தாரா பில்டிங், 4வது மாடி,
டைமண்ட் ஹார்பர் சாலை, கல்கத்தா 700 053.

172, மும்பை மராத்தி கிரந்த சங்கிரகலாய சாலை,
தாதர், மும்பை 400 014.

**விலை ரூ.25/-**

கணிப்பொறி அச்சுக் கோர்ப்பு: அக்ஷரா, சென்னை - 18
அச்சிட்டோர்: நாகார்ஜுனா பிரிண்டர்ஸ், சென்னை-21

# பொருளடக்கம்

# 1. வ.வே.சு. ஐயர் - வாழ்க்கைக் குறிப்புகள்

அது ஆங்கிலேயர் நம்மை ஆண்டு வந்த காலம். அண்டிப் பிழைக்க வந்த அவ்வெள்ளையரிடம் நாம் அடிமைப் பட்டிருந்த காலம். வணிகர்களாக வந்த ஆங்கிலேயர் நம்மிடையே நிலவிய ஒற்றுமையின்மையைப் பயன்படுத்தி நம் நாட்டைச் சிறுகச் சிறுகப் பறித்துக் கொண்டு நம்மை ஆண்டு வந்தனர்.

அவர்களது கொடுங்கோலாட்சியை எதிர்த்துக் குரல் கொடுத்து வந்த விடுதலை வீரர்களைக் கருணையின்றித் தண் டித்து வந்தனர். புரட்சி, இந்த அடக்கு முறையால் அடங்க வில்லை. எதிர்ப்பானது நம் தாய் மண்ணில் மட்டுமின்றி, அவர் களது நாட்டிலேயே ஓர் இயக்கமாக உருவெடுத்ததே குறிப்பிடத்தக்க வரலாறு. இதில் நேரிடையாகத் தம்மை ஈடுபடுத் திக் கொண்டவர் தாம், வ.வே.சுப்பிரமணிய ஐயர் என்னும் மாவீரர்.

வரகனேரி வேங்கடேச சுப்பிரணிய ஐயர் திருச்சி வரகனேரி யைச் சேர்ந்த வேங்கடேச ஐயருக்கும், சின்னாளப்பட்டி எனும் ஊரைச் சேர்ந்த காமாட்சியம்மாளுக்கும் 2.4.1881இல் பிறந்தார். வேங்கடேச ஐயர் எம்.ஏ. தேர்ச்சி கண்டு, திருச்சி வரகனேரி வர்த் தக சங்கம், ஜனோபகார நிதி முதலிய நிறுவனங்களை நடத்தி வந் தார். சுப்பிரமணியம் திருச்சி செயிண்ட் ஜோசப் கல்லூரியில் பயின்றார். தம் பன்னிரண்டாம் வயதில் மெட்ரிகுலேஷன் தேறி னார். பதினாறாம் வயதில் பி.ஏ. பட்டத் தேர்வில் மாகாணத்தில் முதலாவதாகத் தேறினார்.

அவர், தம் பன்னிரண்டாம் பிராயத்திலேயே அத்தை மகள் பாக்கியலட்சுமி அம்மையாரைத் திருமணம் செய்து கொண்டார். அவர் பி.ஏ. படித்து முடித்த பின்னர், சென்னை மாநகர் வந்து சட் டம் பயின்றார். வழக்கறிஞர் பட்டம் பெற்றதும் பத்தொன்பதாம் வயதில் திருச்சி திரும்பி வழக்கறிஞர் தொழில் நடத்தி வந்தார். இவரது மைத்துனர் பசுபதி ஐயர் என்பார், இவரை ரங்கூனுக்கு அழைத்துச் சென்று பாரிஸ்டர் பயில வைக்கத் திட்டமிட்டார். 1907இல் வ.வே.சு. ஐயர் ரங்கூன் வழி இலண்டன் ஏகினார்.

இலண்டனில் தீவிர தேசிய இயக்கவாதியான விநாயக தாமோதர சாவர்க்கரின் அறிமுகம் ஏற்பட்டது. சியாம் கிருஷ்ண வர்மா, விபின் சந்த்ரபால், லாலா ஹரிதயாள், மேடம் காமா முதலியோருடன் ஒன்றிப் பழகினார். தேசிய இயக்கத்தை ஒரு கண்ணாகவும், பாரிஸ்டர் கல்வியை மற்றொரு கண்ணாகவும் கொண்டிருந்தார். இலண்டனுக்கு 1908இல் வந்த காந்தி அண்ணலைச் சந்தித்தார். இவர் இலண்டனில் வாழ்ந்த காலத்தில் பாரதியாரின் 'இந்தியா' பத்திரிக்கைக்கு எழுச்சியூட்டும் கட்டுரைகள் எழுதி அனுப்பி வந்தார்.

இலண்டன் 'இந்தியாவிடுதி' (India House)யில் தங்கியிருந்த அவருடன் 30 பேர் சேர்ந்து விடுதலை இயக்கத்தில் ஈடுபட்டனர். துப்பாக்கிப் பயிற்சி பெற்றார். புரட்சி இளைஞர்களுக்கும் அப்ப பயிற்சி அளித்தார். அவரிடம் பயிற்சியாளராக விளங்கிய மதன் லால் திங்க்ரா, 1909இல் கர்ஸன் வைலியைச் சுட்டுக் கொன்றார்.

திங்க்ராவிற்கு மரணதண்டனை அளிக்கப் பெற்றதும், அந்த வீர இளைஞர் புன்சிரிப்புடன், தூக்குமேடை ஏறி, வீர மரணத்தைத் தழுவினார்.

திங்க்ரா, கர்ஸன் வைலியைக் கொன்றதன் விளைவாக, சாவர்க்கர் கைது செய்யப்பட்டார். பாரிஸ்டர் தேர்வு கண்ட வ.வே.சு. பட்டமளிப்பு விழாவில் 'ராஜவிசுவாசப் பிரமாணம்' எடுக்க மறுத்தார். அதையொட்டி அவரைக் கைது செய்ய ஆங்கில அரசு ஆணையிட்டது. சாவர்க்கரை வ.வே.சு சந்தித்தார். அப்போது சாவர்க்கர் வ.வே.சுவை எவ்வாறாயினும் இந்தியா தப்பிச் செல்லக் கூறினார். அவ்வண்ணம் வ.வே.சுவும் சீக்கியர் போல் வேடம் பூண்டு பிரான்ஸ் சென்றார். அங்கே அவரை வேவு பார்க்க வந்தவனிடம் தாம் வீர விக்ரம்சிங் என்ற சீக்கியர் என்று கூறி ஏமாற்றி, துருக்கி, கொழும்பு வழியாகப் பயணித்தார். அப்பயணம் வீரதீர சாகசச் செயல்கள் நிறைந்தது.

1910 அக்டோபர் 9ஆம் நாள் வ.வே.சு.ஐயர் புதுச்சேரி வந்தார். மண்டயம் ஸ்ரீநிவாசாச்சாரியார், அரவிந்த கோஷ், மகாகவி பாரதியார் ஆகியோருடன் இணைந்தார். இங்கும் வ.வே.சு. ஐயர் "இந்தியா"வில் தொடர்ந்து எழுதி வந்தார். பல மொழிபெயர்ப்பு நூல்களை வடித்தார். திருக்குறளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். கம்பராமாயணப் பாலகாண்டப் பதப்பிரிப்புப் பதிப்பையும் கொணர்ந்தார்.

கலெக்டர் ஆஷ் துரையைச் சுட்டுக் கொன்ற வாஞ்சிநாதன் என்னும் வீர இளைஞனுக்குப் புதுச்சேரியில் முன்னதாக வ.வே.சு. ஐயர் துப்பாக்கி சுடும் பயிற்சி அளித்தது குறிப்பிடத்தக்கது.

முதல் உலகப்போரின் போது, வ.வே.சு. ஐயரை அல்ஜி யர்ஸுக்கு நாடு கடத்த ஆங்கில அரசு சூழ்ச்சி செய்து, பிரஞ்சு அரசை அணுகிற்று. இது கைகூடவில்லை. இப்போது அவருக்குக் காந்தியாரை இரண்டாம் முறை சந்திக்கும் வாய்ப்பு ஏற்பட்டது.

முதல் உலகப்போர் முடிந்ததும், வ.வே.சு. பிரிட்டிஷ் இந் தியா வர அனுமதிக்கப்பட்டார். "தமிழ்த்தென்றல்" திரு.வி. கலி யாண சுந்தரனார் 'தேசபக்தன்' இதழிலிருந்து விலகவும், அதன் ஆசிரியர் பொறுப்பை வ.வே.சு ஐயர் ஏற்றார். ஆனால் தேசபக்த னில் அவர் எழுதாத ஓர் எழுச்சிக் கட்டுரையைக் காட்டிப் பிரிட்டி ஷார் அவரைப் பெல்லாரி சிறைக்கு அனுப்பினர்.

ஒன்பது திங்கள் சிறையிருந்த அவர், 'கம்பராமாயண ஆராய்ச்சி' எனும் அரிய நூலை ஆங்கிலத்தில் எழுதினார்.

சிறை விடுதலைக்குப் பின்னர், சேரன்மாதேவியில், 1923 இல் 'தமிழ்க்குருகுலம்' - 'பாரத்வாஜ ஆசிரமம்' தொடங்கினார். தொழிற்கல்வியும் அறிவுக் கல்வியும் மாணவர்க்கு அளித்தார்.

இம்மையத்தை அடுத்து, வ.வே.சு. தமது உட்கிடக்கையாக விளங்கிய கொரில்லாப் புரட்சி முறைகளை முதிர்ந்தவர்க்கும் புகட்டியதுடன், துப்பாக்கி சுடல் பயிற்சியும் விடுதலை வேட்கிகளுக்கும் அளித்தார். 'சங்கேத பாஷை'யில் செய்தி பரப்பி தேச விடுதலை உணர்வுக்கு உரம் இட்டு ஊக்கி வளர்த்தார்.

இலக்கியவாதியாக விளங்கிய இந்த அரசியல்வாதி தம் குரு குல மாணவர்களுடன் 3.6.1925 அன்று அம்பாசமுத்திரம் அருவிகா ணத் தம் மகள் சுபத்திராவுடன், மகன் கிருஷ்ணமூர்த்தியையும் அழைத்துக் கொண்டு சுற்றுலா சென்றார். அங்கு அவரும் அவர் மகள் சுபத்திரையும் எதிர்பாராது அருவியில் கால் வழுக்கி விழுந்து அமரத்துவம் எய்தினர்*.

★ வ.வே.சு. ஐயரின் சடலம், குண்டத்தில் அமிழ்ந்து விட்டது. மூன்றாம் நாள் காலை அது கண்டெடுக்கப்பட்டது. சுபத்திரையின் உடல் கல்லிடுக்கில் கண்டெடுக்கப்பட்டது. அவரது மகன் கிருஷ்ணமூர்த்தி தம் அன்னையார் குளித்தலையிலிருந்து வந்த பின்னர் வ.வே.சு. ஐயருக்கு அம்பாசமுத்திரத்தில் இறுதிக்கடன்கள் செய்தார்.
(வ.வே.சு கிருஷ்ணமூர்த்தி இந்நூல் ஆசிரியரிடம் நேரில் கூறியது. (18.9.1094)).

அவரது மகன் டாக்டர் வ.வே.சு. கிருஷ்ணமூர்த்தி தற்போது திருச்சி திருவானைக்கோயிலில் வ.வே.சு. ஐயரின் வீர வாழ்க்கை நினைவுகளுடன் வாழ்ந்து வருகின்றார்.

அரசியலில் தீவிரமாக நுழைந்து எழுத்துப் பணியுடன் இணைந்து எண்ணற்ற இலக்கியப் படையல்களை அளித்த வ.வே.சு ஐயரின் வாழ்க்கை இலக்கிய ஆர்வலர்களுக்கு ஓர் ஒப் பற்ற ஒளி நிறைந்த வாழ்க்கையாகும்.

வ.வே.சு ஐயரின் எடுப்பான தோற்றம் பற்றித் 'தமிழ்க் கடல்' ராய. சொக்கலிங்கனார் அவர்கள் எழுதுகிறார்:

"வ.வே.சு. ஐயர் கம்பீரமான தோற்றம் உடையவர். மார்பை, எட்டிப் பார்க்கும் அழகான கருப்பு தாடி; அன்பு ஒழுகும் கண்கள்; மூலை செருகிக் கட்டப்பட்ட முரட்டுக்கதர்; மேலே உடம்பு முழு வதும் போர்த்தப்பட்ட ஓர் ஆடை; நெற்றியில் பிறைச்சந்திரக்குறி; குளிர்ந்த பார்வை; உண்மை முனிவரின் தோற்றம்; நிமிர்ந்த நடை ஒரு தனி அழகு கொண்டது; நடப்பதற்கும் நடையென்று பெயர்; ஒழுக்கத்திற்கும் தமிழில் நடையென்று பெயர். இரண்டிலும் சாலச் சிறந்தவர் வ.வே.சு. ஐயர்."[1]

"தேசபக்தனில்" துணையாசிரியராகப் பணிபுரிந்து வந்த இலக்கிய் கட்டுரையாளர் வெ.சாமிநாத சர்மா வ.வே.சு. ஐயரைப் பற்றி வருணிப்பதாவது:

"ஐயர் 'தேசபக்தன்' காரியாலயத்திற்கு வந்தார். முற்பகல் சுமார் பத்தரை மணி இருக்கும் அப்பொழுது முதன் முதலாக ஐய ரைப் பார்த்தேன். கோடிட்ட நெற்றி, அதில் பிறைவடிவான சந்த னப்பொட்டு, புன்சிரிப்புத் தவழும் உதடுகள், ஒழுங்காகச் சீவி விட்ட தலைமயிரும் தாடி மீசையும், கட்டுமஸ்தான சரீரம், அதை ஓர் உத்தரியம் மறைத்துக் கொண்டிருந்தது. இடுப்பில் பஞ்சகச்ச வேஷ்டி; கையில் ஒரு புத்தகக் கட்டு, இந்தத் திருக்கோலத்தில் காட்சியளித்தார் ஐயர்."[2]

---

1. வ.வே.சு. ஐயர் ராய.சொ. குமரிமலர், (செப்டம்பர் 1994).
2. நான் கண்ட நால்வர் வெ. சாமிநாதசர்மா 1959.

# 2. வ.வே.சு ஐயரின் இலக்கியப் பணிகள்

மொழியார்வம், முதிர்ந்த நாட்டுப்பற்று, முனிவர்க்குரிய மனப்பக்குவம், வீரனுக்குரிய வேகம், நியாயவாதியின் நிதானம், நேர்மையாளர்க்குரிய நெஞ்சுரம், பழைமையில் பக்தி, புதுமையில் ஆர்வம், தொண்டுணர்வு, தியாக சிந்தை ஆகியவற்றின் முழு வடிவமாக விளங்கியவர் வ.வே.சு. ஐயர். அவரது வாழ்க்கையே ஓர் வீர இலக்கியம். அந்த இலக்கியவாதி தம் எழுத்துகளிலெல்லாம் வீர உணர்வைப் பிரதிபலித்தார்.

வ.வே.சு. ஐயர் ஒரு தீவிரமான விடுதலை இயக்கவீரர். இந்திய விடுதலையே அவரது பேச்சும் மூச்சுமாக இருந்தது. அவர் கல்லூரியில் சிறப்புப் பாடமாகத் தேர்ந்த இலத்தீன் மொழியின் வளம் பெற்ற இலக்கியங்கள், அவரை அம்மொழி இலக்கியங்களை அப்போதே கற்றுத் தேற வைத்தன.

அந்நிய ஆட்சிக்கு எதிர்க்குரல் கொடுத்தபடி, வீர சாகசங்களுடன் இலண்டனில் வாழ்ந்த வ.வே.சு. ஐயர், தமது எண்ணக் குமுறல்களை 'லண்டன் கடிதத்தில்' எழுதி வீர எழுத்துக்களைப் படைத்து வந்தார். வ.வே.சு. ஐயரின் முதல் இலக்கிய மலர் அவர் இலண்டனில் எழுதி வந்த 'நோட்டுப் புத்தக'த்தில் பூத்திருக்க வேண்டும். பின்னர் பாரதியின் 'இந்தியா'வில் அவரது 'லண்டன் கடிதங்'கள் விடுதலை இலக்கியமாக மலர்ந்து வந்தன. இலண்டனை விட்டு வெளியேறிப் புதுச்சேரிக்கு வந்ததும், 'மங்கையர்க்கரசி காதல்', 'கமல விஜயம்', 'காங்கேயன்', ' குளத்தங்கரை அரச மரம்' முதலான சிறுகதைகளைப் படைத்தார். திருக்குறளை ஆங்கிலத்தில் "The Kural or The Maxims of Thiruvalluvar" எனும் தலைப்பில் மொழிபெயர்த்தார். எமர்சனின் 'Self Reliance' எனும் கட்டுரையைத் தமிழில் 'தன்னம்பிக்கை' எனும் தலைப்பில் தந்தார். 'புக்கர் வாஷிங்டனின் வரலாற்றை' எழுதினார். 'கம்ப நிலையம்' எனும் பிரசுர நிலையம் நிறுவினார். இந்நிலையத்தினின்று இவர் வெளிக்கொணர்ந்த வெளியீடுகள் தமிழ் மொழி வளர்ச்சிக்கும், இலக்கிய வீறுக்கும் வழிவகுத்தன. 'தேசபக்த'னின் பல்வேறு கட்டுரைகளும், கம்பராமாயண பாலகாண்டம் பதிப்பு பற்றிய கருத்துக்களும் வெளியாயின. இடையிடையே அவரது மொழிபெயர்ப்புக் கட்டுரைகள், கதைகள் வெளிவந்தன.

தமிழில் அறம் பேசிய திருக்குறளின்பால் அவர் கொண்ட

காதல் அளவற்றது. சங்க இலக்கியங்களை அதிகம் நேசித்திருக்கி றார். கற்றார் ஏத்தும் கலியையும், சுவை மிக்க குறுந்தொகையை யும் ஆர்வத்துடன் பயின்றார். அவற்றுள் சில பாக்களை ஆங்கிலத் திலும் மொழிபெயர்த்த ஆர்வலர் அவர்.

தாம் அவ்வப்போது எழுதி வந்த அரசியல் கட்டுரைகளி லும், ஏனைய கடிதம் முதலானவற்றிலும் கம்பர், திருவள்ளுவர் ஏனையோரை ஏற்றபடி மேற்கோள் காட்டுவார். "பாலபாரதி" யில் அவர் பல அரிய கட்டுரைகளைப் பல்வேறு நோக்கங்களில் வடித் தார். பெல்லாரி சிறையில் "கம்பராமாயணம் ஓர் ஆராய்ச்சி" என்று படைத்தார்.

சங்கப் பாடல்கள் தொகுக்கப் பெற்ற அரும்பணிக்காகப் பண்டைப் புலவர்களைப் பாராட்டுகின்றார்:

"அச்சிடும் முறை கண்டுபிடிக்கப்பட்ட வெகு நாட்களுக்கு முன்னரே நமது தமிழ்ப்பாக்கள் தொகுக்கப்பட்டுப் போயினமை யால், தொகுத்தோர் சிறந்தவை என மதியாத ஒவ்வோர் கவியினுடை யவும் பல பாக்கள் இறந்து போயிருத்தல் வேண்டும். ஆனால் மிகு தியுள்ளவை அபரியாத்தமான சுகத்தைத் தருவதால், தொகுத்தவருக்கும் இத்தொகை நூல்களாகிய விலையில்லாப் பொக்கிஷத்தை நமக்குப் பதனப்படுத்தித் தந்திருக்கும் நம் பண்டிதர் பரம்பரைக்கும் நாம் என்றும் மறவாத நன்றியைச் செலுத்த வேண் டும்."

அவர் "பாலபாரதி" யில் எழுதி வந்த கடிதத் தொடரில் அக நானூற்றிலிருந்தும், பட்டினப்பாலையிலிருந்தும் காட்டிய மேற் கோள்கள் அந்நூல்களில் அவர் ஆழங்கால் பட்டிருத்தலைப் புலப் படுத்துகின்றது.

பாரசிக மொழியில் புகழ் பெற்ற 'லைலா மஜ்னு' என்னும் காதல் கதையையும் அவர் தீட்டினார். கிரேக்கப் புராணத்திலி ருந்து 'எதிரொலியாள்' என்னும் கதைக்கும் ஒரு புது வடிவம் தந் தார். சிறுகதைத் தொகுதியில் கடைசியில் வெளியிட்டுள்ள "குளத் தங்கரை அரசமரம்" அழியாப் புகழ் பெற்றதாகும். அக்கதையின் கதாநாயகி ருக்மணி படித்தோர் நெஞ்சத்தில் நீங்காத இடத்தைப் பெற்றவள் ஆவாள்.

வ.வே.சு.ஐயர் தாகூரின் 'காபூலி•வாலாவை' யும் தமிழில் கொடுத்துள்ளார். 'சந்திரகுப்த சக்கரவர்த்தி சரித்திரம்' என்னும்

நூலில் சந்திர குப்தனுடைய ஆட்சிமுறை, அவனது வீரச் செயல்கள் முதலானவைகள் விவரிக்கப்பட்டுள்ளன. வ.வே.சு ஐயர் புதுச்சேரியில் வாழ்ந்த காலத்தில் வடித்த 'நெப்போலியன்' என்னும் நூலின் படிகள் பிரிட்டிஷ் அரசால் பறிமுதல் செய்யப் பட்ட செயல், வரலாற்றில் ஏற்பட்ட ஒரு வடு என்பது மட்டு மின்றி அந்நூலின் ஒரு படி கூடக் கிடைக்காதது நமக்குப் பேரிழப்பேயாகும். வ.வே.சு. ஐயர் எழுதிய 'அகஸ்தீன் முனிவரது விண்ணப்பம்', சுப்பிரமணிய சிவாவின் 'ஞானபானு' பத்திரிகை யிலும் அவரது 'பிரயோக இலக்கணம்' என்னும் தொடர் வித்து வான் பங்காரு பத்தர் புதுச்சேரியிலிருந்து வெளியிட்ட 'கலைம கள்' இதழிலும் தொடர்ந்து வெளிவந்தன என்றாலும் இவை நூலாக வெளிவரவில்லை. சில குமரிமலர் இதழில் அவரது நூற் றாண்டு நினைவாக 1981இல் மறு வெளியீடாக அச்சாயின.

A History of India எனும் நூலை அவர் மாணவர் நோட்டுப் புத்தகங்களில் எழுதி வந்தார். அதை அவர் வெளியிடமுடியாதபடி கையெழுத்துப் பிரதி காணாமல் போய்விட்டது வருந்துதற் குரியது.

வ.வே.சு. ஐயர் கம்பன் கவிதைகளை ஆய்ந்து எழுதிய பின் னர், அவர் குறுந்தொகையையும் கலித்தொகையையும் ஆங்கிலத் தில் மொழிபெயர்த்தார். சங்க இலக்கிய எட்டுத் தொகையில் கலித்தொகையிலும் குறுந்தொகையிலும் நாடகப் பாங்கு நயமு றத்தோன்றுவதனால் இத்தன்மை அவரைக் கவர்ந்திழுத்திருக்க வேண்டும்; அதனால் அவர் மொழிபெயர்த்திருக்க வேண்டும். அம்மொழிபெயர்ப்பு நமக்குக் கிடைக்காதது நமது மற்றொரு பேரிழப்பேயாகும்.

வ.வே.சு. ஐயர் தம் நண்பர் ஒருவருக்கு 1920இல் எழுதிய கடிதம் ஒன்றில் "தொமிஸ்தோவின் சரித்திரம் மொழிபெயர்த்துத் தயாராக இருக்கிறது" என்றும், "கோர்னியின் ஸ்மித் அரைவாசி முடிந்திருக்கிறது," என்றும் குறிப்பிட்டுள்ளார்.[1] ஆனால் அவை கிடைக்கவில்லை.

பத்து மொழிகள் அறிந்தவர் வ.வே.சு. ஐயர். அவர் நண்பர் களுடன் தமிழிலேயே பேசுவார். பேசும்போது இடையிடையே ஆங்கிலச் சொற்களைக் கலக்கமாட்டார், பேச்சில் அவர் கம்பன்,

---

[1] வ.வே.சு. ஐயர்: அரசியல் - இலக்கியப் பணிகள், பெ.சு. மணி (மேற்கோள்).

காளிதாசன், வள்ளுவர், வான்மீகி, ஹோமர், விர்கில், ஷேக்ஸ்பி யர், தாந்தே முதலிய மகாகவிகளினின்றும் மேற்கோள் காட்டு வார் என்ற செய்தியை வெ. சாமிநாதசர்மா குறிப்பிடுகிறார்.

அவரது அரசியல் கட்டுரைகள், மொழிபெயர்ப்பு நூல்கள், சிறுகதைப் படைப்புகள், திருக்குறள் ஆங்கிலப் பதிப்பு, கம்பரா மாயணப் பாலகாண்டப் பதப்பிரிவுப் பதிப்பு, கம்பராமாயண ரசனை, காவிய உத்தியானம், கவிதை முதலான ஆய்வுக் கட்டுரை கள் Kamba Ramayana - A Study முதலான அவரது இலக்கியச் சுடர் கள் பற்றியும் ஒரு பருந்து நோக்குப் பார்த்து வ.வே.சு. ஐயரது இலக்கியத் தொண்டைக் கண்ணுற முனையும் நூலே இது.

வ.வே.சுவின் இலக்கியப் படையல்கள்:

புதுவையிலிருந்து வெளியானவை

1. திருக்குறள் - ஆங்கில மொழிபெயர்ப்பு
2. மங்கையர்க்கரசியின் காதல் முதலிய கதைகள் - தமிழ்
3. சந்திரகுப்த சக்கரவர்த்தியின் சரித்திரம் - தமிழ்
4. புக்கர், வாஷிங்டன் - தமிழ்
5. தன்னம்பிக்கை - எமர்சன் எழுதிய நூலின் மொழிபெயர்ப்பு
6. நெப்போலியன் - தமிழ் (பறிமுதலான நூல்)
7. கம்பராமாயணம் பால காண்டம் - பதம் பிரித்த பதிப்பு

பாரத்வாஜ ஆசிரமத்திலிருந்து எழுதியவை:

1. குருகோவிந்த சிங்கன் - தமிழ்
2. பாலபாரதி - தமிழ் மாத இதழ்

பெல்லாரி சிறையில் எழுதிப் பின்னர் டெல்லித் தமிழ்ச் சங் கத்தினரும், அடுத்து பாரதீய வித்யாபவனும் வெளியிட்டது:

KAMBARAMAYANA - A STUDY எனும் ஆங்கில மொழி ஆய்வு நூலுடன் "கம்பராமாயண ரசனை", கவிதை முதலான தமிழ் வெளியீடுகள்.

# 3. "நோட்டுப்புத்தக இலக்கியம்" 'லண்டன் டைரி'

"குறிப்பெழுதும் மனிதன் குறிக்கோளோடு வாழ்வான்" என்கிறார் பிளாட்டோ. ஒருவருடைய உள்ளத்தில் கருத்துக்கள் எப்பொழுது வேண்டுமானாலும் தோன்றலாம். அவற்றை எப்பொழுதுமே உள்ளத்தில் பதிய வைக்கவும் முடியாது. ஒதுக்கி வைக்கவும் முடியாது. பதுக்கி வைக்கவும் முடியாது. ஏனென்றால் மனித மனம் விந்தையானது. மனிதன் அன்றாடம் ஆயிரக்கணக்கான எண்ணச் சூழலில் வாழ்பவன். அவன் நினைப்பவற்றையெல்லாம் மூளையானது தன்னுடைய அணுக்களில் பதிய வைத்துக் கொண்டாலும் திரும்ப நினைவிர்குக் கொணர முடியாமல் போய்விடும். ஆனால் கருத்துக்களையும் எண்ணங்களையும், தான் கையாளும் குறிப்புப் புத்தகத்தில் ஒதுக்கலாம், பதிக்கலாம், பதுக்கலாம்.

வ.வே.சு. ஐயர் தம்முடைய 'நோட்டுப் புத்தகத்தில்' தாம் நினைத்த் நினைப்புகளை எல்லாம் குறித்து வைத்துக் கொண்டு உள்ளார். பிறர் பார்த்தாலும் அறியும் வண்ணம் சில குறிப்புகளை எழுதியிருக்கிறார். சில குறிப்புகள் மற்றவர்க்குப் புரியக்கூடாது என்று பதுக்கியும் வைத்து இருக்கிறார். அவர் பிரிட்டிஷாரால் எப்பொழுதும் வேவு பார்க்கப்பட்டு வந்தவர். எனவே சங்கேதக் குறியீடுகளால் சிலவற்றைக் குறித்துள்ளார். பல இடங்களில் சுருக்கெழுத்தையும் பயன்படுத்தியுள்ளார். நமக்குக் கிடைத்திருக்கிற அவரது "நோட்டுபுத்தக"க் குறிப்புகள் ஒரு "பலபொருள் அங்காடி"யைப் போல் தோன்றுகிறது. ஏறக்குறைய எழுபது பழமொழிகளைக் குறித்து வைத்திருக்கிறார்.

"தானாய் வரும் ஸ்ரீதேவியைக் காலால் தட்டினானாம்", "முற்பகல் செய்தால் பிற்பகல் விளையும்", "கஷ்டத்துக்குத் தக்க பலன் கிட்டும்", "பொறுமை கடலினும் பெரிது" முதலான அன்றாடப் பழக்கத்தில் உள்ள பழமொழிகளையும் குறித்து வைத்துள்ளார். இவற்றைத் தாம் தொடங்க இருந்த பத்திரிகைகளுக்குத் தக்கபடி மேற்கோள் காட்டக் குறித்து வைத்திருக்கலாம். அல்லது தம் நண்பர்களிடையே தாம் எழுதிய பழமொழிகளைக் காட்டி மகிழ்ந்திருக்கலாம்.

தண்டியலங்காரம் எனும் இலக்கண நூல் கூறும் அணிவகைகளை விரிவாக எழுதி வைத்துள்ளார். உருவக அணி பற்றி ஒரு கட்டுரையே அவரது நோட்டுப் புத்தகத்தில் காணப்படுகிறது.

அவர் 'காவ்ய தர்சனா' என்பது இதனால் தெளிவாகிறது. அவர் அணி இலக்கணம் கற்க ஆவல் கொண்டு இருந்தார் என்பதை இக் குறிப்புகள் நமக்குக் காட்டுகின்றன. பரியாயம் பற்றி எழுதுகை யில் சாமர்த்தியமாக அறிவிக்கும் வார்த்தை என்று குறிப்பெழுதி யுள்ளார். இவ்வணிக் குறிப்புகள் அவர் கம்பராமாயண ஆய்வு எழுதுகையில் மிகவும் பயன்பட்டிருக்கின்றன. 'காவிய உத்தியா னக்' கட்டுரையில் அக்குறிப்புகளை விவரித்துள்ளார்.

அவரது இலண்டன் வாழ்க்கைச் சூழ்நிலையையும் ஏனைய இடத்து வாழ்க்கை முறையையும் எண்ணிப் பார்த்தால், அவருக்கு இவற்றை எல்லாம் குறித்து வைக்க எங்கே நேரம் கிடைத்தது என்றுதான் நினைக்கத் தோன்றுகிறது. என்றாலும், இலக்கியப் பசி, நேரத்தைக் கண்டுபிடிக்கும்; எழுதவைக்கும் என்றுதான் கூறத் தோன்றுகிறது.

வேறொரு பக்கத்தில் சோழர் வம்ச சரித்திரக் குறிப்புகளைக் குறிப்பிட்டு, திருமந்திரவோலை எழுதுவார்; திருமந்திரவோலை நாயகம் முதலான சொற்களுக்கு ஈடான ஆங்கிலச் சொற்களைக் கண்டு எழுதியுள்ளார். சோழர் நாட்டுக் "குடவோலை" நடப்பு முறையை விவரித்துள்ளார்.

சில பக்கங்களில் கம்பராமாயணப் பாடல்கள் அங்கொன் றும், இங்கொன்றுமாகக் காணப்படுகின்றன.

ஒருசில பக்கங்களில் செய்யுள் வகுப்பு முறை பற்றியும் தொகைநிலை, தொகாநிலை முதலிய இலக்கண விதிமுறை களையும் இயம்பியுள்ளார். பல பக்கங்களில் தாம் வாங்கிய பொருள்களுக்கான கணக்குகளை எழுதி வைத்துள்ளார்.

பெரும்பாலான பக்கங்கள் சுருக்கெழுத்துக்களினாலேயே நிரப்பப்பட்டுள்ளன. இடையிடையே, 'உண்ணற்க கள்ளை; உணின் உண்க, சான்றோரால் எண்ணப்பட வேண்டாதார்' (922) என்பது போன்ற குறட்பாக்கள் எழுதப்பட்டுள்ளன.

இவ்வாறு வ.வே.சு. ஐயர் அவர்கள் வகுத்து எழுதி உள்ள அந்தத் தொகுப்பு 'நோட்டுப்புத்தகம்' காணும் கண்களுக்கு ஒரு நல்தகவல் விருந்தாகும். அப்பக்கங்களில் எழுதியிருப்பவற்றை முற்றவும் அறிய முடியாவிடினும் அவரது எண்ணத்தின் வடிகால் களைக் கண்டு வியக்காமல் இருக்க முடியவில்லை.[1]

---

[1] நோட்டுப் புத்தகக் குறிப்புகள் திருவானைக்காவல் வ.வே.சு. ஐயர் வீட்டில் உள்ளன. அவற்றை அவர்தம் மகனார், டாக்டர் கிருஷ்ண மூர்த்தி இந்நூலாசிரியரிடம் காண்பித்தார்.

## 'லண்டன் டைரி'

'லண்டன் டைரி'யில் பல்வேறு பக்கங்களை ஆங்கிலச் சுருக்கெழுத்தால் நிரப்பிய வ.வே.சு. ஐயர், சில பக்கங்களில் சித்தர் பாடல்களைக் குறித்திருக்கிறார். கம்பன் கவிதைகளை நினைந்து எழுதியுள்ளார். அவராக, சில பாக்களைப் புனைந்த கவிஞராகச் சில பக்கங்களில் மிளிர்கிறார்.

*"வாக்குக்கும் மனதுக்கு மெட்டாத*
*பரஞ்சோதியென்ற சச்சிதானந்தம்*
*நோக்கற் கரியவிவ் பிரபஞ்சந்தன்னை*
*தன் முடிவற்ற மாயையால் செய்ததடி*
*உலகத்திலுள்ள கிரிகளுக்கு மேலே*
*உன்னத கிரியா மிமய கிரி*
*புலன்களை யடக்கி யெம் மலைச்சாரலில்*
*தவ ஞ் செய்யும் மகரிஷிகளைப் பாடுங்கோடி*
*சிந்துகோதாவரி காவேரி செல்வக்*
*கங்கை கிருஷ்ணா பிரம புத்திரா*
*நந்த கோபாலன்தன் நன்னதி யமுனை*
*புண்ணிய நதிகளைப் பாடுங்கோடி"*

மாணிக்கவாசகர், இராமலிங்க அடிகளார் ஆகிய ஞானிகள் கைகொட்டிக் கும்மியடித்துப் பாடிக் களித்தது போன்று, தம் தாய் நாட்டை எண்ணி, வ.வே.சு.ஐயர் எழுதிய பாடல் சுவைத்து இன்புறத் தக்கது. இக்கவிதை 'லண்டன் டைரி'யில் 1908இல் எழுதப் பெற்றது.

அவர் தமது புதுச்சேரி வாழ்நாளில் 'லண்டன் டைரி'யினைத் தொடர்கிறார். அதில் எழுதியுள்ள ஒரு கவிதை:

*'நீலக்கடல் நடுவே நித்திலம் போல*
*நீ துள்ளி*
*கோலமுடன் ஆடியதை*
*அறி யாயோ மழைத்துளியே*
*எம்பெருமான் பின்பிறந்தார் இழைப்பரோ பிழையம்மா*
*என்றழுத குகன்கண் நீருகுத்ததுவு*
*மறிவாயோ மழைத்துளியே'*

கீழே விழும் மழைத்துளியைக் கம்பனின் வரியைக் கொண்டு குகன் உகுத்த அன்புப் பாசத் துளியோடு ஒப்பிடுகின்றார். (கம். இராமா. அயோத்தியா காண்டம், கங்கைகாண் படலம்: 130.)

# 4. ‘லண்டன் கடிதம்’

பாரிஸ்டர் கல்வி பயிலவும், பசுபதி ஐயரின் கொடுக்கல் வாங்கல் தொழிலை வளர்க்கவும் பங்கு வாணிபம் பற்றி நுணுக்கங்களை அறியவும் ரங்கூனிலிருந்து லண்டனுக்கு வந்த வ.வே.சு. ஐயரின் வாழ்க்கையில் சாவர்க்கரின் சந்திப்பு திருப்பத்தையும், மாற்றத்தையும் உண்டாக்கக் கண்டோம். இந்திய உணவை நாடி ‘இந்திய விடுதி’யில் சேர்ந்த அவர் விடுதலை இயக்கத்தின் மிதவாதிகளின் தொடர்பைப் பெற்று, இந்தியத் தாயைப் பிரிட்டிஷாரிடமிருந்து விடுவிக்க முனைந்து செயல்பட்டார். எந்த ஒரு சம்பவமும் எழுத்தில் இடம் பெற்றதால்தான் அதனை எண்ணற்றோர் படித்தறிய முடியும். எனவே வ.வே.சு.-வும் புகழ்பெற்ற “லண்டன் கடித” இலக்கியத்தைப் படைத்து “*இந்தியா*”வின் மூலம் கணக்கற்ற மக்களுக்குத் தேச பக்தியையும் விடுதலை உணர்வையும் ஊட்டி வந்தார்.

இந்திய விடுதியில் சாவர்க்கரும், வ.வே.சு.ஐயரும் நடத்தி வந்த “சுதந்திர இந்திய சங்க” நடவடிக்கைகளில் செய்தித்தாள் பிரசாரம் ஒன்றாகும். இங்கிலாந்திலுள்ள செய்தித்தாள்களுக்கு மடல் எழுதுவது, அயல்நாட்டுச் செய்தித் தாள்களில் இலண்டன் நகரச் செய்திகளை வெளியிடுவது, இந்தியாவில் வெளியாகும் செய்தித் தாள்களில் விடுதலை இயக்க உணர்வு பற்றிச் சுட்டி உணர்த்துவது, மற்றும் இந்தியாவின் மீது பரிவு காட்டும் உலக நாடுகளின் அனுதாபிகளுடன் கடிதத் தொடர்பு கொண்டிருப்பது ஆகியவை “செய்தித்தாள் பிரச்சாரத்தினுள்” அடங்கும் கோட்பாடுகள் ஆகும்.

வாரந்தோறும் ‘லண்டன் கடிதம்’ தேசபக்தியை வளர்த்தது. தூங்கிக்கிடந்த சராசரி இந்தியனை இக்கட்டுரைத் தொடர் உசுப்பி எழுப்பியது. இந்தியாவின் வீர வரலாற்றை இக்கட்டுரைத் தொடர் எதிரொலித்தது. பிரிட்டிஷாரின் ஆட்சி முறைகேடுகளை அவ்வப்போது அம்பலப்படுத்தி வந்தது. வ.வே.சு. ஐயர் இக் கட்டுரைகளை வரலாற்று ஓவியமாகத் தீட்டியதுடன் தமது கருத்துக்களையும் இடையிடையே குறிப்பிட்டுப் படிப்போர் மனத்தில் அவை பதியும் வண்ணம் எழுதி வந்தார்.

## வீர வரலாற்றுத் தொடர்கள்:

### இந்தியா

வ.வே.சு. ஐயர் கட்டுரைகளைத் தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதி, அவற்றைச் செய்தித் தாள்களுக்கு அனுப்பும் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். தேசியக் கவி சுப்பிரமணிய பாரதியாரை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்த 'இந்தியா' என்னும் வார இதழ் மடலில் அவர் பல உணர்ச்சி கொப்பளிக்கும் செய்தி விவரங்களைத் தீட்டிப் படிப்போருக்கு விழிப்புணர்வை நல்கி வந்தார்.

அவர் "இந்தியா"வில் "கரிபால்டி வரலாறு", "மாஜினி வரலாறு" ஆகியவற்றையும் தொடர்ந்து எழுதி வந்தார். அவர் மதன்லால் திங்க்ரா போன்றவர்களைப் பற்றி ஆங்கில நாளேடுகளில் வந்த செய்திகளைக் கத்தரித்து எடுத்து 'இந்தியா'விற்கு அனுப்பினார். ரூஸோ (Ruso)வின் "சமுதாய ஒப்பந்தம்" என்னும் நூலையும், சாவர்க்கரின் '1857' அல்லது 'எரிமலை' என்றும் புரட்சி நூலையும் 'இந்தியா'விற்கு அனுப்பி வைத்தார்.

### மதன்லால் திங்க்ரா செய்தி

மதன்லால் திங்க்ரா, கர்ஸன் வைலியை இலண்டனில் சுட்டுக் கொன்ற தீரச்செயல்களைப் பற்றிய எல்லாத் தகவல்களும் 'இந்தியா'வில் வெளியாயின. வ.வே.சு. வடித்து வழங்கிய வீர மிக்க வரிகளை, பாரதியாரின் 'இந்தியா' எதிரொலித்து வந்தது:

"தேசபந்து!

லண்டன் நகரத்தில் சர் வில்லியம் கர்ஸன் வைலியையும் அவனைக்காக்க வந்த டாக்டர் கால்காவையும் சுட்டுக்கொன்ற, மதன்லால் திங்க்ரா என்னும் பஞ்சாப் நாட்டு அமிர்தசரஸ்வாசியான மாணவனை ஆகஸ்ட் மாதம் 17ஆம் தேதி செவ்வாய்க் கிழமை காலை 9 மணிக்குப் பெண்மேன் ஜெயிலில் தூக்கிலிடப் பட்டு பரலோகப் பிராப்தியாகிவிட்டான்.

"அவன் பேரில் மரண தண்டனை விதித்த பிறகே அநேக இந்துக்கள் அவனைப் போய்ப் பார்க்க முயன்றார்கள். இரண்டு பேர்களுக்குத்தான் உத்திரவு கிடைத்தது. அந்தத் தண்டனை நெருங்கிக் கொண்டு வந்த போதிலும், தன்னுடைய முடிவைப் பற்றிக் கிஞ்சித்தும் கிலேசிக்காமல் தன்னுடைய நாட்டின் நிலைமையைப் பற்றியேதான் பேசிக்கொண்டிருந்தான்.

"ஒரே ஒரு மனுதான் அவன் ராஜாங்கத்தாரிடம் சொல்லிக் கொண்டது. அதாவது தன்னுடைய சரீரத்தைக் கிறிஸ்தவரைப் போல் புதைக்கலாகாது; ஆனால் அக்கினியிலிட வேண்டுமென் பதே. இருபது இந்தியர்களும் அவ்விதமான மனு ஒன்றை அனுப்பியிருந்தார்கள். ஆனால் ராஜாங்கம் அந்த இரண்டு மனுக்க ளுக்கும் பதில் கூட அனுப்பவில்லை. சரீரத்தைப் புதைத்து விட்ட தாகத்தான் வதந்தி.

"திங்க்ராவைத் தூக்கிலிட்ட அன்றைக்கு ஐர்லாந்தில் டப் ளின் நகருக்கு அடுத்தாற் போலுள்ள ஒரு சிறிய பட்டணத்தில் சுவர்களில் 'தன்னுடைய சுய தேசத்துக்காகத் தன்னுடைய பிராண னைக் கர்வத்துடனே கொடுத்த திங்க்ராவை ஐர்லாந்து புகழ்ச்சி செய்து மதிக்கிறது' என்று எழுதிய பெரிய காகிதங்கள் ஒட்டப்பட் டிருந்தனவாம்.

"திங்க்ராவைப் பற்றிச் சில சங்கதிகள் வெளிவந்திருக்கின் றன. ஒருநாள் அவனும் அவனுடைய கூட்டாளியும் ஒரு கடிதம் எழுதிவிட்டு, அதில் ரத்தத்தினால் கையொப்பம் வைக்கவேண்டு மென்று விளையாட்டாகப் பேசிக் கொண்டிருக்கும் போது, திங்க்ரா உடனே கத்தியினால் தன் விரலை அரிந்து ரத்தத்தை எடுத் துக்கொடுத்தானாம்.

"ஒரு நாள் அவனும் அவனுடைய சிநேகிதர்களும் பேசிக் கொண்டிருந்த பொழுது ஒருவன் ஜப்பானியர்களுடைய தீரத்தைப் பற்றி உற்சாகத்துடன் பேசினான். உடனே திங்க்ரா, 'ஜப்பானியர் கள் என்ன உயர்த்தி! நமது ஹிந்துக்கள் அதற்கு மேலான தைரியத் தையும் வீரத்தையும் சூரத்தையும் காட்டுவார்கள்' என்றான்.

"ஹிந்துக்களுடைய தைரியத்தில் அவனுக்கு அபார நம்பிக் கையிருப்பதுடன் அதற்கு மிஞ்சின தைரியம் கிடையாது என்பது அவனுடைய பூரணமான நம்பிக்கை. ஆகையால் மற்றெந்த ஜாதி யாருடைய சௌரியத்தை (வீரத்தை)ப் பற்றியாவது அளவுக்கு மிஞ்சி அவனுக்கெதிரில் புகழ்ந்து விட்டால், அவனுக்கு எரிச்சல் வந்துவிடும். ஆகையால் ஹிந்துக்கள் ஜப்பானியருக்குத் தைரியத் தில் எவ்விதத்திலும் தாழ்ந்தவரில்லை என்று கட்சியாடினான். அப்பொழுது மற்றொரு சிநேகிதன், 'ஜப்பானியர்கள் பீரங்கிக ளுக்கு எதிரில் சளைக்காமல் எதிர்த்துச் சென்றார்கள். எதிரிகளின் குண்டுகளை மார்பில் ஏற்றார்கள். பீரங்கி வேண்டாம். சூலம் வேண்டாம், இந்தக் குண்டூசியை உன் கையில் குத்துகிறேன். உன் னுடைய தைரியத்தைப் பார்க்கலாம்' என்றான்.

உடனே திங்க்ரா தன் கையை மேஜை மீது வைத்து குண்டூசி யைக் குத்தச் சொன்னான். அவன் சிநேகிதநும் அந்தக் குண்டூ சியை முற்றிலும் ஏற்றினான். இரத்தம் பெருகிற்று. ஆனால் திங்க் ராவின் கை ஆடவில்லை. அவன் முகம் சிணுங்கவில்லை"

'இந்தியா' வாரப்பத்திரிகை,
புதுச்சேரி - 1.9.1909

இதில் "ஒரு நாள் அவனும் அவனது கூட்டாளியும்...." என்ற பகுதியில் 'திங்க்ராவை (அவனது கூட்டாளியான) டாக்டர். டி.எஸ்.எஸ். ராஜன்தான் ரத்தத்தினால் கையொப்பம் வைக்க வேண்டுமென்று குறிப்பிட்டார். திங்க்ராவும் நொடிப்பொழுதில் தன் விரலைக் கத்தியினால் ரத்தத்தைக் கொடுத்தான்."

இக்கடிதத்தில் மற்றொரு பத்தியில், 'அப்பொழுது மற் றொரு சிநேகிதன் என்று குறிப்பிட்டிருப்பது வ.வே.சு. ஐயரைத் தான்' என்று எழுதியுள்ளார்.

வ.வே.சு.ஐயர், டி.எஸ்.எஸ். இராஜன் திங்க்ரா மூவரும் அறையில் அமர்ந்து தீவிரமாகப் பேசிக்கொண்டிருக்கும்போது திங்க்ரா தனது அஞ்சாநெஞ்சினை இவ்வாறு வெளிப்படுத்தியிருக் கிறான். இச்செய்தியினை வ.வே.சு. ஐயர் தமது 'லண்டன் கடித'த்தில் குறிப்பிட்டு 'இந்தியா'வில் வெளியிடச் செய்துள்ளார்.

புலவர் அரசு எழுதிய நூலில் 'ஒரு முறை அவர்தம் உள்ளங் கையை மேசையின் மேல் வைத்துக் கொண்டு ஊசியை ஏற்றச் சொன்னார். ஐயரே அவ்வேலையைச் செய்தார். ஊசி சிறிது சிறி தாக உள்ளங் கையில் பாய்ந்து மேசையிலும் ஊடுருவியது. பிறகு மெதுவாக ஊசியை எடுத்துவிட்டார். கையில் இரத்தம் பீறிட்டது. எனினும் திங்க்ராவின் முகம் சுருங்கவில்லை. உடல் துடிக்க வில்லை'[2] என்று குறித்துள்ளார்.

ஆனாலும் "இந்தியா"வின் ஆசிரியர் பாரதியார் கொள்கை அளவில் மிதவாதி, தீவிரவாதத்தை விரும்பாதவர். திங்க்ராவின் வழக்கு மன்றக் கட்டுரைகளையும், அயல்நாட்டுச் செய்தியாளர்

---

[1] குமரி மலர்: மறுபடியும் இதனை வெளியிட்டது

[2] வ.வே. சுப்பிரமணிய ஐயர்; புலவர் அரசு, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, பக்கம் 32 (1951).

களின் கட்டுரைகளையும் கனல் கொப்பளிக்க வ.வே.சு. ஐயர் எழுதி அனுப்பியதைப் பத்திரிகை உரிமையாளர் மண்டயம் சீனி வாசாச்சாரியார் ஏற்றுக்கொண்டாலும் பாரதியார் அத்தீவிரத் தன் மையை முழுவதுமாக ஒப்புக் கொள்ளவில்லை.

திங்க்ராவின் சம்பவம் பற்றிய வ.வே.சு.-வின் தீவிரமான இலண்டன் கடிதக் கட்டுரைகள், 'இந்தியா'வின் உரிமையாளரான மண்டயம் சீனிவாசாச்சாரியாருக்கும், இதழின் பொறுப்பாசிரியர் மகாகவி பாரதியாருக்கும் கருத்து வேறுபாடுகளை உண்டாக்கின.

திங்க்ராவின் தூக்குத் தண்டனையை அடுத்த சில நாட்களில் கிளாஸ்கோவில் இருந்த பருத்திச் சாலையில் தீ விபத்து ஏற்பட்டு 2½ இலட்சம் பவுன் மதிப்புள்ள பொருட்கள் இழப்புற்றன. இது பற்றி வ.வே.சு. நீண்டதொரு கட்டுரையின் ஒரு பகுதியாக "ஸ்ரீமான் மதன்லால் திங்க்ரா தமது சரீரத்தைத் தகனம் செய்யும் படிக் கேட்டார். அதிகாரிகள் இதை ஏதோ காரணத்திற்காக மறுத் துவிட்டார்கள். இந்தத் திவ்ய பாரதப்புத்திரனின் சரீரத்தை நல்ல பரிசுத்தமான ஹவிசாக இந்துக்கள் வேத சாஸ்திர வழக்கப்படி அமுது செய்ய அக்னி பகவான் சித்தமாயிருந்தார்; ஆனால் அது கிடைக்கவில்லை; அதற்காகக் கோபம் கொண்ட அக்னி பகவான் கிளாஸ்கோ பருத்திச் சாலையில் புகுந்து 2½ இலட்சம் பவுன் பெறுமான சாமான்களைத் தீண்டத் திருவுள்ளம் பற்றிவிட்டார். அதாவது அவர், மதிப்பில் ஸ்ரீமான் திங்க்ராவின் திவ்ய சரீரம் 2½ லட்சம் பவுன் பெறுமானது என்று உலகோர் அறிந்துக் கொள்ள லாமே"

இங்கிலாந்தில் ஏற்பட்ட பெரும் தீ விபத்தைக் குறித்துத் திங்க்ராவின் சம்பவத்துடன் தொடர்பு படுத்தி, நம் இந்திய மக்கள் துள்ளி மகிழ்வதைப் பாரதியார் ஒப்புக் கொள்ளவில்லை. தொடர்ந்து வந்த 'இந்தியா'வில், அவர் எழுதிய தலையங்கக் குறிப்பில் அவரது உள்ளக்கிடக்கையை நாம் அறிய முடிகிறது:

"சென்ற வாரத்தில் நமது நிருபர் ஒருவர் ஸ்ரீமான் மதன்லால் திங்க்ரா விஷயமாய் எழுதியிருந்தார். அதை நாம் முற்றிலும் அங் கீகரிக்கவில்லை. அதில் ஸ்ரீமான் திங்க்ராவின் உயிர் ஏதோ 2½ லட்சம் பவுன் என்று ஒரு மதிப்பாய்க் கூறியிருக்கிறார். மேலும் கிளாஸ்கோ பருத்திச் சாலை தீப்பிடித்ததைப் பற்றிச் சந்தோஷப் படுவது போல் எழுதியிருக்கிறார்.

"கிளாஸ்கோவில் பருத்திச் சாலையின், நெருப்பு பற்றி அது நஷ்டம் அடைந்து விட்டால் திங்க்ரா உயிர்த்தெழுந்து விட்டாரா?"

இவ்வாறு கட்டுரை ஆசிரியரின் கருத்தை வெளியிட்டுப் பத்திரிக்கையின் பதிப்பாசிரியர், தம் கருத்தை வெளியிடுவதும் இயல்பு. இலண்டனிலிருந்து வ.வே.சு. ஐயர் திங்க்ராவின் இழப்பைப் பெரிதாக எண்ணிப் பிரிட்டிஷாருடன் கொண்டிருந்த பகையைப் பாராட்டித் தீவிரவாதமுறையில் எழுதினார். பாரதியாரோ மிதவாதக் கொள்கையுடன் மறுவாரம் பதில் அளித்தார்.

1909 ஆம் ஆண்டில் 'இந்தியா'வில் வெளியான மற்றொரு 'லண்டன் கடிதத்தில்' வ.வே.சு. ஐயர் வடித்துள்ள மற்றொரு மடலின் பகுதிகளைப் பார்க்கலாம். வீர இலக்கியம் படைக்க முனைந்த வ.வே.சு.ஐயர், தம் எழுத்துக்களால் எழுச்சியை உண்டாக்க முடியும் என்பதை உணர்ந்தவர். அவர் ஸ்பானிஷ் நாடு செய்த கொடுமைச் செயலைப் பற்றி எழுதியுள்ள இப்பகுதியைப் பார்ப்போம்.

"ஸ்பானிய தேசத்து ராஜாங்கம் பிரான்சிஸ்கோ பெர்ரேரா என்னும் மகானைக் கொலை செய்துவிட்டது. ஐரோப்பா முழுவதும் ஏன் அமெரிக்காவும் கூட பொது ஜனங்கள் ஆவேசத்துடன் தங்கள் கோபத்தைக் காட்ட ஆரம்பித்துவிட்டார்கள்.

"ஸ்பானிய அரசாங்கம் ஒரு தனிமனிதனுக்கு மரண தண்டனை விதித்ததனால் மற்ற தேசங்களின் ஜனங்களுக்கு என்ன என்னும் கேள்வி சகஜமாகப் பிறக்கக் கூடும். ஆனால் பெர்ரேரா என்பவன் சாதாரணமான மனிதன் அல்ல. சுதேசாபிமானம் நிறைந்த மகான். அவன் ஏழை ஜனங்களுடைய கஷ்டத்திற்காகக் கண்ணீர் விட்டழுத கிருபா மூர்த்தி.

"ஜனங்களுடைய சுதந்திரங்களைக் காலால் மிதித்து, அவர்களை நித்திய தரித்திரர்களாய்ச் செய்ய உண்டான வழிகளை எல்லாம் தேடிக்கொண்டு, அவர்களுக்குக் கல்வி என்னும் நாமத்தையே காட்டாமலும் அப்படியே காட்டினாலும் அடிமைத்தனத்தை விருத்தி செய்யக்கூடிய கல்வியையே புகட்டியும் வந்த ஸ்பானிய ராஜாங்கத்தைச் சீர்திருத்த முயன்ற ராஜதந்திரி பெர்ரேரா, சிறுவயது முதல் தன்னுடைய சுதேசிகளின் நிலைமையை உயர்த்த வேண்டுமென்கிற ஒரே எண்ணத்துடன் இந்த மனிதன் உழைத்து வந்திருக்கிறான்.

“இவனுடைய பரோபகார சிந்தையையும் தன் நலம் பாரா மையையும் அனுபோகத்தினால் அறிந்த இவனுடைய சிநேகிதன் ஒருவன், தான் இறக்கும் போது தன்னுடைய சொத்து முழுவதையும் இவன் பேரில் எழுதி வைத்துவிட்டு இறந்தான். உடனே பெர்ரேரா அந்தச் செல்வத்தைக் கொண்டு ஸ்பெயின் முழுவதிலும் தருமப் பள்ளிக் கூடங்கள் ஏற்படுத்தித் தேசத்துக்கு ஞானதானஞ் செய்ய ஆரம்பித்தான். இதுதான் இவன் செய்த பெருங்குற்றம்.

“அக்கிரமம் வழக்கமாகச் செய்கிறவனுக்கு யோக்கியனைக் கண்டால் எப்பொழுதும் மரண வைரம். ஆகவே ஸ்பானிய ராஜாங்கம் அவனைக் கொல்ல எப்பொழுது நேரம் அகப்படு மென்று பார்த்துக் கொண்டிருந்தது. பார்சிலோனாவில் ராஜாங்கத் தினுடைய அக்கிரமமாக மூர் யுத்தத்திற்கு விரோதமாக ஜனங்கள் கலகம் செய்யவே அதுதான் சமயம் என்று பெர்ரேராவைப் பிடித்து விட்டது. கோர்ட் மார்ஷல் மூலமாக அவனை விசாரிக்க உத்தரவிட்டுவிட்டது. அவனுக்குச் சாட்சி விசாரிக்க உத்தரவு கொடுக்கவில்லை. தன்னுடைய வக்கீல் வைத்துக் கொள்ளக்கூட உத்தரவு கொடுக்கவில்லை. பேருக்கு விசாரணையென்று செய்து விட்டு அவனைச் சுட உத்தரவிட்டார்கள். சென்ற புதன்கிழமை காலமே அவனைச் சுட்டாகிவிட்டது. * * * *

“இத்தாலியில் 24 மணி நேரத்துக்கு வேலை நிறுத்த அநேக இடங்களில் நிச்சயித்துவிட்டார்கள். அமெரிக்காவில் புவனோஸ் அயீரெஸ்ஸிலும் வேலையையும் நிறுத்தி ஸ்பானிய சாமான்களை வர்ஜ்ஜனம் செய்ய நிச்சயித்துவிட்டார்கள். ஜீனோவாவிலும் லியோனிலும் போலிஸ் ஜனங்களைத் தாக்கின. பிறகுதான் கூட் டம் கலைந்தது.

“இதற்கெல்லாம் என்ன காரணம்? ஒரே ஒரு காரணந்தான். அதாவது உலகத்தில் பரவி வரும் சுதந்தரமும் ஜன ஐக்கியமுமே.

“இதுவரை ராஜாங்கங்கள் ஒன்றோடொன்று சிநேகம் செய்து கொண்டு தங்களுடைய பிரஜைகளை இம்சித்து வந்தார் கள். இன்னும் இம்சித்து வருகிறார்கள். ஆனால் சென்ற நூறு வரு ஷங்களுக்குள் ஜனங்கள் விழித்துக் கொண்டார்கள். ராஜாங்கங்கள் செய்கிற அக்கிரமங்களைப் பார்த்துக்கொண்டு ஜனங்கள் அதை எதிர்க்கத் தீர்மானித்து விட்டார்கள். இன்னும் பத்து வருஷத்துக்

குள் ஒரு யுத்தம் செய்து கடைசியில் ஜனங்களுடைய கட்சி வெல் லும் என்பதில் தடையில்லை . * * * *

"இதற்கும் ரொம்ப தூரம் போக வேண்டியதில்லை. ஹிந் துஸ்தானத்தில் தேச பக்தர்களைச் சிறை செய்வதும், தேசாந்திர மனுப்பியும், கொலை செய்தும் வருகிற ராஜாங்கம் எந்த முகத்து டன் இதர ராஜாங்கங்களின் அக்கிரமத்தைக் கண்டிப்பது?"

"நம்முடைய ஹிந்துஸ்தானிகள் என்றைக்கு இதை உணர்ந்து சுவராஜ்ஜிய ஸ்தாபனத்திற்கு முயற்சிப்பார்கள்? எப்பொழுது தேசாபிமானத்தின் முன்னிலையில் பிராணன் துச்சம் என்கிற எண் ணத்தைக் கொள்வார்கள்? நம்முடைய ராஜ்யம் ஸ்ரீராமன் ஆண்ட நாடு, ஸ்ரீகண்ணபிரான் விளையாடிய நாடு. அசோகன், விக்கிர மன், போஜன் அளித்த திருநாடு. சோழன், பாண்டியன், சேரன் புரந்தளித்த தாய்த்திருநாடு. * * * *

"நம்முடைய மகா புருஷர்கள் திலகர், சிதம்பரம் பிள்ளை, சுப்பிரமணிய சிவம், அசுவினி குமார தத் இன்னும் எண்ணிறந்த வர்கள் அக்கிரமமாகப் பந்தேகானாவில் அடைக்கப்பட்டிருப்ப தைப் பார்த்தும் சுவராஜ்ய தாகம் வராதா?"

- "இந்தியா", புதுவை[3]
6.11.1909

வீர எழுத்துக்களே ஒரு வீரனின் உள்ளத்திலிருந்து புறப்ப டும். அவையே பல வீரர்களையும் உருவாக்க வல்லவை. இந்தி யாவில் விடுதலை உணர்வு கொப்பளிக்க எண்ணினார் வ.வே.சு.ஐயர். எனவே இவ்வாறு பெர்ரேராவின் கொலையைக் கண்டித்துத் தமது நாட்டு விடுதலை வீரர்களான திலகர் முதலா னோர் சிறையில் அடைபட்டிருப்பதைச் சுட்டிக்காட்டி, 'சுவராஜ்ய தாகம்' வராதா? என்று கேட்டுள்ளார். அவரது விடுதலை வேட்கை இலக்கியம் அதற்குப் பயன்பட்டது என்பதில் ஐய மில்லை.

---

[3] குமரி மலர்: இதழில் மறுபடியும் வெளியிடப்பட்டது.

# 5. 'தேசபக்தன்' இதழில் ஆசிரியர் பணி

## தேசபக்தன் தோற்றம்:

சென்னையில் தேசபக்தன் என்னும் நாளிதழ் 7.12.1907 இல் பிறந்தது. அது அன்னிபெசன்ட் அம்மையாரின் ஆசியோடு, அவர் சீடரான எம். சுப்பராய காமத்தினால் தொடங்கப்பட்டது. அம் மையார் லோகமான்ய திலகரின் உதவியுடன் "ஹோம் ரூல்" (Home Rule) என்னும் இயக்கத்தைத் தொடங்கி, அரசியல் பிரச்சா ரத்திற்காக 'மதராஸ் ஸ்டாண்டர்ட்' என்னும் ஆங்கில நாளிதழை வாங்கி, அதற்கு 'நியூ இந்தியா' என்னும் பெயரைச் சூட்டி வெளி யிட்டார். சுப்பராய காமத்திற்கு அம்மையார் மூவாயிரம் ரூபாய் நன்கொடையாக வழங்க, அதனை அவர் வெளியிடலானார்.

காமத், திலகரின் தொண்டர், பாரதியாரின் நண்பர். அவரே 'சண்டே டைம்ஸ்' என்னும் ஆங்கில வார இதழைப் பின்னர் நடத்தினார். சண்டே டைம்ஸின் மூலம் தேசிய உணர்வை ஊட்டி வந்த அவர், அதில் ஸ்ரீரமண மகரிஷி, ஸ்ரீஅரவிந்தர், ஸ்ரீசீரடி சாயி பாபா ஆகியோரின் போதனைகளைப் பரப்பி வந்தார். "சண்டே டைம்ஸ்"ஸுக்குத் துணையாக, அவர் "இந்துஸ்தான்" என்னும் வாரப்பதிப்பையும் தொடங்கி பாரதியார், வ.வே.சு.ஐயர், ஆகி யோரைப் பற்றிச் சிறப்பு மலர்கள் வெளியிட்டு வந்தார். "நியூ இந் தியா" தொடங்கிய போது நிறுவனத்தினர் பிரிட்டிஷ் அரசுக்கு 20,000 ரூபாய் ஜாமின் கட்டிற்று. ஆனாலும் பிரிட்டிஷ் அரசைத் தம் கட்டுரைகளில் கண்டித்து வந்ததால், ஜாமின் பறிமுதல் ஆயிற்று. இது நடந்த ஆறு திங்கள்களுக்குப் பிறகுதான் தேசபக் தன் தோன்றியது.

வெஸ்லி கல்லூரியில் தமிழாசிரியராகப் பணிபுரிந்த "தமிழ்த்தென்றல்" திரு.வி. கல்யாணசுந்தரனார் 'தேசபக்தனி'ன் ஆசிரியர் ஆனார். அவ்விதழை அச்சிடப் "பிரிட்டிஷ் இந்தியா பிரஸ்" என்னும் அச்சுக்கூடம் அமைந்தது. அச்சுக்கூடம் அமைய குமாரசாமி செட்டியார் துணை நின்றார். இந்த இதழின் செயற் குழுவினர்களாக சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார், டாக்டர் டி.எஸ்.எஸ். இராஜன், வரதராஜுலு நாயுடு, ஈ.வெ. இராமசாமி நாயக்கர், ஆதிநாராயண செட்டியார், ஜார்ஜ் ஜோசப், லார்ட் கோவிந்தாஸ் ஆகியோர் அமைந்தனர்.

பிரிட்டிஷ் அரசின் நிபந்தனையுடன் ஆயிரம் ரூபாய் ஜாமின் செலுத்தித் தேசபக்தன் நடந்து வந்தது. 1919-இல் ஜாலியன் வாலா

பாக் பற்றிய கட்டுரை வெளியிட்டதற்காக, முன் ஜாமினைப் பறி முதல் செய்து, பிரிட்டிஷ் அரசினர், ஆறாயிரம் ரூபாயை ஜாமினா கக் கட்டச் செய்தனர். அழகிய இலக்கியத் தமிழ் நடையில், திரு.வி.க. "தேசபக்தனை" நடத்தி வந்தார்.

புதுச்சேரியில் ஒதுங்கி வாழ்ந்த தேசத் தொண்டர்கள் இந்தியா திரும்ப வேண்டுமென்று "தேசபக்தன்" வற்புறுத்தியது.[1] இது பற்றிய தொடர் விளைவாக 1920 இல் அரசால் யாவருக்கும் பொது மன்னிப்பு ஆணை பிறப்பிக்கப்பட்டது.

பொது மன்னிப்பின்படி வ.வே.சு.ஐயர் பிரிட்டிஷ் இந்தியாவில் காலடி வைத்தார். திருச்சிக்குச் சென்றார். அவர் பதினான்கு ஆண்டுகளுக்கு முன்னர் தம் மைத்துனர் பசுபதி ஐயரின் தூண்டுதலால் இரங்கூன் சென்று, தாய்த் திருநாடு திரும்பியவர். இப்பொழுது புதியதாக ஒன்றைச் செய்ய விரும்பினார். அதற்கு முன் இந்தியா முழுவதும் ஒரு சுற்றுப் பயணத்தை மேற்கொண்டார். 1920 ஆம் ஆண்டில் வட இந்தியப் பயணம் மேற்கொண்டார். புனா, பம்பாய், நாசிக், சபர்மதி, டெல்லி, ஹரித்வார், மதுரா, ஆக்ரா, அயோத்யா, கயா, காசி ஆகிய இடங்களுக்குச் சென்று சுற்றுப்பயணம் செய்தார். அப்போது காசியில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டில் பார்வையாளராகப் பங்கேற்றுப் பல தலைவர்களைச் சந்தித்துத் திரும்பினார்.

காசியில் அவர் இரண்டு தீர்மானங்களை மேற்கொண்டார். முதலாவதாகத் தமிழ் மொழியின் வளர்ச்சிக்குத் தம்மை அர்ப்பணித்துக் கொள்வது; இரண்டாவதாக, சுவாமி சிரத்தானந்தரின் ஆரிய சமாஜ குருகுலம் போலத் தமிழகத்தில் கல்வி நிலையம் ஒன்றைத் துவங்குவது என்பவையாகும்.

'தமிழ்த்தென்றல்' திரு.வி.க. தேசபக்தனை நடத்தி வந்த காலத்திலேயே வ.வே.சு. ஐயர் அதில் கட்டுரைகள் எழுதி வந்தார். கட்டுரைகள் எழுதிவந்த காலத்தில் மாதம் ரூபாய் 30/- அவருக்குச் சன்மானமாக அளிக்கப்பட்டதாக வெ. சாமிநாத சர்மா குறிப்பிடுகிறார்.[2]

தேசபக்தனில் சேர்ந்ததற்குக் காரணம் அவரது தேசப்பற்று ஒன்றேயாம்.

---

[1] திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புகள் 1967

[2] வ.வே.சு. ஐயர்: அரசியல் இலக்கியப் பணிகள், பெ.சு.மணி (மேற்கோள்)

வ.வே.சு. தமது வட இந்தியப் பயணத்தை முடித்து விட்டு 1920 ஆம் ஆண்டு ஜூனில் சென்னை திரும்பினார்.

பத்திரிகை நிர்வாகி காமத்துக்கும், ஆசிரியர் திரு.வி.க.வுக்கும் கருத்து வேறுபாடு ஏற்பட, திரு.வி.க. 22.7.1920 இல் பத்திரிகையை விட்டு வெளியேறினார். காமத், வ.வே.சு.வை அணுகி, ஆசிரியர் பணியை மேற்கொள்ள வேண்டினார். அதன்படி 1920, ஜூலை 31 ஆம் நாள், வ.வே.சு. ஐயர் 150 ரூபாய் ஊதியத்துடன் 'தேசபக்தன்' நாளிதழின் ஆசிரியர் ஆனார்.

## வ.வே.சு பற்றி உதவியாசிரியர்

'தேசபக்தனி'ல் உதவியாசிரியராக விளங்கியவர்களில் ஒருவர் வெ. சாமிநாத சர்மா. வ.வே.சு ஐயர் அலுவலகம் வந்ததும் அது பற்றி உதவி ஆசிரியர்:

"வந்ததும் உதவி ஆசிரியர்களாகிய எங்கள் எல்லோருக்கும் கை கூப்பி வணக்கஞ் செய்தார். நாங்களும் பிரதி வணக்கஞ் செய்தோம். பரலி சு. நெல்லையப்பர் அனைவரையும் அறிமுகப் படுத்தி வைத்தார்."

அவர் ஆசிரியரானதும் முதலில் தலையங்கத்தில் தன்னடக்கத்துடன் குறிப்பிட்ட கருத்துக்களின் ஒரு பகுதி சிறப்பிற்குரியது. "ஸ்ரீமான் கல்யாணசுந்தர முதலியார் அலங்கரித்த பத்திரிகை ஆசிரியர் ஸ்தானத்தில் உட்காருவதற்கு எனக்கு அச்சமாக இருக்கிறது. அவரது சொல்வன்மையும், வீரமும், கலங்காமையும், பாரபட்சமின்மையும், அவசியம் நேர்ந்தபோது காட்டிய நிர்த்தாட்சண்யமின்மையும் பத்திரிகாசிரியர் தொழிலுக்குப் பூஷணங்களாக விளங்கினார். அவர்களுடைய அருங்குணங்களை சிலவேனும் என் வியாசங்களில் தோன்றுமாறு தமிழணங்கு திருவருள் புரிவாளாக".[3]

வ.வே.சு வின் "தேசபக்தன்" காங்கிரசுக்கும், கிலாபத் இயக்கத்திற்கும் அதரவு அளித்து வந்தது. வ.வே.சு.வின் தலையங்கங்களை 'நியூ இந்தியா' மொழி பெயர்த்து வெளியிட்டது. சாவர்க்கரைப் பின்பற்றித் தீவிரவாதியாக விளங்கிய வ.வே.சு. ஐயர்

---

[3] திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புகள் - பக் 287

இலண்டனில் காந்தியாரைச் சந்தித்ததனால், இப்போது காந்தியப் பாதைக்குத் திரும்பி விட்டார்.

வ.வே.சு. ஐயர் 'தேசபக்தனில்' எழுதிய அரசியல் கட்டுரைகள் நமக்கு இப்போது கிடைக்கவில்லை. அது ஒரு பேரிழப்பேயாகும். வெ. சாமிநாத சர்மாவின் நூல்கள்; திரு.வி.க.வின் வாழ்க்கைக் குறிப்புகள், யோகி சுத்தானந்த பாரதியாரின் நூல்களே தேசபக்தன் பற்றிச் சில செய்திகள் தருகின்றன.

"தேச பக்தன்" குழுவில் பணியாற்றிய வெ. சாமிநாதசர்மா குறிப்பிடுவதாவது:

"இந்துக்களும் முஸ்லீம்களும் ஒன்றுபட்டு வாழ வேண்டியவர்கள் என்பதை ஐயர், பல முகாந்திரங்களைக் காட்டி, "தேசபக்தன்" பத்திரிகையில் எழுதி வந்தார். எங்கேனும் ஹிந்து முஸ்லீம் பிணக்கு எனும் புகை எழுந்தால், அதை உடனே சென்று அணைத்து வந்தார்".[4]

ஆங்கில ஆசிரியர்களும், ஏனையோரும் இந்திய வரலாற்றை முறையாக எழுதாமல் தேசிய தலைவர்களைப் பற்றிய வீரச் செய்திகளை இருட்டடிப்புச் செய்வதைக் கண்டு வ.வே.சு. வருந்தினார். இக்குறையை நீக்கச் சிறந்த குறிக்கோளுடன் ஒரு நோட்டுப்புத்தகத்தில் ஆங்கிலத்தில் 'A History of India' என்னும் நூலை எழுதி வந்தார். தாம் எழுதியவற்றை அவ்வப்போது தம் நண்பர்களிடம் படித்துக் காண்பித்து மகிழ்வார். ஆனால் இந்த அரிய கையெழுத்துப் பிரதி எவ்வாறோ அவரது கையைவிட்டு நழுவிப் போய்விட்டது. வ.வே.சு. ஐயர் திருவல்லிக்கேணியில் குடியிருந்தார். அவர் வாழ்ந்த பகுதியில் இஸ்லாமியர்கள் அதிகம் இருந்தனர். அவர்களுடன் அவர் நெருங்கிப் பழகுவார். அவர் ஹிந்து முஸ்லீம் இருசாராரின் நன் மதிப்பைப் பெற்று வந்தார்.

தமது துணையாசிரியர்களுக்கு மொழிபெயர்ப்பில் உதவி புரிவார். அச்சுக்கோர்த்த படிகளைத் திருத்துவார். இடையிடையே தம் நண்பர்களுடன் அளவளாவுவார். அதற்குமிடையே அரசியல் நிலைமையை அலசிப் பேசுவார். 'ஹிந்து' முதலிய ஆங்கில இதழ்களை முற்றும் படிப்பார். முடிந்த போது அரசியல்

[4] நான் கண்ட நால்வர் - வெ. சாமிநாத சர்மா, பிரபஞ்ச ஜோதி பிரசுராலயம், 1959

கூட்டங்களில் முழக்கமிடுவார். அலுவலகத்திலிருந்து திரும்பிய தும் அவர் இராணி மேரி கல்லூரிக்கு எதிரில் நண்பர்களுடன் அமர்ந்து இலக்கியம் பேசிச் சுவைத்தும், சுவைக்க வைத்தும் மகிழ் வார். பல நாட்களில் தம் மகள் சுபத்ராவையும், மகன் கிருஷ்ண மூர்த்தியையும் கடற்கரையின் இயற்கை அழகைக் கண்டு மகிழ அவர் அழைத்து வருவார்.

## தலையங்கம்

*'தேசபக்தனி'*ல் வ.வே.சு. ஐயரின் தலையங்கம் எல்லோரை யும் கவர்ந்தது. அவரது எளிய தமிழ்நடை யாவருக்கும் பிடித்திருந் தது. 'ஸ்ரீலாயட்ஸ் ஜார்ஜும் ஐரோப்பாவும்' எனும் தலையங்கம் 1929 ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டது. அதன் ஒரு பகுதி:

"உலகம் - ஐரோப்பா - உள்ளிட்ட உலகம் அதர்மத்தால் பீடிக்கப்பட்டுப் படுகுழியில் வீழ்ந்திருந்தது. கஜேந்திரன் பிரலா பித்து ஆதிமூலமே என்று கடவுளை நோக்கிக் கூவியது போலக் கூவிக் கொண்டிருந்தது. பயப்படாதே ரக்ஷிக்கிறேன் என்று சொல்ல யாரொருவரையும் காணோம். உலகத்துக்கு அத்தோவப தேசம் செய்த நாடு. புத்தபகவான் மூலமாக அன்பு தேசம் செய்த நாடு. மகாவீரர் மூலமாகக் கொல்லாமையைப் போதித்த நாடு. சகல சாஸ்திரங்களின் மூல தத்துவங்களையும் உள்ளங்கை நெல் லிக்கனியைப் போல் மனிதருக்கு எடுத்துக்காட்டிய நாடு, இன்று எழுந்து காத்தால்தான் உண்டு. ஆனால் பிறரைக் காக்கும் முன் தன்னைக் காத்துக்கொள்ள வேண்டும். தன்னை மகா பரிசுத்தமாக் கிக் கொண்டு தன்னுடைய தர்மாவேசத்தை வளர்த்துக் கொண்டு, பாரத தேவி எழுந்து உலகத்தைச் சம்ரக்ஷிக்க வருகிறாள் என்று மேனாட்டு அறிஞர் நம்பிக்கொண்டு இருக்கிறார்கள். அவர்களது நம்பிக்கையைப் பூர்த்தி செய்வது பாரத புத்திரர்களான நம்மைப் பொறுத்திருக்கிறது. உண்மைப் பாரத புத்திரர்கள் கச்சைக் கட்டி வருக."[5]

---

[5] குமரி மலர்-1981-மே மறு வெளியீடு

வ.வே.சு. ஐயர் தேசபக்தனில் சேர்ந்த இரண்டு திங்களில் எம்.எஸ்.காமத் இதழ் பொறுப்பையும் அச்சகத்தையும் எஸ். நாகேஸ்வர சாஸ்திரி என்பவருக்கு விற்றுவிட்டார்.

## வ.வே.சு.விற்குத் தொல்லை

'தேசபக்தன்' புதிய உரிமையாளர் 1921 ஆம் ஆண்டு பிப்ரவரியில் அச்சகத்தின் பெயரை 'கமர்சியல் கம்பனி அண்ட் பப்ளிசிங் கம்பெனி லிமிடெட்' என்னும் பெயரில் மாற்றி, தமது நண்பர் பி.வி. ராஜகோபாலாச்சாரி என்பவரைப் பத்திரிகையின் ஆசிரியராக நியமித்தார். இந்த மாற்றங்களை அரசாங்கத்திற்குத் தெரிவிக்கும் போது "ராஜதுரோகமான எந்த விஷயமும் பிரசுரிக்க மாட்டோம்" என்று குறிப்பிட்டார்.

அரசாங்கத்துக்கு அவர் அவ்வாறு அறிவித்தது ஒருபுறமிருக்க வ.வே.சு.வை ஆசிரியர் பதவியினின்று நீக்கியதாக ஆணை அளிக்கவில்லை. பி.வி. ராஜகோபாலாச்சாரிக்கு உடல் நலம் குன்றியது. அவருடன் வ.வே.சு., மகாலிங்க ஐயர் எனும் மூவரடங்கிய ஆசிரியர் குழு அமைக்கப்பட்டது. நாகேஸ்வர சாஸ்திரி வ.வே.சு.வை விலக்க நினைத்தார். ஆயினும் அச்சத்தால் அவரை விலக்காமலிருந்தார்.

## செய்யாத குற்றத்துக்குப் பெல்லாரி சிறை

வ.வே.சு ஐயருக்குக் 'தேசபக்தனில்' ஓராண்டுக் காலத்துக்கு மேல் பணியாற்ற முடியாத சூழ்நிலை ஏற்பட்டுவிட்டது. தம்மை விடுவிக்கும் ஆணை தருமாறு பத்திரிகை உரிமையாளரிடம் கேட்டு வந்தார். அது நடந்த பாடில்லை. வ.வே.சு. ஐயர் வெளியூர் சென்றிருந்தார். அவ்வேளையில் 1921 மே ஆறாம் தேதியில் வெளியான "அடக்குமுறை" என்னும் கட்டுரைக்காக வ.வே.சு. ஐயர் கைது செய்யப்பட்டார். பிரிட்டிஷ் அரசு வழக்கு தொடர்ந்தது. ஏனைய ஆசிரியர் குழுவினரும் பத்திரிகை உரிமையாளரும் மன்னிப்புக் கோரி விடுதலை பெற்றனர். கட்டுரையைத் தாம் எழுதவில்லை என்று வ.வே.சு. ஐயர் வாதாடியும் பயனில்லாமல் போயிற்று. தண்டனை விதிக்கப்பட்டுப் பெல்லாரி சிறைக்கு அனுப்பப்பட்டார். ஒன்பது திங்கள் காலம் சிறைத்தண்டனை விதிக்கப்பட்டது.

தேசபக்தனில் வெளியான வ.வே.சு. ஐயரின் தலையங்கங்கள் தேசிய உணர்வை ஊட்டி வந்தன. அவை துடிப்புடன் எழுதப் பெற்றன என்றாலும் தமிழ்மொழி நடையைப் பொறுத்த வரையில் திரு.வி.க. தெள்ளுதமிழில் எழுதினார். வ.வே.சு. ஐயர் வடமொழி கலந்த தமிழில் எழுதினார்.

# 6. பாலபாரதி - இதழ்

*பாலபாரதியைக் 'கல்கத்தா மாடர்ன் ரிவ்யூ' போன்று* கொணர விழைந்தார். பால பாரதியைச் சிறந்த ஏடாக நடத்தத் திட்டமிட்டார். பாலபாரதி வ.வே.சு. ஐயரைச் சிறந்த இலக்கிய வாதியாகவும், ஒப்பற்ற இதழ் ஆசிரியராகவும் உலகிற்குக் காட் டிற்று. அவர் ஆன்மிகவாதி, அரசியல்வாதி, சமூக சேவையாளர், அத்துடன் ஒப்பற்ற இலக்கியவாதியுமாவார்.

வ.வே.சு. ஐயர் அவர்கள், "*பாலபாரதி*" இதழைத் தொடங்கி, அவர் அந்த முதல் இதழில் முதல் பக்கத்தில் இவ் வாறு குறிப்பிட்டுள்ளார்.

| *பாலபாரதி*<br>*ஓர் அரிய மாதப்பத்திரிகை*<br>*ஆசிரியர்*<br>*வ.வெ.ஸுப்பிரமணிய ஐயர்*<br>*கலி ருயஉக்ஷா ஐப்பசி மாதம்*<br>*முதல் வெளியீடு* |
|---|

இந்நூலின் பக்கங்கள் அனைத்தும் அரேபிய எண்களைத் தாங்காமல், தமிழ் எண்களையே கொண்டிருந்தன என்பது குறிப் பிடத்தக்கதாகும்.

*பால பாரதியை* வ.வே.சு. ஐயர் தொடங்கியதன் நோக்கமே, பாரதத்தின் பண்டைய பண்பாட்டைப் போற்றிப் பாதுகாக்கவும், காலத்துக்கேற்ற கருத்தோட்டங்களை மக்களிடையே பரப்பவும், அரசியல் புதுமைகளையும், ஆராய்ச்சிக் கருத்துக்களையும் புகுத்த வேண்டும் என்பதேயாகும்.

*பால பாரதிக்கு* அவர் ஐயாயிரம் சந்தாதாரர்களை எதிர்பார்த்தார். ஆனால் பத்திரிகைக்கு எழுநூறு சந்தாதாரர்கள் சேர்ந்தது, அவருக்கு ஏமாற்றத்தை அளித்தது.

வ.வே.சு. ஐயருக்குச் சமயத்திலும், சாத்திரத்திலும் பற்றி ருந்த போதிலும், நாட்டில் ஒற்றுமையை உருவாக்கவும், மத, மொழி, இன வேறுபாடுகளை அகற்றவுமே அவர் தமது எழுத்துப் படையல்களைப் "*பால பாரதி*"க்காகப் பயன்படுத்தினார். "ஹிந் துக்களும், முஸ்லீம்களும் திரிகரண சுத்தியுடன் ஐக்கியப்பட்டுத் தேச சுதந்திரத்திற்காக உழைக்க வேண்டும். தர்மமாகிய தேரில் ஜகதீசுவரனை வைத்து நாம் பவனி வரவேண்டும். நன்றாக முறுக்

கேறிய ஐக்கிய வடத்தால் அத்தேரை இழுக்க வேண்டும்" - இக் கருத்தை வ.வே.சு. ஐயரின் மாத இதழான *பாலபாரதி* மையமாகக் கொண்டு வெளிவந்தது.

1924 அக்டோபரில் முதல் இதழ் மலர்ந்தது. அவர் அம்முதல் இதழில் தலையங்கத்தில் பத்திரிக்கையின் நோக்கம், பத்திரிகைக் குப் பாரதி என்னும் நண்பரின் பெயர் அமைத்த இயல்பு என் பவை பற்றி எழுதியுள்ளார்:

"இது பத்திரிகாயுகம். அமெரிக்காவிலும், இங்கிலாந்திலும், எண்ணைத் தொலையாத பத்திரிக்கைகள் வெளியாகின்றன. இன்னமும் பத்திரிக்கைகள் தோன்றித் தமிழ்நாட்டாருக்கும் புதிய விஷயங்களில் அறிவு உண்டாக வேண்டும் என்பதே எமது ஆசை யாக இருக்க, நாம் இப்புதிய பத்திரிகையை வெளிப்படுத்தத் துவக்குவதற்கு யாரும் வேறு காரணங்கள் கேட்க மாட்டார்கள் என நம்புகிறோம்.

"வெண்டாமரையில் வீற்றிருக்கும் எம்பிராட்டியின் பெயரை இப்பத்திரிகைக்கு வைத்துள்ளோம். இதில் சொற்பொ ழிவு பொழியும் ஆசிரியர்களுக்கு அவர்களுடைய வியாசங்கள் உருவாகும்போதே சரஸ்வதியின் திருவுருவம் எல்லோருடைய நெஞ்சகத்தில் எழ வேண்டும் என்றும், இதைப் படிக்கும் நேயர் கட்கு லௌகிக அறிவையும் பாரமார்த்திக அறிவையும் ஒருங்கே தருபவளான வாக்குத்தேவியின் ஸ்மரணை அடிக்கடி என்றுமே தன் பெயரைக் கொண்ட இச்சிறு மாதப் பத்திரிகையைச் சகல வேதங்களுக்கும் சகல சாஸ்திரங்களுக்கும், சகல மந்திரங்களுக் கும் தலையாக இருக்கிற கலைமடந்தை தன் பொற்கோயிலாகக் கொண்டு அதில் நித்தியவாசம் செய்து, எம்முன்னோர் அனைவ ரையும் நிறைஞானமுள்ளவர்களாக ஆக்க வேண்டும் என்று பிரார்த்திப்போம்.

"எம்பிராட்டிக்கு ஆயிரம் ஆயிரம் நாமங்கள் இருக்கையில் "பாரதி" என்று பெயரை ஏன் தெரிந்துகொண்டோ மென்றால், அத்திருநாமம் எமது நண்பரும் இன்றைக்கு இருபது வருஷங்க ளுக்கு முன் தமிழ்நாட்டுக்குப் புத்துயிர் அளிக்க முயன்ற புண்யாத் மாக்களின் ஓர் பிரமுகருமான காலஞ்சென்ற சி.ஸுப்ரமண்ய பாரதி தியின் ஞாபகம் இம்மாஸிகையைப் படிக்கும் அனைவர் மனதிலும் என்றும் அழியாமல் பசுமையாக இருந்து வரவேண் டும் என்றேயாகும்"

*அத்துடன் வ.வே.சு. ஐயர் அவர்கள் தமது "பால பாரதி" யில் கரிகால் பெருவளத்தான், இராஜேந்திர சோழன் முதலானோர் வர லாற்றைப் பல எழுத்தாளர்கள் எழுத வேண்டும் என்றும் வேண் டிக் குறிப்பிட்டார். வரலாறு அறியாத மக்கள் வகையுடன் வாழ முடியாது என்பது அவரது நம்பிக்கை.*

*"பால பாரதியில்" முக்கால் பங்கு அவரது எழுத்தோவியங் களே இடம் பெற்றிருந்தன. முதல் இதழிலேயே தமது பெயரைக் குறிப்பிடாமல் திருநெல்வேலிக் கோயிலின் சிறப்பைக் கட்டுரை யாகத் தந்துள்ளார். நெல்லைக் கோவிலின் கோபுரத்தையும், தெப் பக்குளத்தையும் படங்கள் எடுத்து வெளியிட்டுள்ளார். இவ்வாறு கோயில்களின் புராண வரலாற்றையும், கல்வெட்டுக்கள் பற்றியும் குறிப்புகள் தந்திருப்பது போற்றற்குரியது. பின்னர் வெளியான கட்டுரைகளில் மாயவரத்துக்கு அருகில் உள்ள வழுவூர் கோவில் பற்றியும் அழகிய கட்டுரை வடித்துள்ளார்.*

*'நமது சிற்பச் செல்வம்' எனும் தலைப்பில் குவாலியர் கோட்டை, செஞ்சிக்கோட்டை, சிகாகோல் என்னும் இடத்தில் உள்ள கூர்மாலயம், பூரி ஜெகந்நாதர் ஆலயம், பழனி, புஷ்பகிரிக் கோயில், சிருங்கேரி, ரோமாபுரியில் ஆஞ்சலன் மிக்கேல் கட்ட டம் ஆகியவை பற்றியும் பல முக்கியமான இடங்கள் பற்றியும் கட்டுரைகள் வடித்துள்ளார். வ.வே.சு.ஐயரின் பல இடங்களைப் பற்றித் தெரிந்த அறிவை இக்கட்டுரைகள் தெளிவாக்குகின்றன. அவர் கோவில் வரலாறுகளை எழுதுகையில், கோயில் அமைந் துள்ள அழகையும், ஏனைய எழிலையும் மூர்த்தியின் கீர்த்தியை யும் குறிப்பிடுவார். கோவில் கல்வெட்டின் முக்கியத்துவத்தை உணர்ந்த அவர் வரலாற்று உண்மை உரைக்க அவை பற்றிக் கோவில் கட்டுரைகளில் விவரித்துள்ளார்.*

*மேலும், பாலபாரதியில் "ராஜகோபாலன் கடிதங்கள்" என் னும் தலைப்பில் பல மடல்களை வரைந்துள்ளார் "கம்பராமா யண ரசனை" எனும் நீண்ட ஆய்வுக் கட்டுரையை வரைந்தார். முதலில் பிரமாதி ஆண்டு காரைக்குடி கம்பன் கழக மலரில் இடம் பெற்று (இக்கட்டுரை பின்னாளில் கம்பன் கவிதை என்னும் நூலில் சேர்க்கப்பட்டு, சென்னை நவயுகப் பிரசுராலயத்தாரால் வெளியிடப்பட்டது.). வ.வே.சு. ஐயர் அவர்களே, இவ்விதழில் அவ்வப்போது "புஸ்தக விமரிசனம்" எனும் தலைப்பில் பல அரிய நூல்களுக்குத் திறனாய்வு செய்துள்ளார். Review of Books எனும் தலைப்பில் ஆங்கிலத்தில் மதிப்புரைகளும், அவர் செய்த துண்டு.*

நெப்போலியன் வரலாறு அவர் எழுதி அச்சிட்டு வெளியிடப்பட்டதும் அவ்வீர வரலாறு தமிழர்களுக்கு வீர உணர்வு அளிக்கக்கூடும் என்று கருதிய பிரிட்டிஷ் அரசால் பறிமுதல் செய்யப்பட்டது. எனினும் நெப்போலியன் வ.வே.சு. ஐயரின் நெஞ்சில் என்றும் வாழ்பவன் என்பதை அவர் பாலபாரதி 1924 ஆண்டில் செப்டம்பர் இதழ் 13ம் பக்கத்தில் வெளியிட்டுள்ள "நபோலியனுடைய வீரப் பிரசங்கம்" படித்தின்புறத்தக்கது. "இப்பிரசங்கமானது இத்தாலியப் போரில் மோந்தே நோத்து, மோந்தோலி என்கிற இடங்களில் வெற்றி பெற்ற பிறகு நப்போலியன் தன் சிப்பாயிகளை உற்சாகப் படுத்துவதற்காகச் செய்ததாகும். இப்பிரசங்கம் செய்தபோது அவனுக்கு வயது 26"

*"வீரர்களே, பதினைந்து நாட்களில் நீங்கள் ஆறு போர்களில் வென்று விட்டீர்கள். அநேகம் கோட்டைகளைப் பிடித்துவிட்டீர்கள். பியது மோந்தின் மிகச் செழிப்பான பிரதேசங்களைக் கைக்கொண்டு விட்டீர்கள் ***யாதொரு சாதனமுமின்றிப் போர் முனைக்கு வந்ததும் நீங்கள் சகலத்தையும் சம்பாதித்துக் கொண்டு விட்டீர்கள். பீரங்கிகளில்லாமல் போர்களில் வென்றீர்கள். பாலங்களின்றி நதிகளைக் கடந்தீர்கள். பாதரக்ஷைகளின்றிக் கடுநடை நடந்தீர்கள். பிராந்தியில்லாமலும் பன்முறை ரொட்டியில்லாமலும் கூடப் பாசறையிலிருந்தீர்கள்! இந்த வெற்றிகளுக்காக நாட்டப்படும் நன்றி உங்களுக்கே காட்டப்படட்டும் ***."*

*"ஆனாலும் வீரர்களே முடிக்க வேண்டிய காரியம் கொஞ்ச மேலும் பாக்கியாக இருக்கிறவகையில் இதுவரையில் நீங்கள் பெற்ற வெற்றிகளை ஓர் காரியமாக மதிக்கக் கூடாது. உங்களில் சிலருக்கு மனம் சலித்துவிட்டது என்று, அப்பனீஸ் மலையையும் ஆல்ப் மலையையும் கடந்து வீட்டுக்குக் திரும்ப எண்ணத் துவங்கியிருக்கிறீர்களென்று, கேள்வியுறுகிறேன். அதை ஒருநாளும் நான் நம்பமாட்டேன். மோந்தேநோத்திலும் மோந்தேலியிலும், வென்ற வீரர் பிரெஞ்சு ஜனங்களின் புகழை இன்னும் பரப்புவதற்கும் பறந்து கொண்டு, கிளர்ச்சி கொண்டன்றோ இருக்கிறார்கள்?"*

சென்ற நாட்களில் வென்றதைச் சுட்டிக்காட்டி அவர்கள் சோர்வுற்றது இழுக்கு என்பதை எடுத்துக்காட்டிய நெப்போலிய வீரத் தலைமை அந்நாளில் நம் நாட்டுத் தலைவர்களுக்கும், நெப்போலியப் படையின் வெற்றிச் செய்தி நம் விடுதலை வீரர்களுக்

கும் வ.வே.சுவால் பாலபாரதியில் ஊக்க உணர்வுதரத் தரப்பட்டதே என்பதில் ஐயம் இல்லை.

இப்பிரசங்கத்தின் முன்னுரையாக வ.வே.சு. ஐயர் குறிப்பிட்டுள்ள பகுதி உள்ளம் கொள்ளை கொள்ள வல்லது.

"** நம் நாட்டில் பெரிய வாசகாலகர்களின் பேச்சுக்களை எழுதி வெளிப்படுத்தியதில்லை. முன்னாட்களில் கிரேஸிலும் ரோமிலும் இக்காலத்தில் ஐரோப்பாவில் இதர நாடுகளிலும் அமெரிக்காவிலும் வாக்மிகளின் பிரசங்கங்கள் எழுதப்பட்டு வந்திருக்கின்றன. நம் நாட்டில் இப்பொழுது தோன்றியிருக்கிற பெரிய கிளர்ச்சியானது, இவ் யுகத்தைப் பெரிய பிரசங்க யுகமாக்கியிருக்கிறது என்று சொல்லுவது பொருந்தும். ஆகையால் இக்காலத்தில் ஜனங்களைப் பேச்சினால் வசியப்படுத்த விரும்புகிறவர்களுக்கு உதாரணமாக இருப்பதற்காகப் பெயர் போன பிரசங்கங்களை மொழிபெயர்த்து அப்போதைக்கப்போது வெளிப்படுத்த விரும்பியுள்ளோம்.[1]" "வாக்மிகள்" என்று அவர் குறிப்பிடுவது வாக்கு வன்மை மிக்க பேச்சாளர்களையாகும்.

"The Commentaries of Napoleon" - என்னும் தமது ஆங்கிலக் கட்டுரையில் நெப்போலியனுடைய எழுத்தாற்றலையும் பேச்சாற்றலையும் பாராட்டியுள்ளார் வ.வே.சு. ஐயர்.[2]

"The very day that he took over the Command-in-Chief of the Italian army, when he was a young man of 26, he started his work with a ringing proclamation to his soldiers, which is still a model of military eloquence unsurpassed"

பின்னர் ஓர் இதழில் "வைரங்கள்" பற்றி அவர் எழுதிய கட்டுரை அவரது வைர அறிவைப் பளிச்சிட்டுக் காட்டுகிறது. இதில் வைரக்கற்களின் தன்மை பற்றி ஆய்ந்த ஆசிரியர் கோஹினூர் வைரம் பற்றிக் குறிப்பிடாமலில்லை.

வீர சாவர்க்கரின் கடிதங்களையும் அவரது அனுமதி பெற்றுப் பிரசுரித்துள்ளார்.

---

[1] பாலபாரதி 1924, செப்டம்பர்.

[2] Hindustan Review 1914. Vol.31 V.V.S.Aiyar Critical Studies, பக்கம்-179 - பெ.சு.மணி. - வ.வே.சு. ஐயர் - அரசியல் - இலக்கியப் பணிகள். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் (மேற்கோள்)

"பாலபாரதி" ஓர் பல்சுவை வழங்கும் திங்கள் இதழாக வந்தது. விடுதலை உணர்வைத் தூண்டும் கட்டுரைகள், வரலாற்றுக் கட்டுரைகள், ஆய்வுக் கட்டுரைகள் எனப் பல்வேறு கட்டுரைகள் வெளிவந்தன. வெளியாகும் ஒவ்வொரு இதழிலும் பெரும் பகுதியை வ.வே.சு. ஐயரே எழுதினார். எனினும் திரும்பத் திரும்பத் தமது பெயர் அச்சில் வருவதைத் தவிர்த்து பெயர் குறிப்பிடாமலேயே கட்டுரைகளை வெளியிட்டு வந்தார். புத்தக விமர்சனங்களையும் அவரே செய்து வந்தார். வெ. வெங்கடேச ஐயர், ராஜகோபாலன் என்றே தன் தந்தையாரின் பெயரைத் தலைப்பெழுத்தாக அமைத்திருந்தார்.

இத்துடன் "*பால பாரதி*"யில் பொ. திருகூடசுந்தரம்பிள்ளை எஸ். வையாபுரிப் பிள்ளை, நா. முத்துவையர் (இசை பற்றி) ரா. அனந்தகிருஷ்ணன், சுத்தானந்த பாரதியார், வ. நடராஜன், பி.ஏ., பி.டி., ப. ஆதிமூர்த்தி முதலான அறிஞர்களின் எழுத்தோவியங்களும் மிளிர்ந்தன.

இனி வ.வே.சு. ஐயர் வடித்துள்ள தனித் தலைப்புகளிலான கட்டுரை முதலானவற்றைப் பார்ப்போம்.

## ஆனந்தரங்கம்பிள்ளையின் தினசரி

வரலாற்றுச் சிறப்புக்குரிய புதுச்சேரி "ஆனந்தரங்கம்பிள்ளை டயரி" எனப்படும் "ஆனந்த ரங்கம்பிள்ளையின் தினசரி" வ.வே.சு ஐயரின் கவனத்தைக் கவர்ந்த ஒன்றாகும். அந்நிய ஆட்சியின் போது பிரெஞ்சு அரசுடன் நெருங்கிப் பழகிய துபாஷி ஆனந்த ரங்கம்பிள்ளை, அன்றாட நிகழ்ச்சிகளைத் தமது நாட்குறிப்பில் பதித்துவைப்பது வழக்கம். தாம் கண்டவை மட்டுமின்றி, பிறர் சொல்லக் கேட்ட தகவல்களையும் அவர் அச் சிறு குறிப்பு நூலில், பதியவைப்பார். அந்நாளின் நாட்டுநடப்புகளை இக் குறிப்புகள் படம் பிடித்துக் காட்டவல்லவை. அவை உயிரோட்டம் நிறைந்த செய்திகள் ஆகும் ஆனந்தரங்கம்பிள்ளை சிறந்த அறிஞர்; கூர்த்த மதியினர்; பண்பாளர்.

ஆனந்தரங்கம் பிள்ளையின் நாட்குறிப்பு கிடைத்ததும், வ.வே.சு. ஐயர் அவரது பிறப்பு வளர்ப்பையும் கேட்டறிந்து "*பால பாரதி*"யில் 1924-தை இதழில் குறிப்பிட்டிருக்கிறார். அவரது "*தினசரி*"யையும் அழகுடன் விமரிசிக்கின்றார்:

"ஆனந்தரங்கம்பிள்ளை என்பார் அப்போதைக்கப்போது சாவகாசம் ஏற்படுத்திக் கொண்டு தான் நேரில் கண்டும் கேட்கும் உள்ள விஷயங்களைச் சித்திரகுப்தனைப் போல ஒன்று விடாமல் குறித்து வைத்துள்ள புஸ்தகமே இப்பிரஸ்தான தினசரியாகும். **** இருநூறு வருடங்களுக்கு முன் தமிழ்நாடு இருந்த நிலை மையை அஞ்சனமை காட்டுவது போலக் காட்டும் இந்நூலை எழு தின ஆனந்தரங்கம்பிள்ளையைப் பற்றி இங்கு ஓரிரண்டு வார்த்தை கள் கூறுவது நியாயமாகும். இவர் கலி 4810க்கு சரியான கி.பி. 1709ம் ஆண்டு மார்ச்சு மாதம் 30 ஆம் தேதி சென்னைக்கடுத்த பிரம்பூரில் பிறந்தவர். இவரது மாமனான நயினியாபிள்ளை என் பார் புதுச்சேரியில் பிரெஞ்சு இந்திய சங்கத்தாரின் தலைமைத் துபாஷியாக இருந்தார். அவர் பிரெஞ்சுக் கிடங்கு தலைவனான ஹெபேரின், தனது மைத்துனனும் ஆனந்தரங்கம்பிள்ளையின் தகப்பனுமான திருவேங்கடம்பிள்ளைக்குப் வேறுபல தனிகரை யும் அழைத்து வரும்படி எழுத, திருவேங்கடம் பிள்ளை கலி 4810 வருஷம் குடும்ப சகிதம் புதுச்சேரியில் வந்து குடியேறினார். அவர் வந்து நல்லபடியாக வியாபாரம் செய்து தானும் பொருளீட்டிப் பிரெஞ்சுக்காரருக்கு லாபம் சம்பாதித்துக் கொடுத்தார்."

திருவேங்கடம்பிள்ளை புதுச்சேரி வந்து 30 ஆண்டுகள் கழிந்த பின்னர், டியுப்ளெக்ஸ் ஆளுநரானார். ஆனந்தரங்கம் பிள்ளை முதன்மை துபாஷியானார். டியுப்ளேக்குப் பின்னர் வந்த ஆளுநர் தெலெய்ரித் என்பார் அவரைப் பதவியினின்று நீக்கினார். நான்கு ஆண்டுகள் கழிந்து கி.பி. 1761 ஜனவரி 12ல் ஆனந்தரங்கம் பிள்ளை அமரத்துவம் எய்தினார்.

இவர் கி.பி.1736 செப்டெம்பர் 6 முதல் அமரத்துவம் எய்திய நாள் வரை நாட்குறிப்பு எழுதி வந்தார். வ.வே.சு.ஐயர் 'தினசரி' யின் ஒரு சிறப்பைப் பற்றிக் குறிப்பிடுகிறார்.

"இத்தினசரியின் வாசகத்தைப் பற்றி ஓரிரண்டு வார்த்தைகள் சொல்வது முறையாகும். அது செந்தமிழ்நடையில் எழுதப்பட வில்லை. அதில் எழுத்துப் பிழைகள் மலிந்து கிடக்கின்றன. அனேக படியாக குமாஸ்தாக்களைக் கொண்டு எழுதுவித்தது, இந்தப் பிழைகளுக்கும் கடுந்தமிழ் நடைக்கும் ஓர் காரணமாக இருக்கலாம். தினசரி கடுந்தமிழில் எழுதப்பட்டு இருப்பினும் அதன் நடையில் வன்மையும் ஓட்டமும் இருப்பதால் அதை நாம் செந்தமிழாக்காமல் அப்படியே அச்சிடுவதற்கு அறிவாளிகள்

ஆக்ஷேபிக்கமாட்டார்கள் என நம்புகிறோம்"

வ.வே.சு. ஐயர் வரலாற்றில் ஆர்வம் கொண்டவர். பிரெஞ்சு இந்தியாவிலும், பிரிட்டிஷ் இந்தியாவிலும் தாம் இலண்டனிலிருந்து வருவதற்கு முன்னர் என்னென்ன நிகழ்ந்தன என்பதை அறிய ஆர்வம் கொண்டிருந்தார். அதற்கு "ஆனந்தரங்கம் பிள்ளையின் தினசரி" உதவியாக இருந்தது என்பதை அறிந்தார்.

ஆனந்தரங்கம்பிள்ளையின் நாட்டுநடப்பைப் பயில்வதில் மட்டும் அவரது நாட்டம் நின்றுவிடவில்லை. அந்நாட் குறிப்பின் முக்கியத்துவத்தையும் "பால பாரதி"யில் குறிப்பிட்டுள்ளார்.

"தினசரியைச் சித்திரகுப்தனுடைய கணக்குக்கு ஒப்பிட்டோம். அந்தப் பயங்கரமான கணக்கில் நாம் முக்கியம் என்று நினைக்கும் விஷயங்கள் மிகவும் லேசாகவே பதியப்பட்டிருக்கலாம். நாம் அலக்ஷியமாகத் தள்ளிவிடும் காரியங்களும் எண்ணங்களும் வெகு விஸ்தாரமாக எழுதப்பட்டிருத்தல் கூடும். அதே மாதிரி ஆனந்தரங்கம் பிள்ளையும் பெரும்பாலோர் பிரதானம் என்று கருதும் சம்பவங்களைப் பற்றிச் சில வேளைகளில் ஓரிரண்டு வார்த்தைகளே எழுதியிருக்கிறார். ஒன்றுமில்லாத விஷயம் என்று நினைக்கக் கூடியவற்றைப் பற்றி விமரிசையாக எழுதி வைத்திருக்கிறார் ****"

வ.வே.சு. ஐயர் ஆனந்த ரங்கம் பிள்ளையின் நாட்குறிப்பை நன்றாக அலசிப் பார்த்து ஆய்ந்து அணுகியுள்ளார் என்று தெரிகிறது.

## இந்து-முஸ்லிம் ஒற்றுமை ஓவியங்கள்

"*முஸ்லீம் பண்டிதரும் ஸநாதன தர்மமும்*" எனும் தலைப்பில் பாலபாரதியில் எழுதிய நீண்ட கட்டுரை எல்லோருடைய சிந்தனைக்கும் உரியது. இந்து- முஸ்லீம் ஒற்றுமைக்கு என்றென்றும் வழிகோலக்கூடியது. முஸ்லீம்கள் ஹிந்துக்களை 'காப்பிரிகள்' என்று சொல்வதும், அதற்குப் பதிலாக ஹிந்துக்கள் முஸ்லீம்களை 'மிலேச்சர்கள்' என்று சொல்வதும் இன்னமும் தீர்ந்த பாடில்லை. ஆனால் இஸ்லாம் மதத்தின் தத்துவங்களையும் ஸநாதன தர்மத்தின் தத்துவங்களையும் ஆராய்ந்து பார்க்கும் பண்டிதர்களும் உலமாக்களும் ஒருவரை யொருவர் மரியாதையோடும் கௌரவத்தோடும் பாவிப்பார்கள் என்பதில் ஐயம் இல்லை" என்று குறிப்பிட்டு இந்து-முஸ்லீம் ஒற்றுமையை நாடுகிறார்.

"இவ்விருவரும் கடவுளின் புத்திரர்கள்" என்று குறிப்பிடும் வ.வே.சு. ஐயர், "இவ்விரு திறத்தவரும் ஒருவரையொருவர் நன்கு மதித்துக் கொள்ள வேண்டுமானால் ஒவ்வொருவரும் மற்றவருடைய வேத சாஸ்திரங்களின் போக்கை அறிந்து கொள்ளவாவது முயலவேண்டும்" என்று இருதரப்பாருக்கும் விண்ணப்பம் செய்கிறார். வரலாற்றுண்மைகளை ஆராய்ந்தறிந்த ஆசிரியர், "முஸல்மான் அரசர் ஒருவர் இந்துக்களை இம்சிக்கப் போந்தபோது, பல ஆலிம்கள் ஸநாதன தர்மத்தின் பெருமைகளை - தங்களுக்குத் தெரிந்த அளவுக்கு எடுத்துக்காட்டி இம்சிக்காதபடி தடுத்திருக்கிறார்கள்" என்று குறிப்பிடுவது போற்றத்தக்கதாகும்.

சிக்கந்தர் லோடி என்னும் மன்னனிடம் அவனது ஆலோசகரில் சிலர் ஸ்தானேச்சுரத்தில் இந்துக்கள் விழா கொண்டாடி வருவதை நிறுத்தச் சொல்லியபோது அவன் நல்லரசனாக விளங்கியதால், அக்கருத்தினை மறுத்தான். அத்திருவிழா நிறுத்தாது நடைபெற உதவினான். இவ் வரலாற்றுச் செய்தி இந்திய தேசிய உணர்வுக்கு உதவும் என்று அந்நாளிலேயே கருதிய வ.வே.சு.ஐயர் அவ்வரலாற்றுச் சம்பவத்தையும் எழுதியுள்ளார்.

தில்லி சட்ட நிபுணரான மௌலானா ஷா அஜீஜ் என்பவர், தமது "பஷாரத் அஹமதி" எனும் நூலில் இராமனைப் பற்றிப் புகழ்ந்து குறிப்பிட்டு, கண்ணன் (கிருஷ்ணன்) ஆத்ம போதம் நிறைந்த ஓர் பரமகுருவாக விளங்கியதாகச் சுட்டிக்காட்டியிருப்பதையும் ஆசிரியர் மேற்கோள் காட்டியுள்ளார்.

இக்கட்டுரையை எழுத வ.வே.சு. அவர்கள் பல இஸ்லாமிய அறிஞர்களின் நூல்களைப் படித்து ஆய்ந்துள்ளார் என்பது தெளிவு. லக்னோவைச் சேர்ந்த பன்ஸாவி மௌலானா ஷா அப்துல் ரஜாக் என்பவர் தாம் மக்கா செல்லும் வழியில் மதுராவை அடைந்ததும் கண்ணபிரானைக் கனவில் கண்டு களித்ததையும், அக்பர் மாமன்னரின் நண்பரான அபுல்பஜல் இந்து தர்மங்களை விரிவாக ஆராய்ந்து அதன் பெருமைகளைத் தமது "அயின்- இ-அக்பர்" எனும் நூலில் எழுதியிருப்பதையும், இந்து-முஸ்லீம் இனங்களின் ஒற்றுமைக்காகச் சான்றாக்குகிறார்.

அல்பரூனியின் ப்யணக் கட்டுரைகளிலிருந்தும், மிர்ஜா மனோஜ் ஜன்ஜனா எனும் மகானின் எழுத்துக்கள் - எனப் பலவற்றைத் தமது கருத்துக்கு வலுவூட்ட மேற்கோள் காட்டுகிறார்.

"முஸ்லீம் பண்டிதரும் ஸநாதன தர்மமும்" எனும் கட்டுரையை வடித்த சில நாட்களுக்குப் பிறகு "பாலபாரதி"யில் வ.வே.சு. ஐயரின் "இஸ்லாமும் சாஸ்திர பரிசீலனையும்" எனும் கட்டுரை வெளியாயிற்று.

இஸ்லாம் சமயப் பெரியார் பலரது வாழ்வை ஊன்றிப் பயின்று, அவர்களது சீரார்ந்த கொள்கைகளையும், சிறப்பியல்புகளையும் ஏனையோரும் அறியும் வண்ணம் இக்கட்டுரையில் விரிவாக எழுதுகிறார். சில பகுதிகள் சிந்தனைக்குரியவை.

"இருப்பினும் ஜாதி உணர்ச்சி ஒன்று நாம் அறியக்கூடிய உண்மைகளை நாம் அறியாமலே செய்து வருகிறது. ***அனேக விஷயங்களுக்கு ஜாதி உணர்ச்சி மிகவும் உதவியாக இருக்கிறது. ஆனால் மனித ஜாதிக்கு உயர் வழி காட்டியிருக்கிற அநேகம் பெரியார்களை, தங்களுக்குச் சம்பந்தம் இல்லாதவர் அல்லது விரோதிகள் என நினைத்துக்கொண்டு, அலக்ஷியம் செய்துவிடும் படி இந்த ஜாதி உணர்ச்சியே மனிதரைத்தூண்டி, அவர்களுக்கு இயற்கையாக ஏற்பட்டுள்ள செல்வத்தைப் புறக்கணிக்கும்படி செய்துவிடுகின்றது."

"இன்று நாம் எழுத எடுத்துக்கொண்ட பெரியோர்களின் சரித்திரத்தில் இன்னொரு விஷேஷம் இருக்கிறது. இவர்களது சரித்திரத்தை ஹிந்துக்கள் மாத்திரமில்லை. ஆங்கிலேயர் மாத்திரமில்லை; ஐரோப்பிய நாட்டிலுள்ள பண்டிதர் மாத்திரமில்லை; அவர்களால் கீர்த்தியையும், பெருமையையும் அடைந்த அவர்களது சகதர்மிகளான முஸல்மான்களே கூட அலக்ஷியம் செய்துவிட்டிருக்கிறார்கள்."

"முஹம்மது நபீ, ஸல்லல்லாஹு அலைஹி வஸ்ஸல்லம் - இலக்கியக் கல்வியையும், சாஸ்திர கல்வியையும் பெரிதும் புகழ்ந்திருக்கிறான். அவனுக்கு கல்வி அதிகம் இல்லை. ஆனால் அவனது வாக்கு தெய்வத்தன்மை பொருந்தியதாக இருக்கிறது. குரான் ஷெரிபினுடைய இடியோசை போன்ற கம்பீரமான நாதம் கோழைகளையும் சிங்கங்களாக்கும் ஆற்றலுடையதாயிருக்கிறது. அவன் தன் பிரசங்கங்களிலும் கல்வியைப் பற்றி மிகப் பெருமையாகப் பேசியிருக்கிறான். 'கடவுளின் சிருஷ்டிகளை ஆராய்ந்து பார்க்கும் ஒரு மணி நேரம், ஸ்தோத்திரத்திலேயே செலவாகும் எழுபது வருஷங்களைவிட அதிக பயனைத் தரும்' என்கிறான். 'கல்வியை நாடுகிறவன் வானத்தவர்க்கு நல்விருந்தாவான்' என்

றும், 'கற்றோரைக் கௌரவிப்பவன் என்னைக் கௌரவிக்கிறான்' என்றும் 'கல்விக்காக வாழ்ந்தவன் இறந்தவனேயல்லன்' என்றும் 'பாண்டித்தியமே மனிதனது உத்திருஷ்டமான பூஷணம்' என்றும் கூறி நபிகள் நாயகம் தனது சிஷ்யர்களைக் கல்விப் பெருமைக ளையே தேடும்படித் தூண்டி வந்தான்".

தொடர்ந்து ஆசிரியர் இக்கட்டுரையில், நபிகள் நாயகத்தின் கல்வியறிவு பரப்பப்பட்டதால், அவருக்குர் பின் ஓராயிரம் ஆண் டில் ஒப்பற்ற பண்டிதர்கள் இஸ்லாத்தில் தோன்றினர் என்கிறார்.

இவ்வாறு குறிப்பிட்ட வ.வே.சு. ஐயர் பிர்தௌஸி, ஸஅதி, ஹாபிஜ், நிஜாமி, ஜலான் உத்தின் ரூமி ஆகியோரது படைப்பு களில் காணப்படும் 'சிருங்காரம், வீரம், சோகம், பயானகம், பீபத்ஸம்' முதலான சுவைகளை எடுத்து இயம்புகிறார். அராபியக் கதைகளின் அற்புதக் கற்பனை நயத்தைப் பாராட்டுகிறார்.

அல்மாமூன் என்னும் மாமன்னன் போஜ மாமன்னனைப் போன்றே கற்றாரை வியந்து ஏத்திப் பாராட்டினான் என்ற செய்தி யையும் கட்டுரை நவில்கின்றது.

வ.வே.சு. வானசாத்திரம் அறிந்தவர். எனவே இஸ்லாமிய ரின் வானசாத்திர அறிவைப் போற்றிப் புகழ்கிறார். அவர்களது இலக்கியப் படையல்களை ஆராதிக்கின்றார்.

பல்வேறு இஸ்லாம் பண்டிதர்களின் வாழ்க்கையைப் பற்றி விரிவாக இக்கட்டுரையில் எழுதிய வ.வே.சு.ஐயர் "வானசாஸ்தி ரத்தைப் பற்றி மாத்திரம் 1000 நூல்கள் இருந்தன. இவற்றையெல் லாம் பற்றிப்பேச இவ்வியாசத்தில் இடம் போதாது. ஆனால் ஜாபர் அஸ்ஸூபி, அபூஜகாரியா, யாஹியாபின் மஸ்ஸூபியா, ராஹி என்று அழைக்கப்படுகின்ற முகம்மது அபூ பாகர் இபன், ஜகாரியா, அவரோயெஸ் என்று பெயர் வைத்து ஐரோப்பியர் புகழ்கின்ற அபுல் வலீது முகம்மது, இபன்குஷது. அபுல்காஸிம், முதலிய மகா பண்டிதர்களைப் பற்றி இன்னும் எப்போதாவது எழுதவே இருக்கிறோம்."

வ.வே.சு. ஐயர் பல்துறை வித்தகர், நிறையக் கற்றவர். கற் றாரைக் காமுற்றார் என்பதில் வியப்பேது! ஆனால் பிரிட்டிஷா ருக்கு ஒளிப்பாட்டம் காட்டிக் கொண்டிருப்பதிலேயே நேரத்தைச் செலவிட்ட வ.வே.சு. எப்போது ஒய்வு கிடைத்து இம்மாபெரும் மேதைகளைப் பற்றிப் படித்தார், எழுதினார் என்பது தான் வியப் பாக உள்ளது.

சமய ஒற்றுமைக்கான இலக்கியம் படைக்கும் இவரது வேட்கையை இது புலப்படுத்துகின்றது.

இதழியலில் வ.வே.சு. ஐயர் ஆற்றிய பணி மகத்தானது. இத ழியல் பணியில் சேரவேண்டும் என்று காசி காங்கிரஸ் மாநாடு கண்டு மீண்டதும் உறுதி கொண்டார். அவர் 1920ஆம் ஆண்டில் எழுதிய மடல் கூர்ந்து பார்க்கத்தக்கது.

"... நமக்குத் தமிழ்ப்பத்திரிக்கை அவசியம்: வங்காளியில் 'ப்ரவாசி' என்றும், ஆங்கிலத்தில் 'மாடர்ன்ரிவ்யூ' என்றும் பத்தி ரிகை போல் ஒன்று இருந்தால் தங்களைப் போன்ற தமிழபிமானி களுடன் ஒன்று சேர்ந்து உழைத்துத் தமிழில் எல்லாத் துறைகளி லும் இலக்கியங்கள் உண்டாக்கலாம்."

'மாடர்ன் ரிவ்யூ' ராமானந்த சாட்டர்ஜி எனும் வங்காள தேசத் தொண்டரால் 1899-1900களில் தொடங்கப்பெற்றது. தேசியத் தலைவர்களின் கட்டுரைகளும், இலக்கிய ஆசிரியர் ஆகியோரின் எழுத்தோவியங்களும் இடம் பெற்றன.

பாரதியார், 'மாடர் ரிவ்யூ'வில் வெளியான தாகூரின் கதை கள், கட்டுரைகள் ஆகியவற்றை மொழிபெயர்த்தார்.

## ஆலோகன அவலோகனம்

வ.வே.சு. அவர்கள், தமது "*பாலபாரதி*"யில் தொடர்ந்து இத் தலைப்பில் நாட்டு நடப்புகள் பற்றிய கட்டுரைகளை எழுதி வந் தார். சிந்தனையைத் தூண்டும் பல எழுச்சிக் கட்டுரைகள் இத் தலைப்பில் வெளியாகி வந்தன. "பாரத நாட்டின் கண்ணீர்" அவர் எழுதிய உருக்கும் கட்டுரை. அதன் ஒரு பகுதி:

"முன்னே யமுனையாற்றின் கரைகளில் கண்ணனின் குழ லோசை கேட்டது. பசுக்கள் அணி அணியாய் மேய்ந்தன. இராட்டி னத்தின் ஒலி காற்றை நிரப்பிற்று. இப்பொழுதோ "பசி பசி" என்ற ஏழைகளின் கூக்குரலால் இந்திய நதிக்கரைகள் எதிரொலிக்கின்றன. நூற்றுக்கு 90 பேர் பட்டினியால் தவிக்கின்றனர். "நனை சுவர்க் கூரையும், கணை குரற் பல்லியும்" பெற்ற இருண்டமண் வீடுகளில் நமது ஏழைகள் ஆடு மாடுகள் போன்று வசிக்கின்றனர். சுகாதாரக் குறைவால் இந்தியரின் சராசரி வயது முப்பது ஆக இருக்கிறது. சரா சரி 1½ அணாக் கூலியே அவர்கள் தலையில் எழுதியிருக்கிறது. இந்த வாழ்வில் கோடி கோடியாக, அயல் நாட்டிற்குக் கொள்ளை

போகிறது. விளைந்த பருத்தியை அன்னியருக்கு விற்று, அவர்களி டமிருந்து நூலாக வாங்குவதில் 90 கோடி ரூபா இழக்கிறோம். கட் குடியால் கோடிக்கணக்கான பணத்தை ஏழைகள் பறி கொடுக்கின்ற னர். அயல்நாட்டு இடம்பச் சாமான்களின் மாயை இவர்கள் செல்வத்தை உறிஞ்சுகிறது. அரசாங்கச் செலவோ, மற்ற நாடுகளை விட மிகவும் அதிகம். நாட்டின் காவற்காரனான சேனைக்கு 64 கோடி ரூபாய் செலவு. கலால் வரும்படியில் பன்னிரண்டிலொரு பங்கு கல்விக்காகத் தரப்பட்டிருக்கிறது. நூற்றுக்குத் தொண்ணூற்று நான்கு பேர்கள் எழுத்தறியாதவர். கப்பல் வியாபாரமும் கல்வி யொழுங்கும், பிற நாட்டாரிடமிருந்து வருகிறது. பஞ்சமும் மட மையும் அடிமைத்தனமும் நமது அழகிய நாட்டைச் சீர் குலைத்தன. உழைப்பவர் குறைவு, உண்பவர் மிகுதி.

"நமது ஜனசமூகமோ, ஒற்றுமையின்றி ஓடிக்கொண்டிருக்கி றது. மதச் சண்டையும் ஜாதிப் பொருமலும், கட்சி வேற்றுமை யும், உத்தியோக வேட்டையும், தொழிற் சோம்பலும், அடிமை உணர்ச்சியும், ஆண்மையின் அயர்வும் சுதந்திரதேவியின் மன தைப் புண்ணாக்குகின்றன. அங்கே இந்து முகம்மதியருள் புகைச் சல், இங்கே அந்தணர், அற்றோர், பஞ்சமர்களின் கிளர்ச்சி! சகிப் புத் தன்மையும், சமரச உணர்ச்சியும், மக்கள் நடமாடுங் கோயில் என்ற நினைவும் ஆன்ம வளர்ச்சியும், ஆருயிர்ப்பணியும் பிறர்க் கென வாழும் பெருமையும் போயின.

அங்குமிங்கும் கொடுங்கொலைகளும், வெறியாட்டங்க ளும், கடுஞ்சாவுகளும் பெருகுகின்றன. பாவலாக்கொலை, மவுண்டு ரஸ்தா கொலை, சுப்பராவ்கொலை இன்னும் எத்தனை கொலை!"

வ.வே.சு.வின் ஆழ்ந்த தேசிய நீரோட்டமும், அவர்கண்ட அகண்ட இந்தியாவின் அவலநிலையும் அவரது உயர்த்துடிப்பான எழுத்துக்கள் படிப்போரைக் கண்ணீர் விடவைத்தன. அவரது சங்க நூல் அறிவுக்கு, நனைச்சுவர்க் கூரையும், கணைகுரல் பல்லியும் சொற்றொடர் சான்றாய் விளங்கக் காணலாம்.

1926 ஆம் பிறந்தது, எல்லோரும் அப் புதிய ஆண்டை வர வேற்றபோது அவர் எழுதியிருப்பதாவது:

"1925 ஆம் ஆண்டு பல அனுபவ விளக்கத்துடன் முடிந்தது. வைக்கத்தில் தீண்டாமை யொழிய, சத்தியாக்கிரகப் போர்

தொடங்கப்பட்டது. சோகச் சம்பவம் மஹாத்மாவை இருபத்தோருநாள் உண்ணாவிரதத்தில் இருக்கச் செய்தது. இருபத்தோருநாள் நமது மஹாத்மா செய்த தவப்பயனால் நாட்டில் ஒற்றுமை நிலவத் தொடங்கியிருக்கிறது. மிதவாதிகள், தேசிய வாதிகள், தீவிர ஒத்துழையாதார், சுயராஜ்யக் கட்சியினர் முதலிய அனைவரையும் காந்தியானவர் பம்பாயில் சர்வ கட்சித் தலைவர் மஹாநாட்டில் ஒன்று சேர்த்தார். முன்னே கொள்கை வேறுபாட்டால் முகதர்சனத்தைக் கூட வெறுப்போர் இப்போது தத்தம் கொள்கைகளைத் தாராளமாக வெளியிட்டு நின்றனர். வங்காள அடக்குமுறைச் சட்டத்தை அனைவரும் கண்டித்தனர். சுயராஜ்ய திட்டத்தைத் தயாரிக்க ஒரு சபையார் ஏற்பட்டிருக்கின்றனர். காந்திக்கும் தாஸுக்கும் நடந்த உடன்படிக்கையால் நமது ஒற்றுமை பலப்பட்டது. பெசண்ட்அம்மையார் காங்கிரஸில் சேர்ந்து நூற்கவும் செய்கிறார். அகில இந்திய மகாநாடு மஹாத்மாவின் கீழ்கூடும் பாக்கியத்தைப் பெற்றது. அஹிம்ஸை, இராட்டினம், கதர், இந்து முஸ்லீம் ஒற்றுமை, தீண்டாமை விலக்குதல், மதுவிலக்கு முதலியவற்றைத் தன் இனிய சொற்களால் சாந்தமாக வற்புறுத்தி எல்லாரையும் ஒன்று சேர்த்தார். கதரை அபிவிருத்தி செய்ய எங்கும் பெரு முயற்சி நடக்கின்றது. புதிய ஆண்டு ஒற்றுமையையும் சுதந்திரத்தையும் தருமென நம்புகிறோம்." எழுபது ஆண்டுகளுக்கு முன்னரே ஓர் ஆண்டு பிறக்கையில் முந்திய நடப்புக்களைப் 'பருந்துப் பார்வை' பார்க்கும் உத்தியை வ.வே.சு. புகுத்தியிருந்தார்.

வ.வே.சு.ஐயர் ஆலோகன அவலோகனத் தலைப்பை இசையின் ஆரோகண-அவரோகண ஏற்ற இறக்கத்தைக் குறிப்பது போல் இந்திய நாட்டின் அரசியல் சமூகச் சூழல்களை இசையின் சுரங்கள் போன்று தந்திருக்கக் காணலாம்.

ஆலோக அவலோகனக் கட்டுரைகள் பல்சுவை மிக்கவை. படிப்போரைச் சிந்திக்க வைக்கும் ஆற்றல் பெற்றவை.

'தீண்டாமை' பற்றி அவர் தீவிரமான கருத்தைக் கொண்டிருந்தார். அவர் எழுதிய ஆலோகன அவலோகனக் கருத்தின் ஒரு பகுதி:

"தீண்டாமை ஒரு பெரிய இடையூறாக இருக்கிறது என்று சென்ற மூன்று வருஷங்களாக வற்புறுத்தப்பட்டு வந்தும் அவ்

விவகாரத்தை இன்றும் ஜாதியானது தொடக்கூட இல்லை. 'ஒரு பெரிய அத்தியாத்மவேகம் பாரதஜாதியில் முக்கியமாகத் தீண் டாமை அதிக கோரமாகப் பரவியிருக்கிற இத் தென்னாட்டில் பிறந்தாலொழிய இக்கொடுமை தீரும் என்று நம்புவதற்கில்லை. ஆனால் அத்தியாத்மவேகம் பிறந்து விட்டால், அக்னியானது சமஸ்த அழுக்குகளையும் எரித்துத் தங்கத்தை எப்படி முற்றிலும் பரிசுத்தமாக்கி விடுகிறதோ அப்படித் தீண்டாமை ஒழிந்து தீண்டா தோர் என்று சொல்லப்படுவோர் ஜாதியில் மற்றெல்லோருக்கும் சமமான ஸ்தானத்தைப் பெற்றுவிடுவர். அந்த வேகம் என்று பிறக் கும், எவ்வாறு பிறக்கும்?"[3]

---

[3] பாலபாரதி - பிப்ரவரி, 1925

# 7. சிறுகதையின் முன்னோடி

வ.வே.சு ஐயர் அரசியல், சமூகத் துறையாளர் மட்டுமின்றிச் சிறுகதை இலக்கியவாதியாகவும் விளங்கினார்.

"மங்கையர்க்கரசியின் காதல்" என்னும் தலைப்பில் வெளி வந்த இரண்டாம் பதிப்புச் சிறுகதைத் தொகுப்பில் எட்டுச் சிறு கதைகள் இடம் பெற்றுள்ளன. இராஜாஜி அவர்கள் இந்நூலின் முதல் பதிப்புக்கு முன்னுரை வழங்கியுள்ளார். "மக்களின் சீலக் குறைகளே அம்மக்கள் வாழும் நாட்டின் பொதுவாழ்வில் உள்ள குறைகளுக்கும் உண்மையான காரணமாகும். நமது நாட்டின் தற் காலப் பொதுநிலையின் சீர்கேடுகளுக்குக் காரணம் என்னவென்று ஆராய்ந்து பார்த்தாலும் இவ்வுண்மையே வெளியாகும். நமது பொதுவாழ்வு நல்ல நிலையை அடைந்து நாடு சுகமும், கௌரவ மும் பெற வேண்டின் மக்களுடைய நடைகுணங்கள் உயர்வழிப் பட நாம் முயற்சி செய்ய வேண்டும். வாலிபப் பருவத்தில் எண் ணமும், ஒழுக்கமும், நல்வழியில் அமையச்செய்ய வ.வே.சு. ஐயர் அவர்கள் எழுதியுள்ள "சிறுகதைகள்" போன்ற புத்தகங் களைப் படித்தல் நல்ல சாதனமாகும். இக்கதைகளை ஒருவன் படித்து, புத்தகத்தைக் கீழே வைக்கும் காலத்தில் அவன் மனதில் பரிசுத்தமான உணர்ச்சிகளும் உன்னதமான எண்ணங்களும் ததும் பும்" என்று இராஜாஜி அவர்கள் அளித்த இம்முகவுரையுடன் இந் நூலைச் சென்னை அல்லயன்ஸ் கம்பெனியார் 1953 ஆகஸ்டில் நான்காம் பதிப்பாக வெளியிட்டுள்ளனர்.

புதுச்சேரி "கம்பநிலைய"த்தில் இருந்து முதலில் ஐந்துகதை களுடன் வெளியான இந்நூல்களுக்கு ஆசிரியர் வ.வே.சுப்ரமணிய ஐயர் எழுதி உள்ள முகவரையின் முடிவில் கதையின் இலக்கணம் பற்றியும் அவை அமையவேண்டிய கட்டுக்கோப்பு பற்றியும் மூன்றே சொற்றொடர்களில் குறிப்பிடுகிறார்.

"கதைகள் கவிதை நிரம்பியவையாய், ரஸபாவோ பேதமாய் இருக்கவேண்டும் என்பது எனது அபிப்பிராயம். இக்கதைகளை இவ்வாறு செய்ய முயன்றிருக்கின்றேன். அம்முயற்சி பூர்த்தியான பயனைத் தரவில்லையானாலும் முயற்சி மாத்திரத்துக்காகவாவது இவைகளில் உள்ள குற்றங்களை மன்னித்துக் கொள்ளும்படி ரஸி கர்களை வேண்டுகிறேன்".

கடைசிப் பத்தியில் சிறுகதையின் தன்மையைக் குறிப்பிட்டு, தமது பணியின் தன்னடக்கத்தையும் தெரிவித்து உள்ள வ:வே.சு.ஐயர் அவர்களின் இக்கதைத் தொகுப்பை ஐம்பது ஆண்டுகள் கழித்து தொ.மு.சி.ரகுநாதன் அருமையாக மதிப்பீடு செய்து பாராட்டியுள்ளார்.

இக்கதைகள் தம் உள்ளத்தில் எவ்வாறு கிளர்ந்தன என்பதையும் வ.வே.சு.ஐயர் முகவுரையில் குறிப்பிடுகிறார்.

"மங்கையர்க்கரசியின் காதலும், காங்கேயனும் கயேலிக் மகாகவியான ஓஸ்ஸியனுடைய காவியங்களின் பந்தாவில் எழுதப்பட்டிருக்கின்றன. இவை தமிழ்நாட்டுப் பழைய வீரத்தன்மையையும், பழக்கவழக்கங்களையும் ஒருவாறு விளக்கிக் காட்டும். இவைகளின் தலைப்பில் எழுதியிருக்கும் சூசிகைகளைப் படிக்காமல் கதைகளையே துவக்கிப் படித்தால் சுவை அதிகமாகத் தெரியும். ஆனால் "ரீதி" புதிதாகையால் சிலருக்கு விளங்காமல் போனாலும் போகாலாம் என்று சூசிகையைச் சேர்த்திருக்கிறேன்.

"அழேன் ழக்கே" யின் சரித்திரம் இந்த லோக யுத்தத்தில் நிகழ்ந்த ஓர் உண்மைக்கதை. கமலவிஜயம் என்பது இந்த யுத்தத்தில் நடந்ததாகக் கற்பித்தெழுதிய கதை.

கடைசிக் கதையானது எங்கள் ஊர் 'குளத்தங்கரை அரச மரத்தால்' சொல்லப்பட்டது. அது நன்னூல் முதலிய இலக்கணங்கள் படித்ததில்லை. கிட்டத்தட்ட அது பேசியபடியே எழுதியிருக்கிறேனாதலால் படிப்போர் அக்கதையில் செந்தமிழை எதிர்பாக்க மாட்டார்கள் என நம்புகிறேன்.* * * * நம் கதாநாயகர்கள் பேசிய வார்த்தைகளை அது வழுவின்றி நினைவில் வைத்துக் கொண்டு இருந்தது எனக்கே ஆச்சரியத்தைத் தந்தது. இக்கதையைப் படிப்போர் ருக்மணியை மறவாமல் நினைத்துக் கொண்டு இருப்பார்கள் என்று பூரணமாய் நம்புகிறேன்"

'ரீதிபுதிது' என்று குறிப்பிட்டதானது "வழி புதிது" என்பதாகும்.

வ.வே.சு. ஐயர், "ரீதி புதிதாகையால் சூசிகை சேர்ந்திருக்கிறேன்" என்று கூறியுள்ளதற்குக் காரணம், புதிய வழியில் வாசகர்களைப் பயிற்சி பெற வைப்பதற்குத் தான். வ.வே.சு.ஐயர்தான் முதன்முதலில் 'ரீதிபுதிது' என்னும் பார்வையில் சிறுகதையின் வடிவத்தைத் தமிழில் தெளிவாக்கினார் என்பது "தமிழில் சிறு

கதை வரலாறும் வளர்ச்சியும்" என்னும் நூல் பின்வருமாறு திட்ட வட்டமாகச் சாற்றியுள்ளது!

"ரீதி புதிது" என்பதில்தான் எவ்வளவோ தகவல் அடங்கியிருக்கிறது. இது பழைய சம்பிரதாய நீதிக்கதையல்ல, புதிய மரபில் கதையம்சம், வடிவ அமைப்பு, உணர்வு என்ற அம்சங்களைக் காண்பிக்கவே, ரீதி புதிதென்பார். அலன்போ போன்ற மேனாட்டு இலக்கியவாதிகள் சிறுகதை வடிவத்தைப் பற்றி வகுத்துக் கொடுத்த இலக்கணத்தைத் தமிழில் முதன்முதலாக ஐயர் தான் தமது படைப்பில் தெளிவாக்கினார்."[4]. (சோ. சிவபாத சுந்தரம்)

பாரதியாரின் சிறுகதைகளையும் வ.வே.சு. ஐயரின் சிறு கதைகளையும், "சிட்டி" (பி.ஜி.சுந்தரராஜன்), சோ. சிவபாதசுந்தரம், மாலன் ஆகியோர் ஆழ ஆராய்ந்து இருவரது படைப்புகளையும் ஒப்பிட்டுள்ளனர். இந்த ஒப்பீட்டில் கருத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன. எனினும் வ.வே.சு. ஐயரின் சிறுகதைப் படைப்பு சிறந்தது என எல்லாத் திறனாய்வாளரும் போற்றியுள்ளனர்.

வ.வே.சு. ஐயரின் "குளத்தங்கரை அரசமரம்" என்னும் சிறு கதைத் தொகுப்பு 1917இல் புதுச்சேரியில் மண்டயம் எஸ். சீனிவாசாச்சாரியாரும், வ.வே.சு.ஐயரும் இணைந்து நிறுவிய "கம்பநிலையம்" என்னும் பதிப்பகத்தின் முதல் வெளியீடாக வந்தது. இதில் மங்கையர்க்கரசியின் காதல், காங்கேயன், கமலவிஜயம், அழேன் ழக்கே, குளத்தங்கரை அரசமரம் என்னும் ஐந்து சிறுகதைகள் அடங்கி உள்ளன. வ.வே.சு ஐயரின் மறைவிற்குப் பிறகு 1927ம் ஆண்டு இராஜாஜி அவர்களின் முன்னுரையுடன் வ.வே.சு.வின் துணைவியார் பாக்கியலட்சுமி அம்மையார் தம் கணவரது மூன்று கதைகளையும் சேர்த்து வெளியிட்டார்கள். இம்மூன்றும் வ.வே.சு ஐயரால் "பாலபாரதி"யில் எழுதப் பெற்றவை. "லைலிமஜ்னூன்" (அக்டோபர் 1924) "எதிரொலியாள்" (பிப்ரவரி 1925) "அனார்க்கலி" (ஜுன் 1925) ஆகியன அம்மூன்று கதைகள். தமது நண்பர் ஒருவருக்கு வ.வே.சு. எழுதிய கடிதத்தில் முதல் தொகுப்பின் ஐந்து கதைகள் பற்றிக் குறிப்பிடுகிறார். இக்கடிதம் 1920இல் எழுதப்பெற்றது. "காம்பீர்யம் முதலிய பௌருஷமான

---

[4] "தமிழில் சிறுகதை வரலாறும், வளர்ச்சியும் - சோ. சிவபாதசுந்தரம் உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம் (பெ.சு.மணி: மேற்கோள்)

ரசங்களுக்கு நிலையமாக, 'தீரயுகம் பிறக்க வழிகாட்டியாக' அமைவதற்கு "மங்கைக்கரசியின் காதல்" முதலிய கதைகளை வெளிப்படுத்தியதாகவும், கூறிய அவர் அனார்க்கலி முதலிய கதைகளைக் கைப்பழக்கத்திற்காக எழுதி வருகிறேன்" என்றும் குறிப்பிட்டுள்ளார்.

மங்கையர்க்கரசியின் காதல் தொகுப்பில் உள்ள "குளத்தங் கரை அரசமரம்" சிறுகதைக்குரிய இலக்கணத்தை உரு-உள்ளடக்கம் - உத்தி ஆகிய மூன்றையும் சிறக்கப் பெற்றது என்னும் பெருமையைக் கொண்டது. வ.வே.சு. ஐயரின் சிறுக தைப் படைப்பாற்றல் பற்றித் தொ.மு.சி.ரகுநாதன் குறிப்பிடுவதா வது:

"தமிழுக்குச் 'சிறுகதை' என்ற வார்த்தைதான் புதிதே அன்றி, விஷயம் புதிதல்ல. கதை என்பது எல்லா நாட்டிலும் பரம்பரை பரம்பரையாக இருந்து வந்திருக்கிறது. நம் நாட்டிலும் மரியாதை ராமன் கதைகள், பூலோக விநோதக் கதைகள், விக்கிரமாதித்தன் கதைகள், மதனகாமராஜன் கதைகள் எல்லாம் இருந்துதான் வந்தி ருக்கின்றன. தொல்காப்பியத்தில்கூட, "பொய்ம்மொழி" என்ற தொடரால், கதைக்கு இலக்கணம் கூடக் கூறப்பட்டிருக்கிறது. ஆனால் நாம் கவனிக்கவேண்டியது இன்றைய சிறுகதை வளர்ச்சி.

"இன்றைய சிறுகதை வளர்ச்சிக்கு வ.வே.சு. ஐயர்தான் சரி யான வழிகாட்டி. அவருடைய நடைத்தெளிவு ஒருபுறம் இருக்க, கதாம்சம் பிறந்த மேனியுடனேயே காட்சியளிக்கிறது. வ.வே.சு. ஐயரின் அடிச்சுவட்டிலே சென்று, பின் மனதில் தெம்பு ஏற்பட்ட பின், தனக்கென புதுவழி ஏற்படுத்திக் கொண்டவர்கள்தான் இன் றைய கதாசிரியர்கள். வ.வே.சு.ஐயர்தான் இருபதாம் நூற்றாண் டின் சிறுகதை வளர்ச்சிக்கு மூலபுருஷர்.

"வ.வே.சு. ஐயர், பாரதி முதலியவர்களின் தமிழ்த் தொண்டி னால் எழுந்த ஆர்வமும், நாட்டின் தேவையும் தமிழை லகுவாக் கிக் கொடுத்தது" [5]

தமிழில் புகழ்பெற்ற திறனாய்வாளாரன க.நா.சுப்ரமணியம், வ.வே.சு. ஐயரின் சிறுகதை படைக்கும் திறன் பற்றிக் கூறுவதா வது:

[5] இலக்கிய விமரிசனம்: தொ.மு.சி. ரகுநாதன், மீனாட்சி புத்தக நிலை யம்

"இன்று தமிழ் இலக்கியத்தில் தோன்றியிருக்கும் ஒரு புது வேகத்துக்கு, ஒரு புது உயிர்ப்புக்கு அடிகோலியவர் வ.வே.ஸுப்ரமண்ய ஐயர் என்று சொன்னால் அது மிகையாகாது. ஆங்கிலம், பிரெஞ்சு, தமிழ், சமஸ்கிருதம், கிரீக்கு, லத்தின் முதலிய பாஷை இலக்கியங்களையும் இலக்கிய உத்திகளையும் சுயப்பிரக்ஞையுடன், கலைஞனுடைய நோக்குடன் படித்து, அனு பவித்து, அறிந்த ஐயர் அவர்கள் தன் கதைகளுக்கு அற்புதமான உருவகம் கொடுக்க முயன்று வெற்றி பெற்றிருக்கிறார். * * * *

"வ.வே.சு. ஐயர், வேறு எந்தக் காரியத்தையும் செய்யாதிருந் தாலும் வேறு எதையுமே எழுதாதிருந்தாலும் இந்த ஒரு கதையை எழுதிய ஒரு காரணத்தினாலேயே தமிழர்களின் நன்றிக்கும், பாராட்டுக்கும் உரியவர் ஆவார் என்பதில் எனக்குச் சற்றும் சந்தே கம் இல்லை. எனக்குத் தெரிந்து இந்தத் தலைமுறையில் எழுதுகி றேன் என்று போராடுகிற ஆசிரியர்களில் யாரும் இந்தக் கதையின் அழகுக்கும், அமைதிக்கும் பலியாகாமல் இருந்ததில்லை."[6]

## குளத்தங்கரை அரசமரம்

இச்சிறுகதை வ.வே.சு ஐயரின் துணைவியார் ஸு. பாக் யலக்ஷ்மி அம்மாள் பெயரில் 1915 செப்டம்பரில் "விவேக போதினி" என்னும் மாத இதழில் வெளிவந்தது. வ.வே.சு. ஐயர் கவிஞர் தாகூரின் "படித்துறையின் கதை"யைப் படித்த தாக்கத்தி னால் அக்கதையின் உத்தியைப் பின்பற்றியுள்ளதாகப் பெ.சு.மணி குறிப்பிட்டுள்ளார். "படித்துறைக்கதையில்" குஸுமா, குளத்தங் கரை அரசமரத்தின் ருக்மணி இருவர் பாத்திரப்படைப்பும் முறையே படித்துறை, அரசமரம் இவற்றின் பரிவு பாசத்துடன் மனநெகிழ்ச்சி நனிவிளங்கப் படைக்கப்பட்டுள்ளன. இருவரது முடிவுகளும் சோகத்தில் தோய்கின்றது."[7]

வ.வே.சு ஐயரின் குளத்தங்கரை அரசமரம் துன்பியலில் முடிந்தது பற்றி, யதுகிரி அம்மாள் நினைவு கூர்ந்து எழுதுகிறார்!

"ஐயர் அப்பொழுது "மங்கையர்க்கரசியின் காதல்", "குளத் தங்கரை அரசமரம்" இரண்டு கதைகளை எழுதி முடித்திருந்தார்.

---

[6] பார்வையில் இலக்கிய வளர்ச்சி, க.நா. சுப்பரமண்யம், மணிவாசகர் நூலகம், சென்னை, 1986

[7] வ.வே.சு.ஐயர் அரசியல் - இலக்கியப்பணிகள்/உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம் 1987

இரண்டும் துக்கமயமான கதைகள். நான் நாகராஜனை நன்றாக வைதேன். ஐயர்; 'எல்லாம் சௌக்கியமாகவும், சந்தோஷமாகவும் இருப்பதால், இதிலும் ஒரு புது ருசி இருக்கிறதம்மா'' என்றார்.[7]

குளத்தங்கரை அரசமரத்துக் கதையின் ருக்மணி கதாபாத் திரம் பாரதியார், அவரது மனைவி செல்லம்மாள், மகள் தங்கம் மாள் பாரதி அனைவரையும் தாக்கத்திற்குள்ளாக்கியிருக்கிறது. வ.வே.சு.ஐயர் துன்பியல் கதைகளை வடிக்கும் ஆற்றலில் வல்ல வர் என்பதைச் செல்லம்மாள் பாரதி அறிவார். அவர் அக்கதை யைப் பற்றி நினைவு கூர்ந்து தம் "பாரதியார் சரித்திரத்தில்" எழுதி யிருப்பதாவது.

"ஸ்ரீவ.வே.சு.ஐயர் சோக ரசமாகக் கதைகள் எழுதுவதி லேயே பிரியங்கொண்டவர். 'குளத்தங்கரை அரசமரம்' என்ற கதையைப் பாதி எழுதியவுடன் எங்களிடம் படித்துக் காண்பித் தார். மறுநாள் பாரதியார் மட்டும் அவர் வீட்டுக்குப் போயிருந் தார். திரும்ப வீடு வந்ததும், "அப்பா! ஐயர் கதையை எவ்விதம் முடித்திருக்கிறார்?'' என்று தங்கம்மாள் கேட்பானேன்?'' 'அந்தப் பேதைப் பெண் ருக்மணியைக் குளத்தில் தள்ளியாயிற்று' என்று சிறிது வருத்தத்தோடு சொன்னார்.[8]

* * * * "திருவல்லிக்கேணி கடலுக்கு வ.வே.சு. ஐயரின் குளத்தங்கரை அரசமரத்தைப் போல் பேசும் சக்தியிருந்தால், அன் றிலிருந்து இன்று வரை கடற்கரை நிகழ்ச்சிகளை என்ன ரசமாய்க் கூறியிருக்கும்''[8]

ஒரு அரசமரம் தன்னுடைய நிழலில் நிகழ்ந்த நூற்றுக்கணக் கான நிகழ்ச்சிகளில் (தன்னுடைய தொண்ணூறு ஆண்டுக்கால வாழ்வில்) ருக்மணி நாகராஜன் கதையைத் தானே சொல்லுமாறு வ.வே.சு.ஐயர் எழுதியுள்ளார். இதில் ருக்மணியின் தந்தையார் காமேசுவரய்யர் வணிகத்தில் நொடித்துப் போகிறார். அவருடைய மனைவி மீனாட்சி அம்மாள் பொறுமைசாலி. காமேசுவரய்யர் கை நொடித்ததும் அவருடைய தந்தை இராமசுவாமி அய்யருக்குப் பிடிப்பு விட்டது. அவருடைய மனைவி ஜானகியும் அவரோடு சேர்ந்து கொண்டு ருக்மணியை வாழாவெட்டியாக்கி, நாகராஜ னுக்கு வேறு திருமண ஏற்பாடு செய்துவந்தனர். நாகராஜன் தன்

[7] பாரதிநினைவுகள்: யதுகிரி அம்மாள், 1958

[8] பாரதியார் சரித்திரம்: செல்லம்மாள் பாரதி, பாரிநிலையம் 1977

நண்பன் ஸ்ரீனிவாசனுக்குக் கல்நெஞ்சினைப் போல் தோன்று கிறான். ஆனால் நாகராஜன் தன் பெற்றோருடைய ஏற்பாட்டுக்கு இணங்குவதுபோல் நடித்து அவர்களைக் கடைசி நேரத்தில் ஏமாற் றப் போவதாகக் கூறுகிறான். ருக்மணியைக் கைவிடப்போவ தில்லை என்று உறுதிகூறி, அந்தத் திட்டத்தை யாருக்கும் சொல்ல வேண்டாம் என்று ஸ்ரீனிவாசனிடம் கேட்டுக் கொள்ளுகிறான். ருக்மணியை நாகராஜன் சந்திக்க, அவள் அழத் தான் அவளைக் கைவிடமாட்டேன் என்று உறுதி கூறுகிறான். மறுநாள் காலையில் அரச மரத்தடியில் சந்திப்பதாக உறுதி கூறுகிறான். அவனுடைய இரகசியத் திட்டத்தை அவளிடம் கூறவில்லை.

நாகராஜனுக்கு வேறொரு பெண்ணை மறுநாள் திருமணம் செய்து வைப்பதாக ஏற்பாடாகி இருந்தது. இதை அறிந்த ருக்மணி "குளத்தங்கரை அரசமரத்திற்கு" வருகிறாள். அரச மரத்தடியில் நாகராஜன் ருக்மணியைச் சந்திக்கக் குறித்த நேரத்தில் வரவில்லை. பெரு மழை பெய்கிறது. ருக்மணி குளத்தில் இறங்கி இறந்து விடு கிறாள். தாமதமாய் வந்த நாகராஜன் புலம்புகிறான். அவளிடத் தில் தான் மனத்தில் மறைத்து வைத்து இருந்த ரகசியத்தைக் கூறா தலால் அவள் மாண்டு விட்டதை நினைத்துக் கண்ணீர் வடிக்கின்றான்.

இக் கதையை ஒரு நீதிபோதனைக் குறிப்புடன் வ.வே.சு.ஐயர் முடித்துள்ளார்.

"என் அருமைக் குழந்தைகளே! பெண்கள் மனசு நோகும் படி ஏதாவது செய்யத் தோன்றும் போது இனிமேல் இந்தக் கதையை நினைத்துப் பார்த்துக் கொள்ளுங்கள். விளையாட்டுக்கா கக் கூடப் பெண்களாய்ப் பிறந்தவர்களின் மனத்தைக் கசக்க வேண்டாம். எந்த விளையாட்டு என்ன வினைக்குக் கொண்டு போய் வந்துவிடும் என்று யாரால் சொல்லமுடியும்."

இவ்வாறான முடிவுக் குறிப்பு சில திறனாய்வாளர்களுக்குப் பிடிக்கவில்லை. படைப்பாசிரியருக்கு அவ்வாறு முடிக்கத் தோன் றியது. அவ்வாறே முடித்தார். அவ்வளவே.

எவ்வாறாயினும், பல அம்சங்களில் "குளத்தங்கரை அரச மரம்" தமிழ்ச் சிறுகதை வரலாற்றில் முன்னோடியாக விளங்குகி றது என்பதே திறனாய்வாளர்களின் ஒருமித்த கருத்தாகும்.

கதை அழகான நடையில் ஆற்றொழுக்காய் மிளிர்கின்றது. ருக்மணியை அரசமரம் வருணிக்கும் பகுதி:

"பார்வையிலுந்தான் எத்தனை அன்பு! எத்தனை பரிவு! என்னைப் பிரதக்ஷிணை செய்வாள். அப்போது அவள் ஸோமவார அமாவாசைகளில் பரமாத்மாவைப் பூஜிக்கிறதற்காக என்னைப் பார்க்கும் பார்வையிலிருக்கும் அன்பை என்னவென்று சொல்வேன்? என்னுடைய காய்ந்து போன கப்புகளும் கூட அவளுடைய பிரேமையான பார்வைபட்டதும் துளிர்ந்துவிடுமே! என் ருக்மணித் தங்கமே, எப்போ காண்பேன் இனிமேல் உன்னைப் போலக் குழந்தைகளை"

இவ்வரிகள் வ.வே.சு. ஐயர் பேசியவை அன்று; அரசமரம் பேசிற்று, உயிராக நின்று பேசிற்று, நம் உயிரைத் தொடும்படிப் பேசிற்று.

ஏனைய கதைகள் சில, வரலாற்றுச் செய்திகள் சிலவற்றை அடிப்படையாகக் கொண்டவை. காதலையும் வீரத்தையும் இணைத்துச் சில சிறுகதைகள் எழுதப்பட்டுள்ளன.

புதுமைப்பித்தன், அவருடைய கதைகளைப் பற்றிக் கூறுகையில் "அவருடைய கதைகளில் பாலையின் வெக்கை நம்மைப் பொசுக்கும். முகலாய நந்தவனத்து அந்தப்புரங்களின் வைபவம் நம்மைக் களிப்பூட்டும். கிரேக்க தேசத்துக் கடவுளர் நம்முடன் உறவாடுவர். பிரெஞ்சுப் போர்க்கள ரத்தப் பயங்கரம் நம்மை மிரட்டும். பிறநாட்டு மரபுகளையும் பெயர்களையும் நம்மால் ரசிக்கமுடியாது என இன்றைய விமர்சகர்கள் சிலர் சொல்லிக் கொண்டிருப்பதற்குத் தகுந்த பதில் அவர் கதைகள்" என்று குறிப்பிட்டுள்ளார்."[9]

## மங்கையர்க்கரசியின் காதல்

ஏனைய கதைகளைக் காண்போம். அரச குடும்பத்தைச் சேர்ந்த மங்கையர்க்கரசி, கருணாகரன் என்னும் வீர இளஞனைக் காதலிக்கிறாள். அவனையே திருமணம் செய்து கொள்ள விரும்புகிறாள். அவனைக் காளிகோயிலுக்கு அன்று இரவு வரச்சொல்லி விட்டு, இவள் போய்க் காத்திருக்கிறாள். ஆனால் மார்த்தாண்டன் என்பவனோ மங்கையர்க்கரசியை மணக்க விரும்பினான். கருணாகரனைக் கொன்றுவிட்டு, காளிக் கோயில் சென்று நடந்ததை மங்கையர்க்கரசியிடம் கூறுகிறான்.

வ.வே.சு.ஐயர் இக்கதையில் இங்கொரு திருப்பத்தைத் தந்து படிப்போரை நாடகம் பார்ப்பது போல் செய்து விடுகிறார். இங்கு அவர் கையாளும் உத்தி திறனாய்வாளருக்கு ஒரு நல்விருந்தாகும்.

[9] புதுமைப் பித்தன் கட்டுரைகள் 1954

மார்த்தாண்டனிடம் கருணாகரனின் உடலைத் தனக்குக் காட்டுமாறு மங்கையர்க்கரசி கூற, அவளை அவன் ஒரு மரத்த டிக்கு அழைத்துச் செல்கிறாள். அங்கே குத்துண்டு கிடந்த கருணா கரனின் சடலத்தின் மீது விழுந்து அழுதுபுரண்டு எழுந்து மார்த் தாண்டனை நெருங்கி வந்து தனது கை ஈட்டியை உருவி அவன் மீது பெண் புலி போல் பாய்ந்து அவனைக் குத்தி வீழ்த்திவிட் டாள். பின்னர் தன்னையும் வாளால் குத்திக் கொண்டு மாள் கிறாள்.

தமிழ்நாட்டில் பல பெண்களின் காதல் இவ்வாறு நிறைவே றாது மரணத்தில் முடிகின்றது; காதலுக்கு எதிர்மறை நாயகர்கள் எப்போதும் இருந்திருக்கிறார்கள் என்பதை இக்கதையின் கரு காட்டுகிறது. கதாசிரியர் ஆறுபக்கத்துக்குள் அடக்கிய இச்சிறு கதையில் இரவு வேளையில் உண்டாகும் ஒலிகளைச் சொற்களால் ஓவியமாகத் தீட்டியுள்ளார். நொடிப்பொழுதில் மங்கையர்க்கரசி செயல்பட்ட விதங்களைப் படிப்போர் உள்ளங்களைத் தொடும் படி விவரித்துள்ளார்.

## கமல விஜயம் - காங்கேயன்

"கமல விஜயம்" என்னும் சிறுகதையில், கமலம் தான் காத லிக்கும் விஜயனைத் திருமணம் செய்து கொள்ளமுடியாமல் பல தடைகள் உறவினர்களால் உண்டாக்கப்படுகின்றன. பல ஆண்டு கள் கழித்து, கமலம் விஜயனைப் பம்பாயில் கண்டு மணம் முடிக்கிறாள். கதைச் சுருக்கம் இதுதான்.

ஆனால் இதில் விஜயன் மானம் உள்ளவனாகச் சித்திரிக்கப் பட்டுள்ளான். தான் பட்ட கடனுக்காக; தன்னுடைய ஜமீனையே விற்றுவிட்டுத் தன் காதலியின் மனம் நோகாதிருக்கக் காதலையும் துறந்து வெறும் கையோடு வெளியூர் செல்லும் அந்த மானம் உள்ள மனிதன் இராணுவத்தில் சேருகிறான். போர் முடிந்ததும் கப்பலில் பம்பாய் வருகிறான். பல வீரர்கள் உடல் ஊன முற்றுத் திரும்புகிறார்கள். லட்சுமணத் தேவன் கமலத்திற்கு உதவுகிறான். கமலம் கப்பலில் விஜயனைக் காணுகிறாள்.

போர்க்காலக் கொடுமைகளால் பாதிப்புற்ற படைவீரர்களை யும் அவர்களைக் கப்பலில் சந்திக்க வந்த குடும்பத்தினரையும் உணர்ச்சிக் குமுறல்களுடன் வ.வே.சு. சித்திரித்துள்ளார்:

"இந்தப்புறம் ஒரு கிழவன் தடியை ஊன்றிக்கொண்டு வந்து, மார்பிலும் முகத்திலும் காயம் பட்டுப் புகழெய்திய தன் மகனை

அணைத்துக் கொண்டிருந்தான். அந்தப்புறம் பாஸ்ராவிலிருந்து திரும்பி வந்த மகனைக் கண்டு அவன் தாய் ஆனந்தக் கண்ணீர் விட்டுக் கொண்டிருந்தாள். இன்னொரு பக்கத்தில் ஓர் இளங்குழந் தையைக் கையில் எடுத்துக் கொண்டு, முதலில் தன் புருஷன் இறந்து போய்விட்டான் என்று தப்பாய் வந்த விளம்பரத்தைக் கண்டு மனமுடைந்து போன ஒரு ஸ்த்ரீ உயிருடன் திரும்பிய தன் கணவன் கை, தன் மீது படப் பிரக்கிஞையை இழந்தவள் போலா கிவிட்டாள். அவள் மனதில் பிறந்த களிப்பை யாரால் அளவிடலா கும்? வேறொரு விசிப் பலகையின் மீது படுகாயம் பட்டுப் பலத்தகட்டுகள் கட்டிக்கொண்டிருந்த ஒரு வீரன் தன் குழந்தைக்கு மூச்சுக் கூடத் திணறும் படி முத்தமிட்டுக் கொண்டிருந்தான். ஒரு மாதத்திற்கு முன் ஒரு ஜெர்மன் குண்டு அவன் மீது வெடித்த காலத்தில், ஏது இனி நம் குழந்தையை நாம் பார்க்கப் போவ தில்லை என்றே நினைத்து விட்டிருந்தான். அவனுடைய ஆனந்தத் திற்கு இப்பொழுது எல்லையும் இருக்குமோ? அதிகம் என்னத் திற்கு? அந்தச் சுப முகூர்த்தத்தில் ஆனந்தக் கண்ணீரால் நனைபடாத கன்னம் அக்கப்பலில் இல்லவே இல்லை''

இக்கதை படிப்போர் மனத்தை நனைக்கச் செய்கிறது. இக் கதையில் போரின் விளைவுகளை அவர் விளக்கியது படிப்போரை வியப்படைய வைக்கின்றது.

''காங்கேயன்'' கதையில் சங்ககால நன்னனை மாதவி என்பா ளுடன் காதல் கொள்ள வைத்துள்ளார். அகப்புற இலக்கியத்தின் தாக்குதலால் வ.வே.சு.ஐயர் உந்தப்பட்டுள்ளார் என்பதை இக் கதை புலப்படுத்துகின்றது.

கதையின் தொடக்கவரிகளே காதல் கனிந்த வரிகளாகக் காணக்கிடக்கின்றன. 'காதல்' என்னும் இது என்ன? மனதைத் துடிக்கச் செய்கிறது. உடலை உருக்குகிறது!.

'தென்றல் உடலை எரிக்கிறது. தாமரைமலர் கைக்குச் சுடு கிறது. விளையாட்டுப் பிடிக்கவில்லை. சேடியரின் கூட்டம் கசந்து விட்டது. தனிமை வேண்டியிருக்கிறது. ஆனால் தனிமையில் மனதே மனதைத் தின்கிறது.''

''தூக்கம் கண்ணை விட்டு அகன்று விட்டது. ஒருவேளை மெய்மறந்து கண் மூடினால் காதலனுடைய அழகிய உருவம் கன விலுள் தோன்றி என்னை வருத்துகின்றது.''

அகச்சுவையில் கழிபடர் கிளவிக் கென்றே இச்சிறுகதை எழுதப்பட்டிருக்கவேண்டும். வ்.வே.சு.ஐயர் தாம் ஊன்றிப் படித்த குறுந்தொகைப் பாடல்களில் தலைவி, தனிமையில் வாழும் நான்கைந்து பாடல்களின் சாரத்தை இங்கே பிழிந்து தந்திருக்க வேண்டும்.

அவலச்சுவையை ஆழப்பதிய வைப்பதில் "குளத்தங்கரை அரசமரத்"தில் நம்மைக் கவர்ந்த கதாசிரியர், உவகைச் சுவையைக் "காங்கேயன்"னில் கவினுறக் காட்டுகின்றார்.

இயல்பாகவே அவலச்சுவை படிப்போரது நெஞ்சை நெகிழ வைக்கும். எனவே "குளத்தங்கரை அரசமரத்தின்" கதையில் தம்மைப் பறிகொடுத்த க.நா.சு. "நிறைவேறிய காதலைச் சொல்லுகின்ற 'கமல விஜயம்' என்னும் கதை மற்ற கதைகளைப் போல் அவ்வளவு வெற்றியடையவில்லை" என்கிறார்.

எல்லாக் காதல்களுமா நிறைவேறாமல் போய்விட்டன? ஷேக்ஸ்பியர் கூடத் தம்முடைய படைப்பில் பாதியைத் துன்பச் சுவையாக அன்றோ முடித்திருக்கிறார்? வாழ்க்கையில் மறுபாதி வெற்றி இன்பச் சுவைக்கு உண்டு என்பதைத் திறனாய்வாளர்கள் மறக்கக் கூடாது; மறுக்கவும் கூடாது.

"நன்னன் பெற்ற செல்வமே! என் மனமாகிய பாற்கடலில் எழுந்த அமுதகலசமே! அவிர் வெண்திங்களே! நின் காதலைப் பெற்ற பாக்கியமே பாக்கியம்" இவ்வருணனைச் சொற்களின் அடியோட்டம் சங்ககாலத்துக்கன்றோ நம்மைக் கொண்டு செல்கின்றது?

## லைலிமஜ்னூன்

வ.வே.சு. ஐயர் "லைலாமஜ்னூன்" என்னும் புகழ்பெற்ற சிறுகதைய்யை "லைலிமஜ்னூன்" என்னும் தலைப்பில் எழுதியுள்ளார். ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த நிஜாமி என்னும் பாரசிகக் கவிஞர் வடித்த இந்த அரிய காதல் காவியம் ஒரு கண்ணீர்க் காவியமே. எத்தனை முறை இக்கதையைப் படித்தாலும் மனம் சலிப்பதில்லை. திரையில் பார்த்தாலும் கதையோடு ஐக்கியமாகி விடுகின்றோம். இந்த பாரசிகக் கதையைத் தழுவி எழுதும் போது தாம் எடுத்துக் கொண்ட உரிமை பற்றியும் வ.வே.சு.ஐயர் எழுத்தாளரின் உரிமை என்ற வகையில் கூறுவதாவது:

“இங்கு நான் செய்யும் கற்பனை அவனது கற்பனையி னின்று பல இடங்களில் மாறுபட்டு இருக்கும். ஆனால் கதை களுக்கு அவரவர்களுடைய சுவைக்கும் ஆற்றலுக்கும் தக்கபடி புதிய உருவங்கள் கொடுப்பது ஆசிரியர்களுக்குத் தொன்று தொட்டு வந்து இருக்கும் பழக்கமாகும்.”

அரேபிய மக்களின் அன்றாட வாழ்க்கை முறையையும், பெற்றோர்களுக்கே உள்ள இயல்பான காதல் எதிர்ப்புடன் பிடிவா தக் கொள்கைகளையும் இந்நெடுங்கதையில் ஆங்காங்கே காண லாம். இக்கதையை வ.வே.சு.ஐயர் இவ்வாறு முடித்துள்ளார்:

“மேல் உலகத்தில் இரண்டு காதலர்களும் சந்தித்து அழியாத ஆனந்தத்தை அனுபவிக்கிறார்கள் என்பதில் சந்தேகமில்லை. இவ் வுலகத்திலும் மாறாத அன்புக்கு இவர்களுடைய பேரைவிட உயர்ந்த உதாரணம் கிடையாது.”

காதல் அமரத்துவமானது என்பதை ஆசிரியரே கூறிக் கதையை முடித்துவிட்டார்.

இச்சிறுகதை “ஜஹாங்கீரின் முதல் காதல்” எனும் தலைப் பில் முன்னர் பால பாரதியில் வெளியானது.

அனார்க்கலி கதையும், அழியாத ஒரு காதல் ஓவியமே. இக் கதையினால் தாக்கம் பெறாத இலக்கியவாதி எவரும் இருக்கமுடி யாது. அந்தத் தாக்கத்தை வ.வே.சு. குறிப்பிட்டுக் கதையை விரி வாக எழுதியுள்ளார்.

“மாடர்ன் ரிவியூ”வில் சில வருஷங்களுக்கு முன், ஆங்கில இலக்கியப் பண்டிதரான ஸ்ரீமான் ப.சேஷாத்திரி, இக்கதாநாயகி யைப் பற்றி சானட் (sonnet) என்று சொல்லப்படுகிற பதினான்கு வரிகளடங்கிய ஒரு செய்யுள் எழுதி வெளியிட்டிருந்தார். அச்செய் யுளில் கண்ட சரித்திரம், புனைந்து எழுதத் தகுதியுள்ள அழகு வாய்ந்ததாக நமக்குக் காணப்பட்டமையால், அதை நமது மனோ தர்மமாகிய சிற்பியைக் கொண்டு புனைவித்தோம். இங்கு வெளி வரும் சிறுகதை அம் மனோதர்மத்தின் புனைவேயாகும். ஸ்ரீரவீந்திரநாத்தாகூரும் இக்கதையைத் தம் மனோபாவத்தால் சித் திரித்து எழுதியிருக்கிறார் என்று அறிகிறோம்.”

இந்தக் குறிப்பே தாகூர் போன்றவர்களையும், அனார்க்கலி சலிம் கதையை வெகுவாக ஈர்த்திருக்கின்றது என்பதற்குச் சான்றாகும்.

## அழேன் மூக்கே

"அழேன் மூக்கே" சிறுகதை, கற்பனைக் கதையன்று. முதல் உலகப் போரின் போது ஜெர்மானிய ஆதிக்கம் ஃபிரெஞ்சு நாட்டில் பரவியபோது, தன் நாட்டுக்காகத் தியாகம் செய்ய தன் நாட்டுக் காவல் தேவதைக்காகத் தன்னைப் பலி கொடுக்க முன் வந்த மாவீரன் ஒருவனின் உண்மைக்கதை.

இக்கதை நாட்டுப்பற்றின் சிறப்புகள், தியாகத்தின் தேவைகள் பற்றி ஆங்காங்கே வலியுறுத்துகின்றது.

அழேன் மூக்கே என்னும் ஃபிரெஞ்சு விடுதலை வீரனைக் கதாசிரியர் கதையின் முன்பத்திகளில் தாய்நாட்டுக்காகத் தம் உயிர்களை விரும்பிப் பலியாகத் தந்த ரோமாபுரி வீரன் குவிந்தக் குர்ஸியன், சித்தூர் வீரன் ராணா லட்சுமண சிங்கின் வீரப்புதல்வர்கள் ஆகியோர் பதித்த தியாகத்துடன் ஒப்பிட்டு வியந்து விவரித்துள்ளார்.

ஜெர்மானியர் பிடியிலிருந்து தன் தாய்நாட்டை விடுவிக்க அழேன் மூக்கே தனித்த வகையில் புரிந்த சாகசச் செயல்கள் படிப்போரை வீரம் கொள்ளச் செய்யும்; தியாகம் புரியத் தூண்டும்.

அழேன் மூக்கே தன் நண்பர்களுடன் அஞ்சாது நின்று, தங்களது கண்களைக் கட்டவிடாது, துப்பாக்கிச் சூட்டில் மாண்ட வீரர்கள். இது சிப்பாய்க் கலகப் புரட்சிவீரன் பகத்சிங்கை நினைவூட்டுகின்றது.

இத்தகைய புரட்சிவீரர்களை இந்தியா உருவாக்கி, விடுதலைப் போரில் அனைவரும் வீரஉணர்வுடன் பங்குபெற வேண்டும் என்பது வ.வே.சு. ஐயரின் உட்கிடக்கை.

அழேன் மூக்கேயின் மனைவி புறநானூற்றில் ஒக்கூர் மாசாத்தியார் விவரித்த வீரத்தாயாகச் சித்திரிக்கப்படுகின்றார். (புறம் 279)

ஃபிரெஞ்சு வீரன் கதை அழகுற சொல்லோவிய மாக்கப்பட்டுள்ளது.

இவ்வாறு எட்டுக் கதைகளையும் பல்வேறு கோணங்களில் வ.வே.சு. ஐயர் தீட்டியிருக்கிறார்.

"தமிழ்நாவல் நூற்றாண்டு வரலாறும், வளர்ச்சியும்", என்னும் (1977) நூலில் "சிட்டி", சோ. சிவபாதசுந்தரம் இருவரும்

வ.வே.சு.ஐயரைச் சிறுகதை முன்னோடி என்றே குறிப்பிடுகின்றனர்.

"இந்த வேள்வியின் தாக்கத்தினால் ஈர்க்கப்பட்டவர்கள் பெரும்பாலும் சிறுகதைகளை எழுதி வ.வே.சு.ஐயர் வழியில், இடையில் குவிந்துபோன குப்பைகளை நீக்கிப் புதுவழிகள் தோற்றுவித்தனர்."

"மணிக்கொடிக்காலம்" என்னும் நூலை 1980ல் எழுதினார், பி.எஸ். இராமையா. அவர் குறிப்பிடுகிறார்:

"அன்றைக்குப் பத்து ஆண்டுகளுக்கு முன் வ.வே.சு.ஐயர் எழுதி வெளியிட்ட சிறுகதைகளைப் பற்றித் தங்கள் எழுத்தில் குறிப்பிட்டவர்கள் "கல்கி", சங்குசுப்பிரமணியன் இருவர்தாம். தமிழில் சிறுகதை என்ற இலக்கியக் கிளையைத் தொடங்கி வைத்தவர் வ.வே.சு. ஐயர்தான் என்று இன்றைய எழுத்தாளர்கள் கருதுகின்றார்கள்.".

சிறுகதை இலக்கிய முன்னோடியாக முத்திரை பெற்று விளங்கிய வ.வே.சு. ஐயர் தம் நாற்பத்து நான்காம் பிராயத்தில் அமரத்துவம் பெறாதிருந்தால் தமிழ் இலக்கிய உலகம் மேலும் பல சிறந்த சிறுகதைகளைப் பெற்றிருந்திருக்கும்.

## எதிரொலியாள்

குருகுலத்தின் மூன்றாம் பதிப்பாகத் 'தமிழ்க் குருகுல' வித்தியாலய ஸ்தாபகாச்சாரியரான ஸ்ரீ.வ.வே. சுப்பிரணிய ஐயர் எழுதி வெளிவந்தது எதிரொலியாள் எனும் நெடுங்கதை. கலி 5027 பங்குனி 22ஆம் நாள் வெளியானது. இந்நூலின் கடைசிப் பக்கத்தில் பாரத்வாஜ ஆசிரம "பாலபாரதி" புத்தக சாலையில் வெளியாகிக் கிடைக்கத்தக்க நூல்களின் பட்டியலை விலையுடன் வெளியிட்டுள்ளது. மகாத்மா காந்தி (2.00), ஆரோக்கியவழி (0.12.0), நீதி தர்மம் (0.6.0), இந்தியாவைப் பற்றிய உண்மை (0. 6.0), கிரிபாலா நாடகம் (0. 6.0), ஜார துஷ்டிரன் (0.1.6), வால்மீகி விஜயம் (1.0.0), விவேகாநந்தரின் வர்த்தமான பாரதம் (1.0.0), தன்னம்பிக்கை (0.8.0), குருகோவிந்த சிங்கன் (0.5.0), இராமகிருஷ்ணாமிருதம் அர்ஜுன் சந்நியாசி (0.2.0) என அச்சிட்டிருக்கக் காணலாம்.

எதிரொலியாள் (Echo) எனும் நூல் இயற்கையின் எழிலுடன், மலையில் காணுறும் இயற்கையைத் தீட்டியுள்ளது. மனிதப் பண்பைச் சித்திரிப்பதுடன், மனிதனின் இயல்புகளை விவரிப்பது. "இக்கதை எத்தனையோ முறை எத்தனையோ மாதிரி எழுதப்

பட்டிருக்கின்றது. ஆனால் எத்தனை முறை வெளிப்படுத்தப் பட்டாலும் அதன் இயற்கைச் சுவை நித்திய யௌவனத்தைத் கொடுத்திருக்கிறது.***"

"நமது கதை கிரேஸ் நாட்டில் வானத்திலுள்ள தேவர்களெல்லாம் பூமியில் வசித்த நாட்களில் நிகழ்ந்ததாகும்" என்கிறார். வ.வே.சு. முதல் பத்தி வரிகளில்.

எலிகம் (Helecom) எனும் மலைச்சாரலில் வதிந்தவள் ஏரை (Hera) என்னும் இளம் அழகி. அவளுக்கு எண்ணற்ற பணிப்பெண்கள் ஏவல் புரிந்து வந்தனர்.

இளமை நிறைந்த தனது பணிப்பெண்கள் எப்போதும் ஆடிப்பாடிப் பரவசமாய் இருக்க வேண்டுமென விரும்புவாள். ஏரை இடும் பணியின் வண்ணம் அடுத்துள்ள சோலைகளிலிருந்து அவர்கள் மான் பிடித்து வருவர். உடைகளைத் தேர்ந்தெடுப்பர். ஏரை, தம் கணவன் ஜேயஸ் (Zeus) எவ்வாறு நடந்து கொள்கிறான் என்றறியத் தன் பணிப்பெண்களை வேவு பார்க்க அனுப்புவாள்.

ஏரை சிடுசிடுப்புக்காரி, பணிப்பெண்கள் வேலைகளைப் புறக்கணித்துவிட்டு விளையாடப் போய்விடுவார்கள். ஆனால் ஏரைக்கு மிகவும் பிடித்தவள், எதிரொலியாள். அவள் நாள்தோறும் எண்ணற்ற இனிய கதைகளைக் கூறி வருவாள். ஆர்வமுடன் எதிரொலியாள் சொல்லிவரும் கதைகளை ஏரை ஆர்வமுடன் கேட்டுக் கொண்டிருக்கும் போது, ஏனைய பணிப்பெண்கள் விளையாடப் போய்விடுவர். கதை முடிவதற்குள் வந்துவிடுவர். இது அன்றாட வழக்கம்.

கற்பனை கலந்த கதைகளைச் சொல்லி வந்தாள், எதிரொலியாள். ஏரையும் அது கேட்டு மகிழ்ந்திருந்தாள். ஒரு நாள் ஏரை தேவலோகம் செல்வதற்காக எல்லா ஏற்பாடுகளையும் செய்யுமாறு பணிப்பெண்களைப் பணித்தாள். வழக்கம் போல் அப்பெண்டிர் சோலைகளில் விளையாடப் புகுந்தனர். எதிரொலியாள் வந்தாள். ஏரையைக் கவரும் கதையை நீட்டிச் சொல்லிக் கொண்டே வந்தாள். அப்போது பணிப்பெண்கள் வந்தனர். அவர்கள் தான் இட்ட பணியை நிறைவேற்றா திருந்ததால், ஏரை முனிந்து, அதற்கு எதிரொலியாளே காரணம் என்று முடிவு செய்து, "உன் பேச்சால் என்னை ஏமாற்றி வந்தாயன்றோ. உன் வாய் இனிமேல் அடைத்துப் போய்விடும். யாராவது பேசினால் அவர்களுடைய கடைசி வார்த்தைகளையே நீ திரும்பச் சொல்லக் கடவாய்; உன் மனதிலுள்ள எதையும் சொல்ல உனக்குச் சக்தி அற்றுப் போய்விடும்" என்று சபித்துவிட்டாள்.

சாபம் பலித்தது. எதிரொலியாள் ஏங்கி அழுதாள். ஒருநாள் நாரசிஸ்ஸன் என்னும் அழகனைக் கண்டாள். அவனோ தன் முகத்தை எதிலும் பார்க்கக் கூடாது என்னும் சாபம் பெற்றிருந்த வன். எதிரொலியாள் அவனைக் கண்டு, காமுற்றாள். அவன் பேசும் பேச்சுக்களின் இறுதிச் சொற்களை ஏரையின் சாபத்தின் படிக் கூறிவந்தாள்

எரிச்சலுற்ற நாரசிஸ்ஸன் ஓடைப்பக்கம் சென்று தன் முகத்தை நீரின் நிழலில் கண்டு அவ்வுரு எழிலார்ந்த பெண் என்று எண்ணித் தானும் நீரில் வீழ்ந்துவிட்டான். எதிரொலியாள் இது கண்டு வருந்திப் பேதுற்று மலைகளிலும் சோலைகளிலும் திரிந்து உருக்குலைந்து தேய்ந்து போனாள். அவளது குரலே காடு வனாந் தரங்களில் இன்று வதியும் பறவைகளின் இனிய ஒலியாயிற்று. கதைச்சுருக்கம் இதுதான்.

அழகான நாரசிஸ்ஸன் தன் உருவைப்பெண் உரு என்று நீரில் கண்டு மயங்கியது போல் அழகர்கள் தம் அழகில் மயங்குவர் எனும் கருத்து வ.வே.சு. ஐயர் அவர்களைக் கவர்ந்துள் ளதால் அதனைப் பதிப்பித்தார் என்று கருதலாம்.

## காபூல்காரன்: தாகூர் சிறுகதை

தாகூரின் இலக்கியப் படைப்புகள் அமரத்துவம் பெற்றவை. எந்நாளும், கற்போர் நெஞ்சைக் கவர வல்லவை. அவரது சிறு கதை ஒவ்வொன்றும் ஒரு சேதியை உள்ளடக்கிக் கொண்டிருக் கும். அவரது படைப்புகள் எல்லாவற்றிலும் மானுடம் மிளிரும்.

வ.வே.சு. ஐயர் அவர்களைத் தாகூரின் சிறுகதைகள் வெகு வாகக் கவர்ந்தன. தாகூரின் "காபூல்காரன்" சிறுகதை ஈர்க்காத இலக்கியவாதியே இல்லை எனலாம். மனிதப் பண்பை வளர்க்க உதவும் கதை இது. பார்க்க முரட்டுத் தனமாகத் தோன்றும் ஒரு "காபூலிவாலா"வின் உள்ளம் எத்தகைய மென்மைப் பண்பினதாக விளங்குகிறது என்பதை இக்கதை எடுத்துக் காட்டும்.

வ.வே.சு. ஐயர் வடித்த இம் மொழிபெயர்ப்பு நூல் அந் நாளில் சென்னை, திருவல்லிக்கேணியின் பேயாழ்வார் கோயில் தெருவில் 3ஆம் எண்ணிட்ட இல்லத்தின் கமலநிலையத்தினரால் வெளியிடப்பட்டது.

வ.வே.சு. ஐயரின் "காபூல்காரன்" மொழிபெயர்ப்புக் கதைக்கு நூலின் முன்னிரு பக்கங்களில் சுசீந்திரம் கி. யக்ஞநாரா

யண அய்யர் எழுதிய மதிப்புரையை ஸ்ரீ. ஸ்ரீ ஆசார்யா மொழி பெயர்க்க அதுவும் வெளியிடப்பட்டுள்ளது. இந்த கதைச் சுருக்க மதிப்புரை வ.வே.சு.ஐயரின் மனநிலையையும் எடுத்துக் காட்டு கிறது.

"பிரகிருதியிலேயே உள்ள சில பொது லக்ஷணங்களால் உல கம் முழுவதும் உறவினரே' என்னும் உண்மைக்குக் "காபூல்கா ரன்" கதை ஒன்றே நல்ல சான்றாகும். பெரிய தடியனான அந்தத் தெரு வியாபாரி தானிருந்த ஆப்கனிஸ்தான மலைச் சார்பை விட்டு, கட்டிடங்கள் நிறைந்த கல்கத்தாவில் தன் அற்ப உணவை சம்பாதித்துக் கொண்டு, தான் ஊரிலேயே விட்டு வந்த தன் சிறு பெண் குழந்தையை நினைத்துக் கொண்டே இருக்கிறான். அதை மறந்து விடாதிருப்பதற்காக, அழுக்குப் படிந்த அக்காகிதத் துண் டில் அக்குழந்தையின் கைச்சுவடு மையினால் தீற்றப் பெற்றதை தன் இருதயத்திற்கு அருகில் வைத்துக் கொண்டு (கல்கத்தா பெண்) மீனுவுக்கு வாதாங் கொட்டைகளையும் பழங்களையும் கொடுத்து வந்தான். மீனுவின் தந்தை காபூல்காரனுக்கு ஸர்வ விதத்திலும் அன்னியனாக இருந்தும் இருவருக்கும் இடையில் மனுஷ்ய சுபாவம் விரிந்த அடிப்படையாக இருப்பதை எடுத்துக் காட்டியது, மனுஷ்யர்கள் எல்லோரும் ஒன்று என்பதைத் தெளி வாக்குகிறது. இந்தத் தத்துவத்தைப் பற்றிச் செய்யும் சுஷ்க உபன் னியாஸங்களைவிட இந்தக் கதை எவ்வளவு சுலபமாக அதை விளக்கிக் காட்டுகிறது.

"இப்படி மனுஷ்ய சுபாவம் ஒன்றாக இருப்பதனால் தேச வேற்றுமைகளிலுண்டான அன்னிய இலக்கியங்களின் சுவையைக் கூட நாம் அனுபவிக்க முடிகிறது. "குழந்தையும் தெய்வமும் கொண்டாடுமிடத்தில்" என்றொரு தமிழ்ப் பழமொழி உண்டு. ரஹமூது வயதில் வித்தியாசப்பட்டு, ஜாதியில் வேறாக இருந்தா லும் குழந்தையான மீனுவின் மனதைக் கவர அவனுக்குச் சாத்திய மாயிற்று.

"கல்யாண காலத்தில் துக்க சமாசாரத்தை ஆசிரியர்கள் அநே கமாய் எடுப்பதில்லை. ஆனால் உண்மையைத் தழுவிப் பரம்ப ரையாய் கொண்டாடப் பட்டு வரும் அந்த நூல்முறையைப் புறக் கணித்துவிட்டார். மீனுவின் கல்யாண சமாசாரத்தைப் பற்றி மனம் உருகும்படிச் சொல்லும்போது வடமொழியில் சாகுந்தலத்தில் கண்வர் சொல்லிய, 'பீட்யந்தே க்ருஹிண: கதம் து தனயா விஷ்

வேஷ துக்கைர் நவை:' என்னும் பாதம் அதைப் படித்தவர்களுக்கு ஞாபகம் வராமலிராது...."

மனித நேயத்தை அடிப்படையாகக் கொண்ட இச்சிறு கதையை வ.வே.சு.ஐயர் எளிய நீரோட்ட நடையில் தமிழில் தந் துள்ளார். உண்மைத் தன்மை ஒவ்வொரு சொற்றொடரிலும் வெளி யாகும் வண்ணம் எழுதியுள்ளார். ஒரு பகுதி:

"இந்தக் காபூலி போன்றவர்களுக்கே, "மாமனார் வீடு" என் பதற்கு இரண்டு பொருள் உண்டு என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம்.

சிறைச்சாலையை சங்கேதமாய் அவர்கள் மாமனார் வீடு என் கிறார்கள். நமக்கு யாதொரு செலவுமில்லாமல் அங்கே எல்லாம் கிடைக்கிறதல்லவா? ஆகையால் அவர் சொல்லுவதை இந்த அர்த் தத்தில் எடுத்துக் கொண்டு "ஹாஹா! என் மாமனார் வந்தானா னால் எலும்பை முறித்து விடுவேனாக்கும்" என்று சொல்லிக் கையையும் ஓங்குவான். இதைக் கேட்டதும் மொத்து வாங்கிக் கொண்டு ஓடுகிற மாமனாரைக் கண்ணாலேயே பார்ப்பது போலவே நினைத்துக்கொண்டு மீனு 'சிரிசிரி' யென்று சிரிப்பாள். அந்தப் பீமசேனனும் அவர்களோடு கூடச் சேர்ந்துகொண்டு சிரிப் பான்."

தாகூரின் உயிரோட்டத்தை உயர் தமிழில் உள்ளது உள்ளபடி கொணர்ந்த பெருமை வ.வே.சு. ஐயர்க்குரியது. அவர் ஆங்கிலத் தில் ஆழ்ந்த புலமை உள்ளவர் என்பதை அவரது ஏனைய படைப் பிலக்கியங்கள் பறைசாற்ற வல்லன. அவரது உள்ளத்தில் ஒளி உண்டானதால், வாக்கினிலும் ஒளி பிறந்ததைக் காணமுடிகிறது.

# 8. சிறுநூல்கள்

## நீக்ரோ மஹான் புக்கர் வாஷிங்டன்

தாழ்த்தப்பட்ட இனத்தில் பிறந்துவிட்ட புக்கர் வாஷிங்டன் தளரா ஊக்கத்துடனும், உழைப்புடனும், நம்பிக்கையுடனும் முன்னிலைக்கு வந்த வரலாற்றை எளிய, இனிய ஈர்க்கும் நடையில் கூறுவது இந்நூல். இதனை அகில பாரத சங்கம், அகில பாரத சர்க்கா சங்கம், தமிழ்நாடு - கதர்மலர், சர்வோதயப் பிரசுராலயம், வீரபாண்டி, திருப்பூர் பதிப்பித்துள்ளது. 72 பக்கங்கள் கொண்ட இதன் விலை அந்நாளில் 8 அணா (50 பைசா). இதன் முதற்பதிப்பு புதுச்சேரியில் வெளியாயிற்று. இது இரண்டாம் பதிப்பாகும். மூன்றாம் பதிப்பு தஞ்சாவூர் சர்வோதயப் பிரசுரத்தாரால் வெளியானது (1960)[1].

இந்நூலுக்கு ஆசிரியர் 'ஜனசேவை' என்னும் அனுபந்தத்தைச் சேர்த்துள்ளார். இது 12 பக்கங்கள் கொண்டது.

புக்கர் டி. வாஷிங்டன் (Booker T. Washington) 1856 முதல் 1915 வரை வாழ்ந்தவர். இவர் அமெரிக்க நீக்ரோக் கல்வியாளர். அவர் தன் சுயவரலாற்றை UP FROM SLAVERY என்னும் நூலாக 1910 இல் வடித்தார். இதனைப் படித்த வ.வே.சு.ஐயர் தமிழில் தழுவி எழுத எண்ணினார்.

தாழ்வுற்று, வறுமையுற்று, அடிமைப்பட்டுப் பாழ்பட்டு நின்ற பாரததேசத்தவர் பாரினில் உயர, இந்நூல் உதவும் என்று வ.வே.சு.ஐயர் எண்ணினார்.

வாஷிங்டனின் வாழ்வும் தொண்டும் தமிழர்களை ஊக்குவிக்கும் என்றும், அவர்களிடையே நிலவும் தாழ்வு மனப்பான்மை அகன்று தன்னம்பிக்கை தந்து, தொண்டில் அவர்களை ஈடுபடச் செய்யும் என்று நம்பினார்.

புக்கர் வாஷிங்டன் வாழ்க்கை வரலாற்றைத் தாம் எழுதிய காரணத்தை வ.வே.சு.ஐயர் குறிப்பிடுவதாவது:

"நீக்ரோக்களைவிட நாம் நாமறிந்ததில் பொறுத்த மட்டில் எண்ணிறந்த மடங்கு மேலானவர்களாகவே இருந்தாலும், சென்ற

---

[1] புக்கர் வாஷிங்டன் சரித்திரம் - வ.வே.சு.ஐயர் - சர்வோதயப் பிரசுராலயம் (1960), மூன்றாம் பதிப்பு.

300 வருஷங்களில் அவரைப் போன்றே பரோபகாரி ஒருவராகி லும் காந்தியைத் தவிர நமது நாட்டில் உதித்தவரே இல்லை. நாம் எல்லோரும் விரும்புகிறது நமது ஜனங்களிடத்தில் ஊக்கமும், திண்மையும், நயமும், தொழில் செய்யும் திறமையும் ஹரிஜன அபிமானமும் வளரவேண்டுமானால் நமது நாட்டில் இந்த வாஷிங்டனைப் போன்ற தந்நலம் கருதா மஹாத்மாக்கள் பலர் வேண்டும். ஆகையால் தேச சேவைபுரிய முன்வரும் தமிழர் இவர் சரித்திரத்தைக் கவனத்துடன் படிக்கவேண்டும்."

19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஆப்பிரிக்காவிலிருந்து அப்பாவி நீக்ரோ இன மக்களை ஐரோப்பியர் பிடித்து வந்து தங் கள் நாடுகளில் விற்று வந்தனர். புக்கர் வாஷிங்டனுக்கு, தமது ஏழாம் வயதில் அமெரிக்காவில் இந்த அடிமை வாழ்வு ஏற்பட்டு விட்டது. உள்நாட்டுச் சண்டை உண்டாகி, இந்த அடிமை முறை ஒழிக்கப்படவேண்டும் என்னும் சட்டம் கொண்டுவரப்படினும், நடைமுறையில் நீக்ரோக்கள் கூலிகளாகவே இருந்து வந்தனர்.

வ.வே.சு ஐயரின் உள்ளத்தில் அடிமைச் சிறுவனான புக்கர் வாஷிங்டனின் வாழ்க்கை பெரும் பாதிப்பை உண்டாக்கிவிட் டது. அடிமைப் பெண்ணின் வயிற்றில் பிறந்த வாஷிங்டன் தன் தந்தையின் பெயர் கூடத் தமக்குத் தெரியாது என்று தமது சுயசரி தையில் குறிப்பிடுவதை, ஐயர் தமது நூலில் அடிக்கோடிட்டுக் காட்டுவதானது, அவரது மனிதாபிமான உள்ளத்தைச் சுட்டுகிறது.

கோணிச் சட்டை போட்டுக் கொண்டு குற்றேவல் புரிந்து வந்த புக்கர் வாஷிங்டன், தாம் தமது முதலாளி வீட்டுப் பிள்ளை களைப் பள்ளிக்கு அழைத்துச் செல்லும் போதெல்லாம் தாமும் கல்வி கற்கவேண்டுமே என்று ஏங்குவார். வாஷிங்டன் அவ்வூரை விட்டு வேறோர் ஊர் சென்று, உப்பளத்தில் நாள்தோறும் ஏழு மணி நேரம் உழைத்தார். பின், பள்ளி சென்று பயின்றார். பின்னர் 500 மைல் (800 கி.மீ) தொலைவில் உள்ள வாஷிங்டன் நகர் சென்று, விடுதிச் சிறுவர்களின் அறைகளைத் துப்புரவு செய்து அதிலிருந்து கிடைக்கும் வருவாயைக் கொண்டு பள்ளியில் பயின் றார்.

அவர் பயின்ற ஹாம்டன் பள்ளியில் கல்வியுடன் தொழிலும் கற்றுத்தரப்பட்டது. வாஷிங்டன் முயன்று படித்து இங்குப் பட் டம் பெற்றார்.

தமது கல்வி தமது சகோதர நீக்ரோக்களை உயரவைக்க

வேண்டும் என்பது அவரது குறிக்கோள். டஸ்கிகீ என்னும் சிற்றூரில் நீக்ரோ இளைஞர்களுக்கு ஆசிரியர் தொழில் கற்றுத்தர வேண்டி, அவரை அம்ஸ்டிராங் என்பார் அனுப்பி வைத்தார். அங்குச் சென்ற வாஷிங்டன் செங்கற்களை மாணவர்களைக் கொண்டு அடுக்கி, சுவர் எழுப்பிக் கட்டிடம் ஒன்றை உருவாக்கினார். வாஷிங்டன் பட்ட அரும்பாட்டைக் கண்ட அவரது முதலாளிகள் அவருக்கு நிறைய நன்கொடை அளித்தனர்.

வெறும் ஏட்டுக்கல்வி மட்டுமின்றி, வேளாண்தொழில் முதலான தொழில்களிலும் வாஷிங்டன் மாணவர்களுக்கு அறிவைப் புகட்டினார். தொழிற் கல்வியே தம் சமூகத்தினர்க்கு ஏற்றம் தர வல்லது என்பது அவரது கோட்பாடு. பள்ளத்தில் வீழ்ந்து பரிதவித்துக் கொண்டிருந்த நீக்ரோ இனத்தவர் இம்முறைக் கல்வியால் உய்ந்தனர். நீக்ரோ இனத்தவரிடையே வாஷிங்டன் உண்மையில், உயர்வின், உழைப்பின் முன்னோடியாக விளங்கினார்.

இந்நூலில் புக்கர் வாஷிங்டன் வெற்றியைக் குறிப்பிடும்போது வ.வே.சு ஐயர், "உண்மையாக மாத்திரம் வேலை செய்தால் ஒரே மனிதன் தாழ்த்தப்பட்டோரை உயர்த்தி விடலாம்" என்பதை இக்கதை உணர்த்துகிறது என்கிறார்.

இது உண்மை. இதனை வ.வே.சு.ஐயர் முழுக்க முழுக்க நம்பினார். எனவேதான் பின்னர் தாம் சேரமாதேவியில் அமைத்த தமிழ் குருகுலத்தில் புக்கர் வாஷிங்டன் ஏற்படுத்திய கல்வி முறையை நடைமுறைக்குக் கொணர்ந்தார். அவ்ருக்குக் காணாடு காத்தான் வயி.சு. சண்முகம் செட்டியார் அளித்த நன்கொடைத் தொகையைக் கொண்டு, இடம் வாங்கி மாணவர்களைக் கொண்டு சூளையிட்டு, கல் எடுத்துச் சுவர் எழுப்பி அருமையான தமிழ் குருகுலம் உருவாக்கினார். அங்குப் பயின்ற மாணவர்களுக்கு வேளாண் இயல், தச்சுத்தொழில் முதலான தொழிற் கல்வியும் போதித்து வந்தார்.

புக்கர் வாஷிங்டனின் வரலாற்றுச் செய்தி தமிழ்நாட்டின் சேரமாதேவியில் எதிரொலித்தது என்பதில் மிகையில்லை. இந்தியத் திருநாட்டில் ஏங்கி வாழும் லட்சக்கணக்கான ஏழை எளிய மக்களையும், ஒதுங்கியிருந்த ஹரிஜனமக்களையும், காந்தியார் முன்னேற்ற எண்ணற்ற திட்டங்கள் தீட்டினார். எல்லாவற்றையும் நடைமுறைப்படுத்தினார். அதுபோன்று வ.வே.சு.ஐயர் புக்கர் வாஷிங்டனின் வரலாற்றை எழுதியதுடன் நில்லாது, அந்த எடுத்

துக்காட்டான வெற்றி நிறைந்த வரலாற்றைத் தமிழ் குருகுலத்தில் நடைமுறைப்படுத்தினார்.

## சந்திரகுப்த சக்ரவர்த்தி சரித்திரம்

வ.வே.சு. ஐயர் அவர்கள் எழுதிய இந்நூலின் முதற்பதிப்பு 1841இல் வெளியானதென, இரண்டாம் பதிப்பை 1961இல் வெளியிட்ட அமுத நிலையத்தினர் குறிப்பிட்டுள்ளனர்.

"காலஞ்சென்ற நாராயண சாஸ்திரியாரின் வாதத்தையும் முத்திராராட்க்ஷஸ நாடகக் கதையையும் அனுபந்தமாகச் சேர்த்து வ.வே. ஸுப்மண்ய ஐயரால் எழுதப்பட்டது" எனும் குறிப்பு நூலின் முகப்புப் பக்கத்தில் காணப்படுகின்றது. அலெக்சாந்தரைக் கண்ட 'சந்திரகுப்த மன்னன் தானும் மனம் வைத்தால் அம் மாபெரும் வீரன் போல் உலகில் ஒரு பெருங்காரியம் செய்து விடலாம் என்று அவனுக்குத் தோன்றியது' என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார். இதைக் குறிப்பிட்டவர், "நம்முடைய காலத்திலும் கூட ஸ்வாமி விவேகானந்தரைப் பார்த்தவர்கள் மற்றவர்களை விடத் தர்மசீலராகவும், உற்சாகவான்களாகவும் இருப்பதை நாம் கண்டிருக்கிறோம்" என்று தெரிவிக்கின்றார்.'

தமிழ்ப்பெரு மன்னர்களாக விளங்கிய பராந்தகன், குலோத்துங்கன், ராஜேந்திரன், ராஜராஜன் முதலிய சோழ அரசர்களது வாழ்க்கையை விரிவாக எழுத அவர் ஆர்வம் கொண்டிருந்தார் என்பதைக் குறிப்பிட்டுள்ளார்.[2]

சந்திரகுப்த மன்னனுடைய ஆட்சியை மெகஸ்தனன் (மெகஸ்தனிஸ்) எழுதிய குறிப்புகளைக் கொண்டு விவரிக்கின்றார்.

அலெக்சாந்தர் மாண்டதும், சந்திரகுப்தன் பஞ்சாப் பகுதியைக் கைப்பற்றியதும் பாடலிபுரம் நோக்கிப் பெரும்படையுடன் சென்று நல்லாதரவு கோரி, மகத நாட்டைத் தக்ஷனிடமிருந்து வென்ற வரலாற்றை ஆசிரியர் விவரிக்கின்றார். சந்திரகுப்தனுக்குத் துணையாக நின்றவன் விஷ்ணுகுப்தன் என்றும் கௌடில்யன் என்றும் அழைக்கப்பட்ட சாணக்கியனே என்றும் குறிப்பிடு

[2] சந்திரகுப்த சக்கரவர்த்தி சரித்திரம் - மகரிஷி வ.வே.சு. ஐயர் - அமுத நிலையம் (பி) லிட்.

கின்றார். சாணக்கியன் தமிழகத்தின் சோழ மண்டலத்திலிருந்து வந்திருக்க 'நியாயம்' உள்ளது என்று ஆசிரியர் நிலை நாட்டுகின் றார்.

பின்னர் ஆசிரியர் வ.வே.சு.ஐயர் சந்திரகுப்தனின் ஆட்சி முறையையும், நாட்டு அமைதியும் நிலைமையையும் விரிவாக விளக்குகின்றார்.

"நாள்தோறும் நாடுக மன்னன், வினைசெய்வான்
கோடாமை, கோடாது உலகு". (குறள்: 520)

எனும் திருக்குறளைச் சந்திரகுப்தன் தன்னுடைய ஆட்சிக் குச் சிறந்த மேற்கோளாக விளங்குவதாகக் கூறியுள்ளார். அறிஞர்க ளைத் தன் அரசவையில் அமர்த்தியிருந்ததையும், வணிகர்களுக் கும், பொதுமக்களுக்கும் போதிய வசதிகள் செய்திருந்தாலும், நகரச் சபைகளை அமைத்து அவற்றைக் குழுக்காளாகப் பிரித்து அவ்வக்குழுக்களுக்கு அதிகாரம் அளித்த சிறப்பையும் குறிப்பிட் டுள்ளார்.

ஒவ்வொரு நகரசபையின் மூன்றாம் குழுவும் நகரத்தின் பிறப்பு- இறப்பு குறிப்புகளை எழுதி வைத்திருந்ததாகவும், ஆசிரி யர் நகரசபையின் நிர்வாகத்திறனைக் குறிப்பிடுகையில் கூறுகி றார். குடிமக்களின் நலன் முழுக்க முழுக்கப் பேணப்பட்டது என் னும் செய்தியைத் தெளிவுபடுத்தி ஒரு நல்ல நாட்டின் இலக்கணமாகச் சந்திரகுப்த மன்னனின் மகத நாடு விளங்கிற்று என்று கூறி மகிழ்கின்றார்.

அரசாங்கமே தறி ஒன்றை நிறுவி வேலையற்றோர் அங்குச் சேர்ந்து பணிபுரிந்து பணம் பெறலாம் என்பதுடன் உடல் ஊன முற்றோர் மூலமாகப் பருத்தி சேகரிக்கும் பணி அமைந்த சிறப் பையும் குறிப்பிடுகின்றார்.

நாடே தூய்மையாக வைக்கப்பட்ட விதத்தைப் பற்றிக் குறிப்பிட்டு, இந்நாளில் நகரங்கள் குப்பைக் கூளங்களால் நாற்ற முடன் விளங்குவதை 'சந்திதெருப் பெருக்கும் சாத்திரம் கற் போம்' என்று பாரதி பகர்ந்ததைக் குறிப்பிட்டு நம் நாட்டு நிலை மையைப் பற்றிச் சுட்டுகிறார்.

சந்திரகுப்தனின் ஆட்சி அசோகர், அக்பர் முதலோரது ஆட்சிகளுக்கு இணையான்து என்கிறார்.

பல பக்கங்களில் மன்னனின் ஆட்சி முறை விவரிக்கப்பட்டி ருப்பதைக் காணும்போது, வ.வே.சு. ஐயர் பயின்ற வரலாற்றுக்

குறிப்புகள் பற்றி வியக்காமலிருக்க முடியவில்லை.

சந்திரகுப்த மௌரியன் பாரசீகத்தைச் சேர்ந்தவன் என ஸ்பூனர் போன்ற சில வரலாற்று ஆசிரியர்கள் கூறியிருப்பதை வலுவான காரணங்களுடன் வ.வே.சு. ஐயர் மறுத்துள்ளார்.

இந்நூலின் இரண்டாம் பகுதியான அனுபந்தத்தில், சென்னை வழக்கறிஞர் தி.ஸ. நாராயண சாஸ்திரி என்பார் எழுதிய 'சங்கரன் காலம்' எனும் நூலை ஆய்ந்து தம் கருத்துக்களைத் தெரிவித்துள்ளார். அதன்படி யுகங்களின் ஆயுளைக் குறிப்பிட்டுக் கலி தொடங்கிய ஆண்டைத் தெளிவாக்கிச் சந்திரகுப்த மன்னன் கி.மு. 322இல் அரியணை ஏறினான் என்று ஆராய்ச்சி செய்திருப்பது வரலாற்று ஆசிரியர்களுக்கு வழிகாட்டும் குறிப்புகளாகும்.

முத்திரராராக்ஷச நாடகக் கதையையும் தக்கபடி ஒப்பிட்டு ஆய்ந்திருப்பது அறிவுக்கு விருந்தாகும்.

நமது இந்திய நாட்டின் வரலாற்றைச் சீராக ஆய்ந்து செப்பனிட்ட முறையில் அவர் எழுத எண்ணியிருந்தார் என்னும் செய்தியை அவரது நூல் புலப்படுத்தக் காணலாம். எனினும் அவர் அம்பாசமுத்திர அருவியின் அழைப்புக்குத் தம் 44ஆம் பிராயத்தில் ஆளானது நமது பேரிழப்புகளில் ஒன்றே!

## குரு கோவிந்த சிங்கன்

இந்நூலின் முதற்பதிப்பு 1925இல் சேரமாதேவி பாரத்வாஜ ஆசிரமத்தின் வெளியீடாக வந்தது. அந்நூலினை வ.வே.சு. ஐயரே எழுதியிருந்த போதிலும் வெளியிட்ட போது "ஒரு தேச பக்தன் எழுதியது" என்றே குறிப்பிட்டுள்ளார். இந்நூலின் முதற்பதிப்பில் முதல் பக்கத்தில் வெளியிடப்பட்டிருப்பதாவது:

*பாலபாரதி பிரசுரம்:*

*குருகோவிந்த சிங்கன்*
*கலி 4793-4810 (தமிழ் எண்களில் அச்சானது)*
*ஒரு தேசபக்தன் எழுதியது*
*பாரத்வாஜ ஆசிரமம் சேரமாதேவி.*

சீக்கியச் சமயத்தில் பத்தாவது குருவாகப் போற்றப்படுகின்றவர் குரு கோவிந்த்சிங். அவுரங்கசீப்பின் அடக்குமுறையைத் தனிக்குழுவாக விளங்கிய தம் படைகொண்டு எதிர்த்தவர். அவர் இந்துக்களையும் முஸ்லீம்களையும் தம்முடைய சமயத்தினுள்ளே

ஒன்று கூட்டி ஒருவழிப்படுத்திச் சென்ற பெருமைக்குரியவர். சுவாமி விவேகானந்தரின் தலைவணக்கம் பெற்ற தகைமையாளர். குரு கோவிந்த்சிங்கின் வீரவரலாற்றைத் தம் சீடர்களுக்கு விவேகானந்தர் அடிக்கடி கூறுவார் என்று சொல்லப்படுகிறது.

இக் குருகோவிந்த் சிங்கின் வரலாற்றை மகாகவி பாரதியார், "குருகோவிந்தர்" என்னும் நீண்ட கவிதையால் படைத்துள்ளார். வ.வே.சு. ஐயர் 1909 டிசம்பர் 29இல் இலண்டனில் குருகோவிந்த் சிங்கின் நினைவு நாளைத் தம் நண்பர்களுடன் கடைப்பிடித்தவர். புதுச்சேரி வாழ்நாட்களில் குருகோவிந்த்சிங் பற்றிய பாரதி பாடல் வ.வே.சு.ஐயரை மறுதாக்கம் செய்திருக்க வேண்டும்.

எனவே வ.வே.சு.ஐயர் குருகோவிந்த்சிங்கின் வரலாற்றைப் பின்னர் விரிவாக எழுதியிருக்கிறார். இந்நூலின் இரண்டாம் பதிப்பு 1934இல் "*சுதந்திரச் சங்கு*" அலுவலகத்தினரால் பதிப்பிக் கப்பெற்றது. 2.4.1961இல் வ.வே.சு.ஐயரின் 80ஆம் ஆண்டின் நினைவாக அதே நிலையம் மறுபடியும் பதித்துள்ளது.

குரு கோவிந்த் சிங்கின் வீர வரலாற்றை ஆசிரியர் வீரச் சொற்களாலேயே எழுதியுள்ளார். குருகோவிந்த் சிங் சீக்கியர் சமயத்தில் 'கால்ஸா' முறையை அறிமுகப்படுத்தினார்.

சீக்கியர்களை ஆசிரியர் இந்நூலில் சிஷ்யர்கள் என்றே குறிப்பிடக் காணலாம். 'கால்ஸா' என்பதற்கு, ஆசிரியர் மூல புருஷர் குழு என்று பொருள் எனக் குறிப்பிடுகின்றார்.

வ.வே.சு. ஐயர் இந்த வரலாற்று நூலை நுட்பமாக எழுதியிருக்கிறார். ஆனால் இது வீர வரலாறு என்பதை நினைவில் கொள்ள வேண்டும். படிப்போர் நெஞ்சைத் தொடும் வண்ணமும், அந்நியர் ஆதிக்கத்துக்கு எதிராக எவரும் எதிர்ப் போரிட்டே ஆக வேண்டும் என்னும் உணர்வையும் வ.வே.சு. ஐயரின் குரு கோவிந்த் சிங் உணர்த்துவார் என்பதில் ஏதும் ஐயமில்லை.

குருகோவிந்த்சிங், தான் காத்து வந்தவர்களால் காட்டிக் கொடுக்கப்பட்டு மரணமுற்றார் என்பது நமக்குத் தெரியும், கதையின் முடிவில், வ.வே.சு. ஐயரின் குறிப்புரை சிந்திக்க வைக்கக் கூடியது.

"குரு கோவிந்தனுடைய வாழ்க்கை விபலமா போயிற்று என்று சிலர் கருதலாம். ஆனால் அறிந்தவர் அவ்வாறு கருதமாட் டார்கள். அவன் தன் சிஷ்யர்களை வைத்துக்கொண்டு பெரியதோர்

யுத்தகளத்தில் ஏகாதிபத்திய சைன்யத்தை ஓர்முறை கூட முறியக்க வில்லை என்பது வாஸ்தவம். சிஷ்யரை ஒரு தனி ராஷ்டிரமாக, ஓர் தனிக்கணமாக அவன் அமைக்கவில்லை என்பது உண்மை.... ஓர் ஐம்பது வருஷத்துக்கெல்லாம் கால்ஸா மறுபடியும் தலையெடுத்துப் பஞ்சாபிலும் காஷ்மீரத்திலும் ஓர் தனிக்கணமாக அவன் அமைக்கவில்லை என்பது உண்மை... ஓர் ஐம்பது வருஷத்துக் கெல்லாம் -கால்ஸா மறுபடியும் தலையெடுத்துப் பஞ்சாபிலும் காஷ்மீரத்திலும் ஓர் பெரிய ராஜ்ஜியத்தை ஸ்தாபித்தது...."

பெரும்பாலும் எல்லா விடுதலை இயக்க வீரர்களுக்கும் துரோகிகளால் ஏற்பட்ட இன்னல் சொல்லி அடங்காதது என்பது "குருகோவிந்தசிங்கன்" வரலாற்றில் காணக்கிடக்கும் உண்மை. நம் நாட்டு விடுதலை வரலாற்றில் ஏற்பட்ட இழுக்கு என்பது நாம் அறிய வேண்டிய பாடம் என்பதை வ.வே.சு. ஐயரின் நூலானது குறிப்பிடாமல் இல்லை.

# 9. திருக்குறள் மொழிபெயர்ப்பு

1914-இல் முதல் உலகப்போர் தொடங்கியபோது புதுச்சேரி யில் வாழ்ந்த சுதேசிகள் மீது பிரிட்டிஷ் இந்திய அதிகாரிகள் வழக் குகளைப் பதிவு செய்து அவர்களை அல்ஜீயர்ஸ் நாட்டிற்குக் கடத்தி விடுவதென்று திட்டமிட்டனர். அப்போதுதான் வ.வே.சு. ஐயர் திருக்குறளை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கத் தொடங்கி யிருந்தார். இதன் தலைப்பு: 'THE KURAL OR THE MAXIMS OF THIRUVALLUVAR'

இந்நூலின் இரண்டாவது பதிப்பில் (1925) அவர் குறிப்பிட்ட தாவது: "முதல் மகாயுத்தம் ஆரம்பமான கொஞ்ச நாளில் எம்டன் யுத்தக் கப்பல் வங்காள விரிகுடாவில் அட்டகாசம் செய்த சமயம். பாண்டிச்சேரியில் சுதேசிகளின் நடவடிக்கைகளைக் கவனிக்க நிறுத்தி வைக்கப்பட்டிருந்த பிரிட்டிஷ் இந்தியப் போலிசார், சுதேசிகளுக்கும் எம்டனுக்கும் தொடர்பு இருப்பதாகக் காட்டி னால் தங்களுக்கு உத்தியோக உயர்வு கிடைக்குமென்ற நப்பாசை கொண்டார்கள். இப்படி அவர்கள் சூழ்ச்சி செய்ததன் பயனாக, பாண்டிச்சேரி சுதேசிகளை வட ஆப்பிரிக்காவுக்கு நாடு கடத்தும் படி சென்னை அரசாங்கம் புதுச்சேரி பிரெஞ்சு இந்திய அரசாங்கத் திற்குச் சிபாரிசு செய்தது."

இதன் தொடர்பாக ஃபிரெஞ்சு போலிசார் சுதேசிகள் மீது பல குற்றச்சாட்டுகளைக் கொண்டு வந்தனர். அவையாவும் விசார ணையில் தள்ளுபடியாயின. இருந்த போதிலும் ஃபிரெஞ்சு கவர் னர், சுதேசிகளை வட ஆப்ரிக்காவிலுள்ள அல்ஜீயர்ஸுக்கு அனுப்பிவிடத் தீர்மானித்தார். ஆனால் அவர்களைத் தாம் கட்டா யப்படுத்தி வெளியேற்றியதாக இருக்கக்கூடாது என்று காட்டிக் கொள்ள விரும்பினார். அதற்காகச் சுதேசிகள் தாங்களாகவே அல் ஜீயர்ஸுக்குப் போய்விட வேண்டுமென்றும், அப்படிப் போகாவிட்டால் என்ன நேரும் என்று சொல்ல முடியாதென்றும் பயமுறுத்தினார். இந்தப் பேரங்கள் நாலைந்து மாதங்கள் நடந் தன.

இந்த அதிசய பேரம் அருமைத் தமிழ் அன்னைக்கு உதவி யாக நின்றது. அல்ஜீயர்ஸ்க்கான வெளியேற்றம் எப்போது வேண் டுமானாலும் நிகழலாம் என்று கருதிய வ.வே.சு. ஐயர், தமிழின் பெருமையறிந்த உலகத்தார் தம்மைப் போற்றும் வண்ணம் 1914

நவம்பர் முதல் நாளன்று திருக்குறள் மொழி பெயர்ப்புப் பணியைத் தொடங்கினார். ஒன்றிய சிந்தனையுடன் குறளைப் படித்து ஓய்வின்றிக் குறள் உணர்வு குன்றாது திருக்குறளை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். இதற்கு ஆங்கிலத்தில் நீண்டதொரு முகவுரை எழுதினார். இந்த மொழிபெயர்ப்பு நூலைச் சுமார் ஐந்து மாதத்திற்குள் எழுதி முடித்தார் என்று வெ. சுவாமிநாத சர்மா தம் 'நான்கண்ட நால்வர்' நூலில் தெரிவிக்கின்றார்.

திருக்குறள் மீதான மதிப்பீடு பற்றிப் *'பாலபாரதி'* இதழில் அவர் குறிப்பிட்டிருப்பதாவது:

"வேதப்பொருளை விரகால் விரித்து, உலகோர் ஓதத் தமிழால், திருவள்ளுவனார் உரை செய்த திருக்குறளை எவ்வகுப்பில் சேர்க்கலாம்? அதுவே அறநூல் - அதுவே ராஜ தந்திர சாஸ்திரம் - அதுவே இன்ப நூல் - அவரோடு சேர்த்துச் சில ஆசிரியர்களைச் சொல்ல வேண்டுமானால் - ஆயினும் அந்தரம் நீளுது அம்மா! பேகனையும் (Bacon) கொண்புங்ஸே (confneius) லாவோத்ஸே (Laotze) முதலிய சீனத்து மகான்களையும், ஸாகியையும் (saqi) ஹாபீஜையும், கபீரையும், எமர்சனையும் (Emerson)தான் சொல்லலாம்."

எந்த இந்திய இலக்கியத்தையும் பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்களோடு ஒப்பிட்டு மதிப்பீடு செய்வது வ.வே.சு. ஐயரின் பண்பு என்பதை இது உணர்த்தும்.

"திருவள்ளுவரையும், கம்பனையும் வ.வே.சு.ஐயர் தமது வழிபடு தெய்வங்களாகவே கொண்டாடி வந்தாரென்று சொல்லலாம் என்று வ.வே.சுவின் அருமை நண்பர் வெ.சாமிநாத சர்மா குறிப்பிட்டுள்ளார்.[1]"

உலக மக்கள் இந்த மொழிபெயர்ப்பின் மூலம் திருக்குறளின் சிறப்பை அறியத் தொடங்கினர். திருக்குறளின் பெருமையைப் பற்றி அவர் குறிப்பிடுகிறார்: 'நடத்தையைப் பற்றிப் பேசினாலும் சரி, இராஜாங்கக் கொள்கையைப் பற்றிப் பேசினாலும் சரி, வாழ்க்கையில் வெற்றி கொள்வதற்கான முறைகளைப் பற்றிப் பேசினாலும் சரி, அல்லது காதலர் நெஞ்சில் நடுக்கமுறும் சிந்தனைகளை வர்ணிப்பதானாலும் சரி, திருவள்ளுவர் எதிலும்

[1] நான் கண்ட நால்வர்: வெ.சாமிநாத சர்மா.

மனித நெஞ்சத்தின் ஆழத்தை அளவிட்டுக் காட்டுகிறார். நீதியின் மென்மையை இவரை விட அதிக அழுத்தத்துடனோ, வன்மையுடனோ, மதாசாரியார்கள் கூட வற்புறுத்தவில்லை."

வ.வே.சு. ஐயரின் திருக்குறள் மொழிபெயர்ப்பு-"The Kural or the Maxims of Thiruvalluvar" என்னும் தலைப்பில் 1916ல் முதல் பதிப்பாக வெளிவந்தது[2].

நூலின் தலைப்புப் பக்கத்தில் திருக்குறள் பற்றி, One of the highest and purest expressions of human thoughts" - M. Ariel, "An essentially the highest type of verbal and moral excellence among the Tamil people as ever Homer was among the Greeks." - Mr. Gover என்ற இரு பேரறிஞர்கள் வெளியிட்ட கருத்துக்கள் அச்சாகியுள்ளன.

நூல் தலைப்புப் பக்கத்தில் எம். ஏரியல் (M. Ariel) எனும் அறிஞரின் 'மனித குலச் சிந்தனையில் நனியுயர்த்தும் தூய்மையானதுமான வெளிப்பாடுகள்' என்றும் பாராட்டுரை காணப்படுகின்றது. கோவர் (Gover) எனும் மற்றொரு அறிஞரின் 'கிரேக்கர்களிடையே ஹோமர் போன்று, தமிழ் மக்களிடையே இன்றிமையாத மிக்குயர்ந்த சொற்திட்பமும் அறநெறிப்பெருஞ் சிறப்பும் என்றும் பெற்றவர்' என்றும் குறிப்பு வெளியாகியுள்ளது.

டபிள்யூ. எச். ட்ரூ (W.H. Drew) என்பாரின் மொழிபெயர்ப்புக் குறிப்புகளும், ஜி.யூ. போப்பின் (G.U. Pope) மொழிபெயர்ப்புக் குறிப்புகளும் முன்னுரையில் சில குறள்களுக்கு மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன.[3]

இம்மொழிபெயர்ப்பு நூலின் முதல் பதிப்பு 1915இலும், இரண்டாம் பதிப்பு 1925 இலும், மூன்றாம் பதிப்பு 1952இலும், நான்காம் பதிப்பு 1961இலும் வெளிவந்தன. நான்காம் பதிப்பைச் சென்னை அமுத நிலையத்தினர் வெளியிட்டுள்ளனர்.

1925இல் வெளிவந்த இரண்டாம் பதிப்பிலேயே வ.வே.சு.ஐயர் தமது முன்னுரையிலும் மொழிபெயர்ப்புகளிலும் சில திருத்தங்கள் செய்தார். பரிமேலழகர், மணக்குடவர் ஆகியோரது உரையாசிரியர்களைத் தழுவி மொழிபெயர்ப்புச் செய்துள்ளார் என்பதையும் அடிக்குறிப்புகளில் தெரிவித்துள்ளார். மேனாட்டு அறிஞர்களின் மொழிப்பெயர்ப்புக் குறிப்புகளையும் குறிப்பிட்டுள்ளார்.

---

[2] 1925 இல் இரண்டாம் பதிப்பு வ.வே.சு. ஐயரின் அடிக்குறிப்பு.

[3] The Kural, Page xvi, xvii

இவருடைய முகவுரையின் சிறப்பைப் கண்ட பண்டிட் க்ஷேமானந்த் ரோஹட் என்பார் முகவுரையின் சில பகுதிகளை இந்தியிலும், ஏலுரு கோபால்ராவ், கரிமல்லா சத்திய நாராயணா ஆகியோர் தெலுங்கிலும் மொழிபெயர்த்தனர் என்றும், எனினும் இவை இன்னமும் கையெழுத்துப்பிரதிகளாகவே போயின என்றும் வ.வே.சு. ஐயர் தமது இரண்டாம் பதிப்பில் குறிப்பிட்டுள்ளார்.[4]

தமது திருக்குறள் ஆங்கில மொழிபெயர்ப்புக்கு முன் 1820-1886க்குள் எஃப்.டபிள்யூ. எல்லீஸ் (F.W. Ellis) டபிள்யூ.எச் ட்ரூ. (W.H. Drew) இ.ஜே. ராபின்ஸன் (E.J. Robinson) ஜே. லாஸரஸ் (J. Lazrus) மறைதிரு. ஜி.யூ.போப் (Rev. G.U. Pope) ஆகியோர் செய்த ஆங்கில மொழிபெயர்ப்பு பற்றியும், எம்.ஏரியல் (M. Ariel) டுமாஸ்ட் (M. de. Dumast) ஆகியோர் செய்த ஃபிரெஞ்சு மொழிபெயர்ப்பு பற்றியும், எம். லாமெய்ரஸ்ஸி (M. Lamairese) என்பார் தம் காலத்தில் செய்த ஃபிரெஞ்சு மொழிபெயர்ப்பு பற்றியும், வ.வே.சு. ஐயர் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார்.

தமது திருக்குறள் ஆங்கில மொழிபெயர்ப்புக்கு முன் வெளிவந்த ஆங்கிலம், ஃபிரெஞ்சு, இலத்தீன் மொழிபெயர்ப்புகளைத் தாம் கண்டதாகவும் (1820- 1886) அவற்றைப் படித்த பின்னரே தாமும் ஆங்கில மொழிபெயர்ப்பு செய்ய ஆர்வம் கொண்டதாகவும் குறிப்பிட்டுள்ளார்.

"ஒரு காலகட்டத்திற்கோ அல்லது ஒரு நாட்டிற்கோ மட்டுமல்லாமல், மனித குலமனைத்திற்கும் எல்லாக் காலத்திற்கும் உரிய செய்தியை அளித்த ரிஷிகளில் ஒருவர் அவர்" என்னும் தொடக்கவுரையோடு முன்னுரையை அளிக்கிறார் வ.வே.சு.ஐயர்.

டபிள்யூ. எச்.ட்ரு, மறைதிரு ஜி.யூ.போப் முதலானோர் மொழிபெயர்ப்பு முறை வ.வே.சு. ஐயருடன் ஒன்றியிருந்தது என்பது உண்மை. மூவரும் புனித பைபிள் நடையையே தேர்ந்தெடுத்தனர்.

"ட்ரூவின் மொழியாக்கம் தெளிவற்றது, போப்பின் செய்யுள் நடை மூலத்தின் சிறப்புகளை வெளிக்கொணரவில்லை" என்பது வ.வே.சு.ஐயரின் கருத்து.

தம் எண்ணத்துக்கு எடுத்துக்காட்டாக ஒரு குறளின் மொழியாக்கத்தைத் தருகிறார்.

---

[4] The Kural, Madras, Amudha Nilayam, 1961.

*"நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்*
*பெருமை உடைத்துஇவ் வுலகு" (குறள்: 336)*

*இதை ட்ரு மொழி பெயர்த்திருப்பதாவது:*

The world possesses the greatness of one
who yesterday was and today is not

*போப்பின் மொழியாக்கமாவது:*

Existing yesterday - today to nothing hurled
Such greatness owns this transitory world

*வ.வே.சு. ஐயர்:*

But yesterday a man was and today he is not.
That is the wonder of wonders in this world

*வ.வே.சு. ஐயரின் மொழிபெயர்ப்பில் மூலத்தின் உட்கருத்து வெளிவரக்காரணம், திருக்குறள் அமைந்த மொழியே அவரது தாய்மொழி ஆகும்.*

*திருக்குறள் தோன்றிய காலத்தைக் கி.பி. முதல் நூற்றாண்டிலிருந்து மூன்றாம் நூற்றாண்டிற்கு இடைப்பட்டதாகக் குறிப்பிடுகின்றார் வ.வே.சு. அவர்கள்.*

*திருக்குறளின் அறத்துப்பாலும் பொருட்பாலும் இம்மையிலும் மறுமையிலும் துய்த்து மகிழத்தக்க பேரின்ப 'ஆத்மபோதம்' தர வல்லது என்ற செய்தியை வ.வே.சு. ஐயர் தம் நூலின் முன்னுரையில் புகன்றுள்ளார்.*

*எச்.ட்ரு என்பாரின் மொழிபெயர்ப்பையும் ஜி.யு. போப் பெருமகனாரின் மொழி பெயர்ப்புடன் தம் நீண்ட முன்னுரையில் ஒப்பிட்டு ஆய்கிறார். வ.வே.சு. ஐயரின் மொழி பெயர்ப்புடன் நாம் இரண்டு வேறுபாடுகளை உணரலாம்.*

*இடன் அறிதல் அதிகாரக்குறள் 500:*

*கால் ஆழ் களரில் நரி அடும் கண்அஞ்சா*
*வேல் ஆள் முகத்த களிறு*

*இதனை ட்ரு மொழி பெயர்த்துள்ளதாவது:*

A fox can kill a fearless, warrior-faced elephant, if it g.o into mud in which its legs sink mud.

**இதனையே**, 'The Jackal slays, in miry paths of foot betraying few. The Elephant of fearless eye and tusks transfixing armed men' **என ஜி.யூ. போப் மொழியாக்கம் செய்துள்ளார்.**

தமிழ்தாய் மொழியல்லாத் இரு பெருமக்கள் செய்த மொழிபெயர்ப்பையும் கண்ட நாம் தமிழ்தாய் மொழியுடன் பலவேறு மொழிப்புலமை பெற்ற வ.வே.சு. ஐயர் அவர்களது மொழி பெயர்ப்பையும் காண்போம்.

Behold the high method elephant that has faced without a vincing a whole multitude of lecers; even a jackal will truimph over him if he is entangled in marsly ground.

இம்மொழிபெயர்ப்பில் வ.வே.சு. அவர்களின் ஆங்கில மொழி வல்லமையையும், வளமையும் கண்டு வியக்கலாம்.

இவ்வண்ணம் 1330 அருங்குறள்களின் ஆங்கில மொழிபெயர்ப்பில் நாம் அமிழ்ந்துவிட்டால், வள்ளுவ அமுதம் மற்ற மொழியில் மாந்தியபடி நம்மை மறந்து விடுதல் துணிவு.

ஆங்கில வழிக்குறளை அறிதாய் அறிய அன்றே வழிசெய்தவர் வ.வே.சு. என்ற பெருமைக்குரியவர் என்பதில் இரண்டு வகைக் கருத்துகள் இருக்க முடியாது.

நெடுநாள் அவர் திருக்குறளைத் தமிழில் பயின்று, தமது ஐரோப்பியப் பயண நாட்களில் அதன் கருத்துக்களில் திளைத்து, தமக்குக் கைவந்த ஆங்கில மொழிப்புலமையில் அதனைக் கொணர்ந்திருக்க வேண்டும். ட்ரு, போப் இருவரும் ஆங்கிலத் தில் சிந்தித்துத் தமிழின் கருத்தை உணர முனைந்து மொழி பெயர்ப்புப் பணி செய்தனர் எனக் கொள்ளலாம்.

அதிகாரத் தலைப்புகளையும் வ.வே.சு. ஐயர் வகையோடு அழகுற மொழிபெயர்த்திருக்கிறார். போப் சற்று இடர்ப்பட்டிருக் கிறார் என்பதை அதிகார மொழிபெயர்ப்பைக் கண்டால் புரியும்.

எடுத்துக்காட்டாகப் 'பகைத்திறம் தெரிதல்' எனும் அதிகாரத் தலைப்பில் போப் "Knowing the quality of hates" என மொழி பெயர்க்க, வ.வே.சு.ஐயர் "The apparaising of enemies" என்று ஆங்கிலமாக்கியுள்ளார்.

அறத்துப்பாலின் ஆன்மிகச் சிறப்பைப் பற்றித் தமது பதிப் பில் வ.வே.சு. ஐயர் கூறுவதாவது:

"திருக்குறள் முதற் பிரிவில், குறிப்பாக இரண்டாம் இயலில் உள்ள ஒவ்வொரு மூலக் கோட்பாட்டையும் பின்பற்றினால், அது இம்மையிலும் மறுமையிலும் துய்த்து மகிழத்தக்க, பேரின்பமான ஆத்ம போதத்தை அளிக்க வல்லது என்பதை மனதில் ஆழப் பதிய வைக்கிறது."

வ.வே.சு. ஐயர் ஆங்கிலத்தில் மிக்க புலமை மிக்கவர். குறட்பாவின் வடிவமைப்பைப் பற்றி அவர்தம் அழகிய மொழி நடையில் கூறுவதாவது:

"And how like a master he plays on this tiny instrument! Sparkling wit and humour, the painted statement, fancy irony, the naive question, the picturesque simile, there is not one of those and others of the thousand tricks of the born artist, that our author has not employed in this perfect master piece of art But the abiding note in this varied symphony is the sublime.[5]

சாந்தோமில் வாழ்ந்த புனித தாமஸும், மயிலாப்பூரில் வாழ்ந்த திருவள்ளுவரும் சந்தித்து அளவளாவிக் கொண்டார்கள் என்னும் மறைதிரு ஜி.யூ. போப் அவர்களின் கருத்தை ஆதாரங்களுடன் வ.வே.சு.ஐயர் மறுத்திருக்கிறார்.

வ.வே.சு. ஐயரின் திருக்குறள் மொழிபெயர்ப்பானது விழுமியதாக உள்ளது என்று ஜஸ்டிஸ் சேஷகிரி ஐயர் அவர்கள் ஒரு பத்திரிகை விமர்சனத்தில் குறிப்பிட்டுள்ளார்.

"டாக்டர் போப் என்பவர் திருவள்ளுவரின் திருக்குறளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருப்பதைக் காட்டிலும், மிஸ்டர். ஐயரின் மொழிபெயர்ப்பு சிறப்பாக இருக்கிறதென்று சொல்லுவேன். இதற்குக் காரணம் மிஸ்டர் ஐயர் நூலாசிரியன் போக்குகளை நன்றாக அறிந்திருக்கிறார். அதனால்தான் மொழிபெயர்ப்பு நிரம்பத் தெளிவாக இருக்கிறது."[6]

மேலும் பல அறிஞர்கள் வ.வே.சு. ஐயரின் திருக்குறளை உயர்வாகவே மதிப்பிட்டுள்ளனர்.

வ.வே.சு. ஐயர் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த திருக்குறட் பாக்களை Mystic poet என்னும் தலைப்பில் "வேதாந்தா" (Vedantha) எனும் (An anthology of Hindu Scriptures commentary of poets) என்னும் நூலில் கிளைவ் ஜான்சன் (1971) என்பார் வெளியிட்டுச் சிறப்பித்துள்ளார்.

அதே போன்ற கருத்தை "The Mind of India" (Master works of Indian thought from the Vedic Hymns to Gandhiji) என்னும் நூலில் வில்லியம் கெர்பர் (William Gerber) என்பார் தொகுத்துப் பிரசுரித்துள்ளார்.

---

[5] The Kural: Page xii - Amudha Nilayam, Madras.

[6] திருக்குறள் ஜஸ்டிஸ் சேஷகிரி ஐயர் - "இந்தியன் ரெவ்யூ - சுதேசமித்ரன்

# 10. கம்பராமாயண பதம் பிரித்த பதிப்பு

கம்பராமாயணச் சுவையைப் பாமரரும் எளிதில் புரிந்து கொண்டு துய்க்க வேண்டும் எனும் நோக்குடன் வ.வே.சு. ஐயர் அந்நூலைப் பதம் பிரித்து வெளியிடத் துணிந்தார். பதம்பிரித்தால் பாடலின் மூல ஓசை யின்பமும் யாப்பமைதியும் கெடும் என்று பண்டிதர்கள் தெரிவித்தனர். சந்தம் கெடும் என்பதும் அவர்களது வாதம். சந்தி பிரித்தல் பற்றிப் பலமுறை பலவகை விவாதங்கள் எழுந்ததுண்டு.

தமிழ்ப்பாடல்களில், குறிப்பாகக் கம்பனது பாடல்கள் சந்தி முறையில் அமைந்து சந்தவோசை தருபவை. சந்தவோசை பாடும் போது மகிழ்வைத் தரும். எனவே பொருள் எளிதில் விளங்க சந்தி மாறுதல்களையும் அவ்வப்போது இலக்கணம் அறிந்தோர் செய்து வந்தனர். மண்டையம் ஸ்ரீநிவாசாச்சாரியாரும் வ.வே.சு. ஐயரும் இணைந்து நிறுவிய புதுச்சேரிக் கம்பன் நிலையத்திலிருந்து, "கம் பராமாயணம் பாலகாண்டத்தை" சந்திபிரித்து பதிப்பித்து முதலில் 1917இல் வெளியிட்டனர். பாலகாண்டக் கவிதைகளை ஐயர் தேர்ந் தெடுத்தார். அதற்கு அழகானதொரு முன்னுரை அளித்தார். பதம் பிரித்து வெளிவந்த இந்நூலில் முகவுரை என்றென்றும் கற்றோ ரால் ஏத்தப்பட்டு வருவதாகும்.

1843இல் கம்பராமாயண அயோத்தியாகாண்டம் 60ஆம் பக்கம் முதல் சந்தி பிரித்தே அச்சிடப்பட்டது. சென்னை கல்விச் சங்கத் தமிழ்ப்புலவர் தி. வெங்கடாசலசெட்டியார் இதனைப் பதிப்பித்தார்.[1]

இந்நூலின் முன்னுரையில் பதிப்பாசிரியர் "ஸ்ரீமத் கம்பரா மாயணத்திலே மேற்படி சந்தியையும், விகாரத்தையும் தகுந்தபடி பிரிவினை செய்தால் அது முழுவதும் பொருள் விளங்கும் என்று எண்ணி, முதலிலே அயோத்தியா காண்டத்தில் அறுபதாம் பக்கம் தொடங்கி, தேர்ந்த ஒரு கல்விமானாக ஆனவர்... எப்படி சந்தியை யும் விகாரத்தையும் விலக்கி, பதங்களாய் பிரித்துப் படிப்போரோ அப்படியே பிரித்து அச்சிற் பதிப்பிக்கப்பட்டிருக்கிறது." எனக் குறிப்பிட்டுள்ளார்.

---

[1] வ.வே.சு ஐயர் அரசியல் இலக்கியப்பணிகள், பெ.சு மணி- உலகத்தமி ழாராய்ச்சி நிறுவனம் - 1993.

பாலகாண்டத்தின் 1400 பாடல்களில் 545 பாடல்களைத் தேர்ந்து வ.வே.சு. ஐயர் இதனை அடியொற்றிக் கம்ப ராமாயணத்தின் பதம் பிரித்து அச்சிட்ட அப்பதிப்பில் அவர் குறிப்பிட்டிருப்பதாவது:

"ஜனங்களுக்குக் கம்பராமாயணம் (கம்பராமாயணத்தைப் பற்றிச் சொல்லும் வார்த்தைகள் நமது இதர இலக்கியங்களுக்கும் பொருந்தும்) என்றால், மலைப்பாக இருப்பதற்குக் காரணம் என்ன என்று பார்த்தால் வேறொன்றுமில்லை. அந்த மகாகாவியம் இதுவரையில் எழுதப்பட்டும் அச்சிடப்பட்டும் வந்திருக்கும் ரீதி யேதான் என்று ஏற்படும். இதுவரையில் கையெழுத்திலும் அச்சி லும் வந்திருக்கிற பிரதிகளெல்லாம் புணர்ச்சிகளைப் பிரிக்காம லும், பதங்களைத் தனித்தனியே எழுதாமலும் பொருளை நிஸ்ஸந்தேகமாகக் காட்டக்கூடிய குறிகளைச் சேர்க்காமலுமே எழுதப்பட்டும் அச்சிடப்பட்டுமிருக்கின்றன. இதனால் பாடம் கேட்காமல் படிக்க முயலுகிறவர்களுக்குச் செய்யுற்களைப் படிக் கும் போது கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டது போலிருக்கிறது.

"ஆகையால் படிப்பவர்களுக்கு எவ்வளவு சுலபமாக்கக் கூடுமோ அவ்வளவு சுலபமாக்கிக் கம்பராமாயணத்தை அச்சிட வேண்டும் என்கிற எண்ணம் எமக்கு நெடுநாளாக இருந்து வந் தது. ஆனால் வேறு பல காரணங்களுக்கிடையில் வித்துவான்கள் இம்மாதிரிப் பதிப்பை ஒப்புவார்களோ என்கிற சந்தேகம் எம்மை இக்காரியத்தில் புகுவதினின்றும் தடுத்து வந்தது. ஏனெனில் பண் டிதர்கள் திரஸ்காரம் செய்யக்கூடிய பதிப்பு பிரசுரிக்கத் தக்கதன்று. ஆனால் நாலாயிரப் பிரபந்தத்தைச் சந்தி பிரித்து அச்சிட்டிருப்ப தில் வித்துவான்களுக்கு யாதொரு அதிருப்தியும் உண்டாக வில்லை. பண்டித சிகாமணியாகிய மகாமகோபாத்யாய சுவாமிநா தய்யர் பதிப்பித்திருக்கும் சங்கநூல்கள் பதம் பிரித்தேதான் அச்சிடப் பட்டிருக்கின்றன. கற்போரின் சௌகரியத்திற்காகச் சந்தி களைப் பிரிப்பதும் சீர்களைப் பிரிப்பதும் தவறல்ல என்று பெரி யோர்களே வழிகாட்டியிருக்கிறார்கள். இதற்குமேல் நாம் செய்ய உத்தேசித்த மாற்றங்களைச் செய்வதானது அவர்கள் போயிருக்கிற மார்க்கத்தில் முடிவுவரையில் செல்லுகிறதேதானாகிற தாகையால் அவ்விதம் செய்வது வித்துவான்களுக்கு அயுக்தமாகத் தோன்றாது என நிச்சயித்து அவ்விதமே செய்யத் துணிந்தோம்"[2]

---

[2] கம்பராமாயணம் (சுருக்கம்) பாலகாண்டம். வ.வே.சுப்பிரமண்ய ஐயர் (பதிப்பு) கம்ப நிலையம், புதுச்சேரி. 1917.

எனினும் 1918 இல் தைமாதத்தில் "தேச பக்தனி'ல் வ.வே.சு. ஐயர் பதிப்பித்த "கம்பராமாயணம் பாலகாண்டச் சுருக் கம்" மதிப்புரை செய்யப்பட்டது. அதையடுத்து 1918 பிப்ரவரி 2 இல் திரு.வி.க. ஆசிரியராக இருந்த போது தேசபக்தன் இதழில் "காவியங்களைச் சந்தி பிரித்து அச்சிடுவது முறை தவறா?" என் னும் தலைப்பில் ஆசிரியருக்கான கடிதம் வெளி வந்தது. இந்தக் குறிப்பிட்ட இதழ் இப்போது கிடைக்கவில்லை.

அவரது நண்பர் பா. ஆதிமூர்த்தி என்பார் இச்சுருக்கப் பதிப் பினை எதிர்த்து எழுதியிருந்தார். அதற்கு வ.வே.சு.ஐயர் அளித்த பதிலில் குறிப்பிட்டிருப்பதாவது:

"என் பதிப்பு சாதாரணப் பதிப்பை ஒட்டும் கருத்தோடு போடப்பட்டது அல்ல. என் பதிப்பிலுள்ள சுருக்கத்தைப் படித்து விட்டுப் படித்தோர் சுருக்கதிலேயே இத்தனை மதுரமா இருக்கை யில் சம்பூரணமாக நூலைப் படிக்காமலிருக்க கூடாது என்றே எண்ண வேண்டும் என்பது என் கருத்து.... இலியாது முதலிய மேனாட்டு மகாகாவியங்களும் 'ஹெரிவார்டு தி வேக்' 'டாலிஸ் மான்', 'ஐவான்ஹோ' முதலிய கதைகளும் இன்னும் பலவும் சுருக்கப்பட்டிருக்கின்றன"[3].

எனவே 1843 இல் வெளியான தி. வேங்கடாசல செட்டியா ரின் அயோத்தியா காண்டப் பதிப்பு வழிகாட்ட, பாலகாண் டத்தை வ.வே.சு. ஐயர் பதம் பிரித்து வெளியிட்டார் எனக் கொள் ளலாம்.

எனினும் வ.வே.சு.ஐயர், தமது பதிப்பின் வேறோர் பகுதி யில், 'எங்கெங்கே சந்தி பிரித்தால் பொருளில் சந்தேகம் வருமோ, அல்லது தெளிவு குறையுமோ அங்கேயெல்லாம் புணர்ச்சியைப் பிரிக்கவில்லை.' என்றும் தெளிவாக்கியிருக்கிறார்.

வ.வே.சு.ஐயர் பாமர மக்களின் வசதிக்காக வெளியிட்ட கம் பராமாயண பாலகாண்டப் பதப் பிரிப்புப் பதிப்பு பல விமரிசனங் களைக் கண்டது. திரு.வி.கவின் "தேசபக்தன்" விமரிசித்துள்ளதா கக் குறிப்பிட்டுப் பதில் அளித்தார் வ.வே.சு.ஐயர்.

"விமரிசனக்காரர், எனது பாலகாண்டப்பதிப்பில் நான் சாமா னியக் கல்வியுள்ளாரும் கம்பராமாயணத்தைத் தாமே உதவியின் றிப் படித்து அனுபவிக்கும்படிச் செய்ய வேண்டுமென்ற அபிப்பி ராயத்தோடு செய்யுள்களில் பதங்களைச் சந்தி பிரித்து எழுதியிருப்பதைப் பற்றி, தமிழ் பயில்வோருக்கு அது பேருபகார

[3] தேசபக்தன் 2.2.1918."

மாகுமென்று முதலில் கூறிவிட்டுப் பிறகு பின்வருமாறு எழுதுகிறார். செய்யுளோசை இருக்கிற வண்ணம் பதம் பிரிப்பது நலம். எடுத்துக்காட்டாக ஆளப்படும் ஒவ்வொரு பாட்டையும் பிரித்தல் இருக்காது. இக்கம்பராமாயணச் சுருக்கத்தில் செய்யுளைப் பிரித்திருப்பது, இயற்கை ஓசை இன்பத்தையுணர்ந்தார், உள்ளத்தைப் புண்படுத்தும் என்பதில் ஐயமில்லை."

இந்தச் சந்திப் பிரிப்பு விவகாரம் வியப்பாக வளர்கிறது. சந்திப் பிரிப்பால் "ஓசையின்பம்" சிதைகிறது என்னும் வாதத்திற்கு வ.வே.சு.ஐயர் தமது கடிதத்தில் பதில் கூறுகிறார்.

"இவ்விதம் எழுதுவது காவியத்தையே சிதைத்து விடுவது போலிருக்கிறது என்று மதிப்புரைக்காரர் சொல்லுகிறார். வார்த்தைகளைப் பிரித்து எழுதும் போது, சில வரிகளில் ஒரு மாத்திரை, அல்லது அரை மாத்திரை அதிகமாக இருப்பது போலக் காணப்படுகிறது என்பது வாஸ்தவமே. ஆனால் இது கண்ணுக்குத்தான் தோன்றுகிறது. படிக்கும்போது சந்தம் குறையாமல் படிக்கும்படி பார்த்துக்கொண்டு வருகிறது. யாப்பிலக்கணம் படிக்காதவர்கள் கூட, இவ்விதம் பிரித்தெழுதியிருக்கிற செய்யுள்களைச் சந்த ஏற்றத் தமிழின் வழியே படிக்கிறார்கள். ஆங்கிலத்தில் மில்டன் எனும் கவிச்சக்கரவர்த்தியின் செய்யுள்களில் சந்த அழகு நிரம்பியிருக்கிறது என்பது உலகப் பிரசித்தம், ஆனால் கண்ணுக்குச் சந்த அழகைக் காட்ட வேண்டுமென்று, அவனுடைய காவியத்தை ஒரு வரியிலுள்ள எல்லா வார்த்தைகளையும் ஒன்றாகக் கோத்தாவது, சீர்களிலுள்ள அசைகளைச் சேர்த்தாவது அச்சிடுவதில்லை.

"சந்தத்தைக் கண்ணுக்குக் காட்ட வேண்டுமென்ற ஒரு காரியத்துக்காக மேலே சொன்ன அனைத்தும் சாமானியருக்குச் சுலபமாகப் பயனாகாத வண்ணம் செய்வது நியாயமாகுமா?

"சந்தத்தைப் பற்றி யோசித்தால் சந்தப் பிரச்சினை இல்லாதவர்களுக்குச் செய்யுள்கள் தற்காலம் பெரும்பான்மையாய் அச்சிடப்படும் ரீதியும் சந்தத்தை அறிவிக்காது. சந்தப் பிரச்சனை உள்ளவர்களுக்கோ பாலகாண்டச் சுருக்கம் அச்சிடப்பட்டிருக்கும் செய்யுள்களையும், சந்தச் சிதைவின்றிப் படிக்க வேண்டும்.

"சந்தி பிரித்துப் பதிப்பித்தல் முறையா? முறை தவறா? என்பதைப் பற்றித் தமிழ் மாதாவிடம் அன்பு பூண்ட பெரியோர் நடுவு நிலைமையாய் ஆராய்ந்து பார்த்து ஒரு முடிவுக்கு வர வேண்டும் என்கிற எண்ணத்தோடே இக்கடிதம் எழுதலானேன். வித்துவான்கள் தங்கள் அபிப்ராயங்களை "பக்தன்" வாயிலாகத் தெரிவிக்க வேண்டுமென்று வேண்டிக் கேட்டுக்கொள்கிறேன்" என்று குறிப்

பிட்டு மடலை முடித்துள்ளார் வ.வே.சு.ஐயர்.

இதையடுத்து 1918 ஆம் ஆண்டில் ஆகஸ்டு திங்களில் தமிழ்ப் புலவர்கள் மாநாடு நடைபெற்றது. அந்நாள் பச்சையப்பன் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் திருமணம் செல்வகேசவராய முதலியார் சந்தி பிரிப்பதை ஆதரித்துப் பேசினார். புதுச்சேரி கலைமகள் ஆசிரியர் இதனை மறுத்துத் தம் இதழில் கருத்து வெளியிட்டார்.

என்றாலும் அலை ஓயவில்லை. தமிழ் இலக்கணம், தமிழிலக்கியம் அறிந்தார் சிலரிடையே என்றும் கருத்து வேறுபாடு உண்டாகி வருவது என்பது நெடுங்கால உண்மை.

1940 இல் வெளிவந்த 'கம்பன் கவிதை' எனும் நூலில் சொ. முருகப்பா 'நல்ல பதிப்பு வெளிவர வேண்டும்' எனும் தலைப்பில் எளிய கட்டுரையில் பாராட்டுரை வழங்கியதையும் கவனிக்க வேண்டும்:

"கம்பனில் நல்ல பாட்டுக்கள் என்று தோன்றியதைத் திரட்டி வெளியிடவும் சிலர் முற்பட்டிருக்கின்றனர். அவருள் வ.வே.சு. ஐயரும், வெ.ப. சுப்பிரமணிய முதலியாரும் முக்கியமானவர்கள். இவர்களின் நூல்கள் தமிழ்நாட்டில் கம்பனைப் படிக்க விரும்புவோர்க்குப் பேருதவி செய்துள்ளன. அதுமட்டுமின்றிக் கம்பனில் ஆர்வமில்லாதவர்களுக்கு ஆர்வம் ஊட்டுகின்றன."[4]

பவணந்தியார் தம் இலக்கண நூலான நன்னூலின் முடிவில்,

"*பழையன கழிதலும் புதியன புகுதலும்*
*வழுவல கால வகையினானே*'

என்பார்.

அவ்வண்ணம் தி. செல்வக்கேசவராய முதலியார்ரவர்களே, 'ஆசாரக்கோவை', 'பழமொழி' முதலியவற்றைச் சந்தி பிரித்து வெளியிட்டார். சந்தி பிரித்தல் காலப்போக்கில் காலூன்றிக் கொண்டது. பிற்காலத்தில் 1950களில் மர்ரே ராஜம் திருவாசகம், திவ்வியப் பிரபந்தம், கம்ப ராமாயணம், பதினெண் கீழ்க்கணக்கு முதலானவற்றையும் பதம் பிரித்தே பதிப்பித்துப் பொதுமக்களிடையே பரப்பினர். சென்னைக் கம்பன் கழகமும் கம்பராமாயணத்தை அவ்வாறே பதம் பிரித்துப் பதிப்பித்துள்ளது. காலப் போக்கில் இம்மாற்றங்கள் தேவை என்பதை இப்பணிகள் உண்மையாக்கியுள்ளன. இன்று பதம் பிரித்த பதிப்புகளே பாமரர்களின் கைகளில் தவழக் காணலாம். வ.வே.சு. ஐயர் அதற்காக நன்றிக்குரியவர் அன்றோ?

---

[4] கம்பன் காவியம்: சொ. முருகப்பன், கம்பர் பதிப்பகம் அமராவதிப் புதூர் 1953

# 11. வ.வே.சு. ஐயரின் கம்பராமாயண ரசனை

வ.வே.சு. ஐயர் இளமையிலேயே கம்பராமாயணத்தில் ஆர்வம் கொண்டிருந்தார். அவர் இலண்டனின் 'இந்திய விடுதி'யில் வசித்து வந்த காலத்தில், 1908இல் , "ஹைகேட் ஹில் யூனிடேரியன் சர்ச்"சில் கம்பராமாயணம் பற்றிச் சொற்பொழிவாற்றியுள்ளார்.[1] இந்தச் சொற்பொழிவின் ஒரு பகுதி பின்னர் இலண்டனிலிருந்து வெளிவந்த "ஸ்வராஜ்யா"வின் கடைசி இதழில் வெளியிடப்பட்டது[2].

இலண்டனில் வாழ்ந்த போது 1908 ஆம் ஆண்டு முதலே அவர் பத்தாண்டுகளுக்கு மேல் கம்பராமாயண ஆய்வு செய்து வந்தார் என்பதனை அவரது கம்பராமாயணம் (சுருக்கம்) பாலகாண்டம், (1917), நூலிலிருந்து உணர முடிகிறது:

"தினம் வால்மீகி ராமாயணத்தில் ஆறு சருக்கங்களும் கம்பனில் நூறு செய்யுள்களுமாக நான்கு மாத காலம் இரண்டு காவியங்களையும் தொடர்ந்து படித்தும், இந்த நான்கு மாதங்களுக்கு முன்னும் பின்னும் அங்கங்கே அப்போதைக்கப்போது, தனித்தனிப் பாகங்களைப் படித்தும் சுமார் பத்து வருஷங்களாகச் சோதித்து வால்மீகியையும் கம்பனையும் நாம் சீர்தூக்கிப் பார்த்து வந்திருப்பதில், கதையை வால்மீகியினிடத்திருந்து வாங்கிக் கொண்டுதான் கம்பன் எழுதியிருக்கிறானாலும், அவன் ஒரு தனிக் காவியம் செய்திருக்கிறான் என்றுதான் சொல்ல வேண்டும் என்கிற தீர்மானத்துக்கு நாம் வந்திருக்கிறோம்."

கம்பராமாயண ரசனைக் கட்டுரைத் தொடரினை 'கம்பராமாயணம்' எனும் தலைப்பில் வ.வே.சு. ஐயர் தம் "பாலபாரதி"யில் 1924 அக்டோபர் முதல் இதழில் தொடங்கினார். அத்தொடரை 1925 மே வரை அதாவது அவர் அமரத்துவம் எய்துவதற்கு ஒரு திங்கள் முன்பு வரை எழுதி வந்தார். கடைசிக் கட்டுரை "இந்திரசித்தன் நிகும்பலை யாகத்து"டன் முடிந்தது.

---

1. Kamba Ramayana - A study V.V.S. Aiyar Bharathiya Vidya Bhavan, Bombay.p.5

2. பெ.சு.மணி: வ.வே.சு ஐயர் அரசியல் இலக்கியப் பணிகள் பக் 224. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.

வ.வே.சு. ஐயரின் மறைவிற்குப் பிறகு, இக்கட்டுரையைக் காரைக்குடி நவயுகப் பிரசுராலயத்தினர் 1940இல் 'கம்ப ராமா யாண ரசனை' எனும் தலைப்பில் தனது 'கம்பன் கவிதை'யில் வெளியிட்டது. முடிவுக் குறிப்புகளாவன:

"இத்துடன் இந்த ரசனைச் சுவை ஆராய்ச்சி முற்றுப் பெறா மல் நிற்கிறது. இந்திரசித்து மாயாசீதையைப் படைத்து வாளால் வெட்டுவதும், அதைக் கண்டு அனுமன் மயங்குதலும், விபீஷ ணன் உதவியால் சீதை உயிரோடிருப்பது தெரிந்து பின் நிகும்ப லையில் புகுந்து லக்ஷ்மணன் இந்திரசித்தை வதைப்பதும், இடை யில் இந்திரசித்து ராவணனை அடைந்து சீதையை விட்டுவிடும்படி வேண்டித் தோல்வியுறுவதும், ராமன் தன் வீர வெஞ்சிலையிலிருந்து 'கண கண கண' என்று அம்பு மழை பெய்து மூல பலத்தை அழிப்பதும், கடைசியில் முறைதுறந்தா னான ராவணனே ராமனுடன் வீரப்போர் புரிந்து முடிவுதும், மூவு லகிற்கும் கங்குல் விடிவதற்காகத்தான் சிறையிருந்த தேவி மீட்சி பெறுதலும், பதினான்கு வருஷம் கல்லும் கனியும்படி கனிந்த துயரத்தனனான பரதன் அக்னிப்பிரவேசம் செய்யப்புகும் சமயத் தில் ராமன் திரும்பிவிட்ட செய்தி கேட்டு ஆனந்தித்தலும், பிறகு ராமன் திருமுடி சூட்டிக்கொள்ளலும் அளவற்ற ரசனைத் திறனு டன் எவ்வளவு ரஸ புஞ்சங்களாக அமைக்கப்பட்டிருக்கின்றன என்பதையெல்லாம், மேதாவிலாஸம் ததும்பிப் பிரகாசிக்கும் ஐய ரவர்களுடைய ஆராய்ச்சியின் முற்பகுதிகளை வைத்துக்கொண்டு நாமாக ஓரளவு ஊகித்துக்கொள்ள வேண்டியிருக்கிறது".

உண்மைதான், வ.வே.சு. ஐயரவர்களை அருவி அழைத்து அவருக்கு அமரத்துவம் அளித்திராவிட்டால் கம்பராமாயணத்தில் எஞ்சிய யுத்தகாண்டப் பகுதிகளின் விறுவிறுப்பும் சுவையும் கூடிய பாடல்களை அழகுற இலக்கியத் திறனாய்வு செய்து அளித் திருந்திருப்பார். அவரது திடீர் மறைவு கம்பனது படைப்புக்கான திறனாய்வுக்கு ஓர் இழப்பு என்பதில் ஐயமில்லை.

திருமணம் செல்வக்கேசவராய முதலியார் தாம் எழுதிய "கம்பர்" (1909) என்னும் நூறுபக்கங்கள் கொண்ட நூலில், "கம்பர் கற்பனா சக்தியிலும், வருணனை யலங்காரங்களிலும் மில்டனுக் குக் குறைந்தவரல்லர். யூரோப்பியர்களுடைய ஆதிகவியான ஹோமருக்கு எவ்விதத்திலும் இளையவரல்லர். ப்ரபஞ்ச விலா ஸப் புலமையில் ஒருவாறு ஷேக்ஸ்பிரியரோடு ஒத்தவர்."[3]

3. வ.வே.சு. ஐயர் - அரசியல் இலக்கியப் பணிகள். பெ.சு.மணி (மேற் கோள்)

எனினும், கம்பராமாயணத்தைப் பிற இலக்கியங்களுடன் முதன் முதலில் ஒப்பிட்டு விரிவாக எழுதப்பெற்றது வ.வே.சு.ஐயரின் "கம்பராமாயண ரசனை"யே எனலாம்.

இது பற்றி ஏ.வி. சுப்பிரமணியம் ஐயர் குறிப்பிடுவதாவது:

"இவருக்கு முன்னாலுள்ள வேதநாயகம் பிள்ளை, கிருஷ்ணப் பிள்ளை, ராஜமய்யர் போன்ற புலவர்கள் கம்பனை வாயாரப் புகழ்ந்திருந்த போதிலும், அக்கவியைத் தற்காலிக இலக்கியக் கொள்கைகளைக் கையாண்டு, ஆராய்ந்து மற்ற மகாகவிகளுடன் ஒப்பிட்டுப் பார்த்ததில்லை.[4]"

'உபோற்காத்ம்' எனும் முதல் அத்தியாயத்தில் வ.வே.சு. ஐயர் தெரிவிக்கிறார்: "கம்பநாட்டாழ்வார் எழுதிய திவ்விய கிரந்தமானது முப்பத்தைந்து தலைமுறைகளாகத் தமிழுக்கு ஆனந்தத்தைத் தந்து வருகிறது... கம்பனுடைய ராமாயணமானது மற்ற கவிகள் எழுதிய ராமசரிதைகளையும் தமிழில் எழுதப்பட்ட இதர காவியங்களிற் பெரும்பாலானவற்றையும் கூட, 'வெயிலிடைத் தந்த விளக்கொளி' போலாக்கிவட்டது.

"இது மாத்திரமில்லை, கம்பராமாயணமானது ஹோமர் எழுதிய இலியாதையும், வீர்க்கீலியன் எழுதிய ஏனயிதையும், மில்டனுடைய சுவர்க்க நஷ்டம் என்ற காவியத்தையும், வியாஸ பாரதத்தையும், தனக்கே முதனூலாக இருந்த வால்மீக ராமாயணத்தையும்கூட பெருங்காப்பிய லட்சணத்தின் அம்சங்களுள் அனேகமாய் எல்லாவற்றிலும் வென்றுவிட்டது என்று சொல்லுவோம்."[5]

வ.வே.சு. ஐயர் "ரசனைச் சுவை" எனும் தலைப்பிலான கட்டுரையில்,

"காவிய இலக்கணத்தை நிர்ணயிப்பதில், பாரததேசத்து இலக்கண ஆசிரியர், நமக்குத் தெரிந்த மட்டில், விவரியாமல் விட்டுவிட்ட சில அமிசங்களை மேனாட்டு இலக்கண ஆசிரியர் விஸ்தாரமாக விவரித்திருக்கிறார்கள். மேனாடுகளில், அரிஸ்தோத்தலன் (Aristotle) காலம் முதற்கொண்டு இலக்கண நூலாசிரியர் காவிய அமைப்பைப் பற்றிப் பெரும் ஆராய்ச்சிகள் வெளியிட்டிருக்கிறார்கள்.

---

4. பெ.சு.மணி, வ.வே.சு. ஐயர் அரசியல் - இலக்கியப் பணிகள்

5. கம்பன் கவிதை கம்பராமாயண ரசனை பக்கம் 3, 4

"காவிய சமக்ர இலக்கணத்தைத் தண்டிகவி தனது அலங்கார இலக்கணத்தில் பாவிக அணியை வர்ணிக்கும் போது சில வார்த் தைகள் சொல்லி முடித்து விடுகிறான்.

"பாவிக அணி என்று நாம் கூறுவதை மேனாட்டார் 'ஆர்க்கி தெந்தோனிக்ஸ்' (Architectonics) என்கிறார்கள். இப்பதத்துக்கு ரசனை அல்லது காவிய நிர்மாணம் என்று பொருள் சொல்லலாம். இது மனைச் சிற்பநூலினின்று எடுத்துக்கொண்ட பெயராகும். ஓர் அரண்மனையையோ கட்டடத்தையோ கட்டுவதற்கு அனந்த கோடி ரீதிகள் உண்டு. ஆனால் சில ரீதிகள்தாம் கட்டடத்துக்கு அழகு தரும். பெரும்பாலானவை வானத்தையும் சூரிய ஒளியை யும் மூடுமேயொழிய நமது சௌந்தர்ய உணர்ச்சியைத் திருப்தி செய்வியா. அப்படியே ஓர் காவியத்தைப் பல மாதிரி எழுதலாம். சில சம்பவங்களைச் சிலர் விரிக்கிறார்கள். மற்றவற்றைச் சுருக்கி விடுகிறார்கள். வேறு சிலர் முற்சொல்லியவர்க்கு மாறாகச் செய்கி றார்கள். சிலர் சில சம்பவங்களை எடுத்துவிட்டுப் புதிய சம்பப வங்களைப் புகுத்துகிறார்கள். ரஸிகனுடைய மனத்திற்குத் திருப்தி உண்டாகும்படி எந்தக்கவியின் அமைப்பு அமைந்திருக்கிறதோ அவனைத்தான் ரசனையில் சிறந்தவன் என்று சொல்லலாகும். உண்மையாகப் பார்க்கையில் பெருங்காப்பியங்களுக்கு ரசனையே இன்றியமையாதது. ரசனா சுகம் இல்லாமல் வேறு எந்த சுகம் இருப்பினும் பெருங்காவியங்கள் பெருமையுள்ளனவாகா"

வ.வே.சு. ஐயர் காவியரசனைக்கு முக்கியத்துவம் அளித்து அச்சுவையை இசை அறிஞரின் ராக ஆலாபனைக்கு ஒப்பிடுகி றார். மேலும் அவர் குறிப்பிடுகையில்,

"காவியத்தின் தனித்தனிப்பாகங்களிலுள்ள இன்சுவை ஒரு பக்கமிருக்க, பாகத்துக்கும் பாகத்துக்கும் உள்ள பொருத்தம் அழ காக இருப்பதோடு காவியமானது நல்ல சமஷ்டீகரணத்தைப் பெற்றிருக்க வேண்டும். எவ்வளவுக்கெவ்வளவு இந்த சமஷ்டீக ரணம் அழகாக இருக்கிறதோ அவ்வளவுக் கவ்வளவு காவியமா னது ரஸிகருடைய இருதயத்தைக் கவர்ந்து எல்லோரும் விரும்பத் தக்கதாகும்....

"ராமாயணத்தின் அழகை விஸ்தரிக்கிறவர்கள் ஒவ்வோர் பாகத்தின் அழகை, சிற்சில வேளைகளில் ஒவ்வோர் செய்யுளின் அழகைத்தான் எடுத்துக் காட்டுகிறார்கள். ராமாயணத்தை ஓர் சிற் பியால் சமைக்கப்பெற்ற அரண்மனையாகப் பாவித்து, அவ்வரண்

மனையின் ஒவ்வோர் அவயவத்துக்கும் மற்ற அவயங்களுக்கும் உள்ள பொருத்தத்தையும், அவயங்களுக்கும் அரண்மனையின் சமக்ர அமைப்புக்கும் உள்ள பொருத்தத்தையும் வியக்தீகரித்து எடுத்துக்காட்டும் விமரிசனங்கள் இதுவரையில் வெளிவர வில்லை".

இராமாயணக் கதையானது உண்மையில் அயோத்தியா காண்டத்தில் தான் விதைக்கப்பபட்டுள்ளது என்றும், அங்கிருந்து கதையானது "ஓர் அரண்மனைக் கட்டடம் போல அழகாயும் கம் பீரமாயும் கிளம்பி, வஸ்து பூர்த்தியாகிறவரையில் ஒரே வளர்ச்சி யாக வளர்ந்து செல்கிறது" என்றும் இப்பெரிய கட்டத்திற்குப் பாலகாண்டம் முன்வாயிற் சோலையாக விளங்குகிறது" என்றும் விவரிக்கின்றார்.

கம்பனது காவியச் சுவை வால்மீகியின் சுவையைவிட உயர்ந்தது என்று கூறிப் பல இடங்களில் அக்கருத்தை நிலைநாட் டுகிறார்.

மாயமான் வந்ததும், இலக்குவனைச் சீதை ஏவும் கட்டத் தில் வால்மீகி சீதை இலக்குவனை இழித்துரைப்பதைக் குறிப் பிட்டு, கம்பன் அக்கட்டத்தை மென்மையாக ஆண்டுள்ளதை விளக்குகிறார்.

வான்மிகியின் சீதை: "என்னைக் காமித்தன்றோ நீ ராமனு டைய அழிவைக் கோருகின்றாய்! என்னைச் சுவீகரிக்கும் பொருட்டே நீ ராகவனுக்குத் துணை புரியச் செல்லுகின்றா யில்லை".

கம்பனின் சீதை:

"ஒரு பகல் பழகினார் உயிரை ஈவரால்!
பெருமகன் உலைவுறு பெற்றி கேட்டு, நீ
வெருவலை! நின்றனை! வேறு என்? யான் இனி
எரியிடை வீழ்ந்து உயிர் இறப்பல் ஈண்டு"[5]

"சீதை லக்ஷ்மணைச் சீறி ராமனை நோக்கிப் போகச் செய்த கட்டத்தில் வால்மீகியின் வேலைப்பாட்டுக்கும் கம்பனுடைய கைநயத்துக்கும் உள்ள தாரதம்மியம் மற்றெங்கேயும் விட அதிக விசதமாக விளங்குகிறது" என்று ஒப்பிடுகிறார் வ.வே.சு. ஐயர்.

"இந்தக் கட்டத்தை வால்மீகியிலும் கம்பனிலும் ஆதியோ

[6] கம்பன் கவிதை: கம்பராமாயண ரசனை பக் 7, 8, 9, 10

டந்தமாய்ப் படிக்குமவர்க்கு வால்மீகி ராமாயணமானது இடைக் கிடைத் தங்க கொடிகள் கொழுத்து ஓடினாலும், பூமியிலுருந்து அப்படியே பாறையோடு வெட்டியெடுக்கப்பபட்ட கட்டியைப் போன்றதுதான் என்றும், கம்பராமாயணம் அத்தங்கத்தை எடுத்து உருக்கி, மாசு போக்கி, வார்த்த சொர்ண விக்ரமாகும் என்றும் தோன்றும்".[6]

"சிறையிருந்தாளின் ஏற்றத்தைக் கூறுகின்றதுதான் ராமாயணம் என்று ஸ்ரீ பிள்ளை லோகாச்சாரியார் சொல்லியதும் "ஸீதாயச் சரிதம் மகத்" என்னும் வால்மீகி ராமாயணப் பாயிரத்தின் சூத்திரத்திற்கு இலக்கியமாக விளங்கும் வால்மீகி ராமாயண சுந்தர காண்டத்தையும்' அதற்கு நான் தோற்றேனில்லை என்று துவஜம் கட்டிநிற்கும் கம்பராமாயண சுந்தர காண்டத்தையும் கருதியேயாகும்".

சுந்தர காண்ட முகப்பாய்வில் வ.வே.சு. ஐயர் இவ்வாறு ஒப்புநோக்கி உவகை கொள்கின்றார்.

இராமாயணக் கதையில் இடையிடையே கூறப்பட்டுள்ள உபாக்கியானங்களைப் பற்றிக் கிஷ்கிந்தா காண்டத்தின் முன்னுரையில் ஆசிரியர் அழகுமிளிர ஆய்வுரை செய்கின்றார்.[7] பால காண்ட ரிஷிய சிருங்கன் கதை, க்ஷீராப்தி மதனம், விசுவாமித்திரன் கூறும் கதைகள், விசுவாமித்திரன் கதை, அயோத்தியா காண்டவிராதன் கதை, சுந்தர காண்ட இலங்கிணியின் கதை, யுத்த காண்ட இரணியன் கதை யாவும் உபாக்கியானங்கள் என்று கூறி, இரணியன் கதையான உபாக்கியானம், காவியத்துக்கு ஈடு இணையற்ற அழகை நல்குகின்றது என்று குறிப்பிட்டுள்ளார்:

"...இரணியன் கதையைத் தான் கதைக்குக் கேடின்றி எடுத்து விடக்கூடும். ஆனால் திசை திறந்து அண்டம் கீறிச் சிரித்த செங்கட் சீயத்தின் கம்பீர்யம் நிறைந்த உபாக்கியானத்தை அமைப்பில் பாகவதக் கதையையும் விஷ்ணுபுராணக் கதையையும் வென்றுவிட்டு, ராமாயணமாகிற வைரமணிமாலையில் இந்திர நீலமணியைப் போல விளங்கும் இந்த அற்புதமான உட்கதையை யாரே ராமாயணத்திலிருந்து எடுக்க ஒருப்படுவர்?"[8]

[7] கம்பராமாயண ரசனை பக்38

[8] கம்பராமாயண ரசனை பக்39

கிஷ்கிந்தா காண்டம் பற்றிக் குறிப்பிடும் அவர், "...வாலி வதை ராமாயணத்தின் வஸ்துவுக்கு அவயவ சம்பந்தம் வாய்ந்த தன்றாதலால் அதை எடுத்துவிட்டதனால் கதைக்கு ஒரு ஊனமும் வராது. ஆனால் கம்பன் தன் நாடகத் திறமையனைத்தையும் இந்த வாலி வதைப் படலத்தில் கொட்டிவைத்துவிட்டான்."[9]

"ஊர்தேடு படலத்தில் கம்பனுடைய செழுமையுள்ள பாவனை சக்தி கரை புரண்டோடி இலங்கையைச் சுவர்க்கத்திற் கும் விழுமியதோர் பூமியாக்கிவிடுகிறது... ஒரு உத்திருஷ்டமான கவிக்குப் பிறகு இன்னொரு கவி அதே கதையைப் பாடினால், முதல் கவியின் போக்கும் வாக்கும் பின்னவன் காலைச் சுற்றி நிற் கும் ஈயத்தளை போலாகிவிடுகின்றன. ஆனால் கம்பன் பூமண்ட லத்தை ஓர் தலையால் தாங்கும் ஆயிரந் தலை ஆதிசேஷன் போல, வால்மீகியின் கனத்தை அலக்ஷியமாய்த் தாங்கி நடப்பதோடு, அவ னது கதையையும் தனக்குக் குற்றேவல் செய்து, தன் உத்பிரேக்ஷை களை அலங்கரிக்கும் மணிப் பூண்களாகச் செய்து விடுகிறான்".

கம்பனது பாவிகப் பண்பைப் பலபடப் பாராட்டியுள்ள வ.வே.சு. ஐயர், தமது "கம்பராமாயண ரசனை"யில், அக்கவிஞ னில் சுவை குன்றிய இடங்களையும் சுட்டிக்காட்டியுள்ளார்.

"ராவணனுடைய காமநோயை வர்ணிக்க கம்பன் 80 செய் யுட்கள் எழுதியிருக்கிறார். இது அதிவர்ணனையே"

"இலங்கையை அனுமன் எரிக்கும் சம்பவத்தில், கடல் தாவு படலத்தில் போல வால்மீகியின் வர்ணனை, கம்பனதைவிட மிக வும் அழகாக இருக்கிறது"

"யுத்த காண்டம் கடல் வர்ணனையோடு தொடங்குகிறது. ***. பைரனுடைய கம்பீரமான சமுத்திர வர்ணனையை நினைவு றுத்தக் கூடிய ரஸிகர் காதில், அடிக்கொருமுறை அவர்கள் விரும் பாமலிருக்கையிலும் கூடத் துவனித்துக் கொண்டிருக்கக் கூடிய செய்யுள் ஒன்றேனும் இப்படலங்களில் இல்லை..."[10]

இவரது கம்பராமாயண ரசனை பற்றிய கருத்து வேறுபாடு கள் அதிகம் இல்லை எனினும் திரு. சேஷகிரி ஐயர், வான்மீகியை "இழிவூட்ட உத்தேசித்ததுபோல் உணர்ந்தேன்" என்று இந்நூலின்

9 கம்பராமாயண ரசனை பக்40

10 கம்பராமாயண ரசனை பக்42-43

முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார். அதனை வ.வே.சு ஐயர் "வால்மீகியில் இரசனைச் சுவை இல்லவே இல்லை என்று நான் கூறுவதாக ஒரு நாளும் ஆகாது. மற்ற இரசனைச் சுவையில் வால்மீகி ராமாயணம் கம்பராமாயணத்தைத் தவிர மற்றெல்லா மகாகாவியங்களையும் இதிகாசங்களையும் விட உயர்ந்தது என்பதே எனது தாழ்ந்த அபிப்பிராயம்" என்று பதில் இறுத்தது போல் தெரிகின்றது.[11]

"கம்ப் நாடர்" எனும் இதழை நடத்தி வந்த மோ.வே. கோவிந்தராஜ ஐயங்காரும், கம்பன் வால்மீகியைவிடச் சிறந்தவன் எனும் கருத்துடையவர். மோ.வே. கோவிந்தராஜ ஐயங்காரின் கருத்தை வ.வே.சு. ஐயருடைய கருத்துடன் நிலை நின்றதனை தமிழ்க்கடல் ராய சொக்கலிங்கம் அவர்கள் பாராட்டியுள்ளார்.[12]

கம்ப ராமாயணத்தில் யுத்த காண்டத்தின் சிறப்பை வ.வே.சு. ஐயர் வெகுவாகப் பாராட்டி எழுதியுள்ளார். கிரேக்க வீர காவியமான இலியத்துடன் யுத்த காண்டப் பகுதிகளை ஒப்பிட்டாய்ந்துள்ளார். "அவ் இலியத்தில் உள்ள சகல சுவைகளையும் இக்காண்டத்தில் நாம் காணலாகும்" என்றும் யுத்த காண்டத்தில், வீரச் சுவையுடன், "சோகம், பயம், வியப்பு, பக்தி, காதல் முதலிய இதர ரஸங்களும் வீர ரஸத்தோடு சம்மேளித்து இக்காண்டத்தை அழகு படுத்துகின்றன" என்றும் தெளிவு படுத்தியிருக்கக் காணலாம்.

"கம்பராமாயணத்தின் யுத்தகாண்டத்தைப் பார்த்தாலும், கம்பன் போர் வர்ணனையில் ஹோமருக்குத் தாழ்ந்தவனில்லை என்றும், சில இடங்களிலும் சில விஷயங்களிலும் ஹோமரது போர் வர்ணனையை வென்றிருக்கிறார் என்றும் கண்டு கொண்டோம்."

## ஆரோகணம் என்னும் உத்தி

காவியப் போக்கில் கம்பன் ஆரோகணம் எனும் உத்தியைக் கையாண்டு வெற்றி கண்டுள்ளார் என்று யுத்தக்காண்டப் பகுதியில் சுவைபட விவரித்துள்ளார்.

---

11. பாலபாரதி மார்ச் 1925

12. மோ.வே. கோவிந்தராஜ ஐயங்கார். ராய.சொ. குமரிமலர், பிப்ரவரி 1973.

"தனிப்போர் வர்ணனை ஓர் பக்கம் இருக்க ராம ராவண யுத்தத்தின் சமக்கிரத்தையும் கம்பன் ஆரோகணம் கிரமம் கெடாமல் அமைத்திருப்பது ஆச்சரியத்தைத் தருகின்றது. இதுவே ரசனையின் பெருந்திறன்... கம்பன் சிறந்த சுவையுணர்ச்சியுடன் படலங்களை ஆரோகணக் கிரமத்திலேயே அமைத்திருக்கிறான்... அவன் முதலில் நாற்பெரும் படைகளும் தத்தமக்குள் போர் செய்தன என்று வர்ணனையைத் துவக்கிக் கொள்கிறான். அவ்வர்ணனை போதிய அளவு சென்ற பிறகு தனித்தனி வீரர்கள் யுத்த அரங்கத்தில் காட்டிய பாராக்கிரமங்களை வர்ணிக்க எடுத்துக் கொள்கிறான். அதுவரையில் அவர்கள் சும்மா இருந்தார்கள் என்ற எண்ணம் படிப்போருக்கு வராதபடி கம்பன் சாமர்த்தியமாகப் பார்த்துக் கொள்கிறான். இது குறித்து நாயகர் இருவர் போர்செய்து ஒருவர் தோற்றுப் பின்னடைந்ததும் கம்பன் உடனே வேறு நாயகரைப் போர்க்களத்தில் புகுவிக்கிறதில்லை. மறுபடியும் ஓர் பொதுப் போரை விஸ்தாரமாக வர்ணித்து பிறகுதான் அவன் இரண்டாவது இணையைக் கொண்டு வந்துவிடுகிறான்"[13]

போர்க்கள வருணனை ஆய்வைத் தமிழில் முதலில் விவரித்தவர் வ.வே.சு. எனலாம். மேனாட்டு இலக்கிய அறிவின் ஊற்றம் அவரை இவ்வாறு சிந்திக்கத் தூண்டியுள்ளது எனலாம்.

"கம்பன் கவிதை" எனும் நூலில், வ.வே.சு. ஐயரின் கம்பராமாயண ரசனை 71 பக்கங்களுடன் நின்று விடுகிறது. மாயா சீதையை இலக்குவன் உருவாக்கும் காட்சியுடன் அவரது ரசனை ஆய்வு நின்றுவிட்டது. அவர் முடிக்கும் முன் அவரது வாழ்வு முடிந்துவிட்டது. இலக்கியத் திறனாய்வு உலகிற்கு அது பேரிழப்பாகும் என்பதில் ஐயமில்லை என மீண்டும் எண்ண வேண்டியுள்ளது.

13 கம்பராமாயண ரசனை: பக்கம் 61

# 12. கம்பராமாயணம் ஓர் ஆராய்ச்சி

வ.வே.சு. ஐயர் தமது பெல்லாரி சிறை வாசத்தில் வடித்த அரிய ஆராய்ச்சி நூலே இந்நூலாகும். கற்றறிந்தார் பரவும் இக் கம்பராமாயண நூலை அவர் அழகுற ஆய்வு செய்து ஆங்கிலத்தில் எழுதியுள்ளார். இந்நூலை அவர் எழுத எடுத்த முயற்சிகள் சொல் லொணாதவை.. காசியிலிருந்த தம் நண்பர் ப. ஆதிமூர்த்தி என்ப வரிடமிருந்து தம் ஆய்வுக்கு துணைநூல்களாக, ஏனைய இந்திய இராமாயணப் பதிப்புகளை அவர் வரவழைத்திருந்தார். வ.வே.சு. ஐயரின் இராமாயண ஆராய்ச்சி தமிழ் அறிஞர்களால் பலபடப் பாராட்டப்பட்டதாகும். பெல்லாரி சிறையில் அவர் இந்த ஆய்வு நூலை எழுதுகையில், Study of Kamban எனும் தலைப்பையே தந் திருந்தார். இந்நூலில் அவர் காட்டும் மேற்கோள்களும் பாத்திரங் களின் பண்பு நலன் பற்றிய ஆய்வுகளும் படிப்போருக்கு நல் விருந்தையும் தொடர் சிந்தனைகளையும் வழங்க வல்லன.

கம்பனின் பாத்திரங்களைப் பிறநாட்டுக் காவியப் பாத்திரங் களோடு நுணுக்கமாக ஒப்பிடுகிறார். கம்பராமாயணத்திலிருந்து நாலாயிரம் பாடல்களை ஆங்கிலத்தில் அவர் மொழி பெயர்த்துள் ளார். அவரது விரிந்த, நுண்ணிய, ஆழமான புலமை இந்நூலின் ஒவ்வொரு பக்கத்திலும் மிளிர்கின்றது. அவர் இவ்வாராய்ச்சி நூலில் அரிஸ்டாட்டில் (Aristotle), ஹோரேஸ் (Horace), மில்டன் (Milton), தண்டி, விர்கில் (Virgil), டேசியர் (Dacier), ஹோமர் (Homer) முதலானோருடைய இலக்கியக் கோட்பாட்டு மேற் கோள்களை எடுத்து ஒப்பிட்டுக் காட்டியுள்ளார். வான்மீகி, துளசி தாசர், பாஸ்கரர் முதலானோருடன் கம்பனை அவர் பல இடங்க ளில் இணைத்துக் காட்டுகிறார். வ.வே.சு.வின் இந்த ஆராய்ச்சி நூலின் முதல் சொற்றொடரே படிப்போரது ஆர்வத்தைப் பாங்கு றத் தூண்டுகிறது.

"இவ்வளவு நாள் வாளாயிருந்துவிட்டு, இப்பொழுது உலக இலக்கியங்களில் மிகச்சிறந்த மகாகவிகளுக்கு இணையாக விளங்குகிற ஒரு மகாகவி தமிழில் இருக்கிறார்; இதை உலகம் உணரவில்லை என்று சொன்னால் அதை உலகம் எளிதில் ஏற் காது. ஆனாலும், தமிழ்க்கவி கம்பனுடைய ராமாயணக் காவிய மானது 'இலியத்' (Iliad) 'ஈனீத்' (Aeneid), 'சொர்க்க நீக்கம்' (Paradise

lost)'சொர்க்க மீட்சி (Paradise Regained)' மகாபாரதம் முதலிய புகழ் பெற்ற நூல்களை விஞ்சக் கூடியது மட்டுமல்ல; ஆதி காவியமான வால்மீகியின் ராமாயணத்தையும் விஞ்சக்கூடியதாகும் என்று நிரூபிப்பதுதான் எனது இந்நூலின் நோக்கமாகும். சொந்த மொழி அபிமானத்தால் சொல்லும் உற்சாகப் பேச்சல்ல இது. பல வருஷங்களாக ஆழ்ந்த ஆராய்ச்சி செய்ததன் பயனாக என்னுள் முதிர்ந்து கனிந்துள்ள அபிப்ராயம் இது, பாரபட்சமில்லாத வாசகர் இந்த நூலைப் படித்தபின் என்னுடைய அபிப்பிராயம் எவ்வாறு சரியானது என்பதை ஏற்கும்படி செய்வேன் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. இந்த நூலில், கண்டதற்கும் அதிகமாகவே அந்த மகாகவியைப் பற்றி மேலும் தெரிந்துகொள்ள விரும்புவார் என்று நம்புகிறேன்."

இவ்வாராய்ச்சிக் கட்டுரையில் கம்பன் வான்மீகியின் கதையை மட்டும் கருவாகக் கொண்டு அதை அவ்வாறே மொழி பெயர்க்காது, கதையைப் பின்பற்றினாலும் அதனை முற்றிலும் தனது படைப்புக் காவியம் போலவே ஆக்கியிருக்கிறார் என்று வ.வே.சு. ஐயர் குறிப்பிடுகிறார். 'கம்பனின் காவியம்' 'அது வால்மீகியின் இராமாயணமன்று, அதைவிட சிறந்ததொரு காவியம்' என்று சொல்லலாம் என்பது வ.வே.சு.வின் கருத்தாகும்.

ஒரு காவியத்தின் இலக்கணத்தினைப் பற்றி வ.வே.சு. ஐயர் குறிப்பிட்டுவிட்டு அதற்கு மேலை நாட்டு அறிஞர்களின் விளக்கங்களையும் நம் நாட்டு அறிஞர் தரும் விளக்கங்களையும் எடுத்துக் காட்டிக் கம்பராமாயணத்தின் கட்டுக் கோப்பு சிறந்ததென்றும், காவியத்தின் பகுதிகள் முழுமை பெற்று விளக்குகின்றதென்றும் கம்பன் வான்மீகியினின்று ஒன்றுபட்டாலும் வேறுபட்டாலும் அவன் கொண்டு போகும் நூலிழை சீராகச் செல்கிறது என்றும் எழுதியுள்ளார். வ .வே.சு. ஐயர், 'கம்பன்தான் முதல் தரமான சித்திரக்காரன்' என்று குறிப்பிட்டு, அவன் பாத்திரங்களையும் கையாளும் சம்பவங்களில் தனித்தன்மையுடன் ஒளிர்கிறான் என்கிறார்.

"இராமாயண கதாபத்திரங்களுக்கு வால்மீகி திட்டவட்டமான உருவம் கொடுத்திருக்கிறார். ஆனால் அதே கதாபாத்திரங்கள் கம்பன் கையில் கம்பீரமாகக் காட்சியளிக்கிறார்கள்.

"வால்மீகியைப் படித்தவர்கள் வால்மீகியின் இராமனையோ, பரதனையோ, இராவணனையோ, கும்பகர்ணனையோ, வாலியையோ, அனுமனையோ, சீதையையோ,

கௌசல்யையோ மற்றவர்களையோ அதை விட உயர்வாக எப்ப டிச் சித்திரிக்க முடியும் என்று யோசிக்கக் கூடும். ஆனால் உண்மை என்னவென்றால் கம்பனுடைய கதாநாயகர்களும், கதா நாயகிகளும் வால்மீகியின் கதாநாயகர்களையும், கதாநாயகிகளை யும் விட சந்தேகத்திற்கு இடமில்லாமல் உயர்ந்தவர்கள் தான்''.

வ.வே.சு. வின் இவ்வாய்வுக்கூற்றுகள் ஆதாரமிக்கவை. கம் பனை முற்றக் கற்றவர்கள் பலர் வ.வே.சு.வின் கருத்துக்களை முழுமையாக ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். வ.வே.சு.ஐயர், கம் பனை எழுத்து எண்ணிப் படித்திருக்கிறார் என்பது அறிஞர்கள் ஒப்புக் கொண்ட உண்மை.

வ.வே.சு. ஐயர் ஆங்கில மொழியின் மரபுக்கு ஏற்ப நயத் தோடு கம்பனது கவிதைகளை யாவரும் போற்றும் வண்ணம் மொழிபெயர்த்திருக்கிறார். கம்பனது பாத்திரங்களில் எதிர்மறை நாயகர்களை எழிலுறப் படம் பிடித்துக் காட்டுகிறார். அவர் கம்ப னின் கவி நயத்தைத் தொடாத இடம் இல்லை. தொட்டதை சுவை குன்றாமல் கூறாமல் விட்டதுமில்லை. இந்திரஜித்துக்கும், இலக்குவனுக்கும் நடக்கும் போரை வ.வே.சு. ஐயர் விவரிக்கும் போது போர்க்களத்தின் ஒலிகளை நம் காதுகளில் கொணர்கிறார். இலக்குவன் மயங்கியதும் இராமன் சகோதர வாஞ்சையால் துடிப் பதை அது அழுகைச் சுவையாயினும் வ.வே.சு. ஐயர் வளமாக வர் ணிக்கிறார். கம்பனின் வாலிவதம் வான்மீகியின் வாலி வதத்தை விடச் சிறப்பாக அமைந்துள்ளது என்பது வ.வே.சு. ஐயரின் கருத்து.

இவ்வாறு கம்பனின் கற்பனைத் திறனையும், கவிதைச் சிறப்பையும், பாத்திரப்படைப்பையும் காவியப்போக்கையும் கவினுற ஆய்ந்த "கம்பராமாயணம் ஓர் ஆராய்ச்சி" (**Kambarama yana - A Study**) என்ற ஆங்கில நூல் 1922ஆம் ஆண்டில் எழுதி முடிக்கப் பெற்றது. ஆனாலும் அது அவர் அமரத்துவம் பெற்றுப் பல ஆண்டுகளுக்குப் பிறகு 1950இல் வெளிவந்தது. காரணம், கம் பனின் பாத்திரப்படைப்புகளைத் தனித்தனிக் கட்டுரைகளில் பாங் குற விவரித்து வந்த வ.வே.சு. ஐயர் சீதையைப் பற்றிக் கடைசி யாக எழுத நினைத்திருந்தார்.

ஆனால் பெல்லாரி சிறையிலிருந்து அவர் அதற்குள் விடு தலை பெற்றுவிட்டார். எனினும் அந்நூலை அவர் நினைத்த வண் ணம் முடிக்க இயலாது போயிற்று. சுமார் 400 பக்கங்கள் அடங்கிய கையெழுத்துப் பிரதியாக இருந்த இதனை, 1950-இல் தில்லி

தமிழ்ச்சங்கம் அக்கறைகொண்டு தமது உறுப்பினர் ஒருவரைக் கொண்டு சீதையைப் பற்றி எழுதச் செய்து, அதனைச் சேர்த்து அந் நூலை வெளியிட்டது. இது கே. சந்தானம் அவர்களின் முன்னுரை யைக் கொண்டது. இதே நூல் பம்பாய் பாரதீய வித்யாபவனால் ஜுன் 1965இல் வெளிக்கொணரப்பட்டது.

வ.வே.சு. ஐயர் இவ்வாய்வு நூலில், இராமன், இலக்குவன், இந்திரஜித், விபீஷணன், கும்பகர்ணன், வாலி, சுக்ரீவன், அனு மன், இராவணன், பரதன் எனப் பத்துப் பாத்திரப் படைப்புகளை ஆய்ந்து விளக்கியுள்ளார். The Episode of Hiranyakashipu' என்னும் தலைப்பில் பத்தாவது (X) கட்டுரையாக கம்பனாகப் படைத்த இரணியன் வகைப்படலத்தை ஆய்ந்து அதில் தோய்ந்து விடுகிறார்.

"The Architectonics", "The Supernatural Elements," "In Medias Res" - என்னும் கட்டுரைகள் முகப்பில் அமைந்தபடி படிப்போரை ஆர் வமுடன் வரவேற்கின்றன. இராமாயணக் கதைச் சுருக்கம் தொடக் கத்தில் இரண்டாம் கட்டுரையாக நீண்ட அளவில் வடிவெடுத்துள் ளது.

"In Medias Res" (Into the midst of things) என்னும் மூன்றாவது கட்டுரையில், ஆசிரியர் நம் நாட்டுக் காப்பியங்களை மேனாட்டுக் காப்பியங்களுடன் ஒப்பாய்வு செய்துள்ளார்.

கம்பராமாயணக் காப்பியக் கட்டுக்கோப்பு அழகை "The Architectonics" எனும் நான்காம் கட்டுரையில் விவரிக்கின்றார்.

ஐந்தாவது கட்டுரையான "The Supernatural Elements" "மீ இயற் கைக் கூறுகளில்" மானுட ஆற்றல்களுடன் தேவ ஆற்றல்கள் இணைவதையும், பிணைவதையும், முரண்படுவதையும் மேனாட்டு இலக்கிய மேற்கோள்களுடன், கம்பனை ஒப்பிட்டு விவரிக்கிறார். கம்பனில் இடம்பெறும் இயற்கையிகந்த நிகழ்வு கள், மேலை நாட்டுக் காப்பியங்களுக்கு மாறுபட்ட வகையில் பாத்திரத்தோடு இயற்கையாக இயைபு கொள்கிறது என்று அவர் தெளிவாக்கியுள்ளார்.

ஆறாம் கட்டுரையில் இராமனைத் தொடங்கிப் பதினான் காம் கட்டுரையில் பரதனைப் புனைந்துள்ளார். பதினைந்தாம் கட் டுரை சீதை பற்றியது. இது டெல்லித் தமிழ்ச் சங்க உறுப்பினரால் எழுதப் பெற்றது என முன்னரே கூறப்பட்டது.

அவரது வருணனைகள் வளமானவை. ஆழ்ந்து படித்து இன் புறத் தக்கவை. In the delineation of character, Kamban stands on a level with the greatest poets of the world. The lines are drawn with firm hand, and characters are painted with such accuracy and fullness that from any single sentence, and sometimes even from a single phrase instead, one can tell the person speaking without any the least doubt". எந்தப் பாத்திரத் தைப் பற்றி அவர் ஆய்ந்தாலும் அதில் முருகுணர்ச்சி தோன்றக் காணலாம். எதிர்மறை நாயகனான இராவணனுக்கும் ஏற்றம் தந்து, அவன் தன் இழிவுணர்வால் இரங்கும் போது இரக்கம் காட்டுகிறார். அவன் பெண்ணின்பால் கொண்ட பேதைமையை இக்கட்டுரையின் முகப்பில் இரண்டே வரிகளில் சுட்டுகிறார்: "Ravana's Chief characteristic in our story is his unholy passion for women"

இராவணன் தேவர்களையும், அசுரர்களையும் யட்சர்களை யும், நாகர்களையும் வென்று மூவுலகிலும் ஆட்சி செய்தவன். அவன் பிறன்மனைமீது பேதுற்றதைச் சூர்ப்பனகையின் சொற்க ளால் வ.வே.சு. ஐயர் விளக்குகிறார்.

"... above all women graced

Is Sita of the dainty waist,
With limbs to fair proportion true,
And a soft skin of lustrous hue,
Round neck and arms rich gems are twined:
She is the gem of womenkind.
With her no Gandarvi vies,
No nymph or goddess in the skies:
And none to rival her would dare...[1]

காவிய நாயகனான இராமனின் ஏற்றத்தைப் பற்றியும் அவர் விளக்கியிருக்கும் பகுதிகள் சுவை பயப்பன. இராமன் அனுமனி டம் கொண்டிருந்த அளவிலா அன்பினை விளக்குகிறார்:

"The affection of Rama to Hanuman is the affection of a great *Guru* to a great diciple. He honours the learning and wisdom and physical strength of the great Vanara. But this respect is warmed by personal affection which arose at the very first sight of him and grew stronger by everyday that passed. It is to him that Rama entrusts his signet ring and his most intimate

[1] Kamba Ramayana - A study - Page 217

message to Sita, at the time that he sends Vanara host in search of her...."[3]

கம்பன் தீட்டிய இராமன் எவ்வாறு ஓங்கி உயர்ந்து நிற்கிறான் என்பதை வான்மீகியின் இராமனுடன் ஒப்பிட்டுக் காட்டுவது படிப்போர்க்கு அமுதச் சுவை வழங்குவதாகும்:

"In fact, Valmiki searched long for an ideal hero, whose achievements he could work out into a Mahakavya, and Narada suggested to him the name of Shri Rama as the proper subject for his contemplated poem. And, grandly has Valmiki exalted and idealised the character of the great hero. But if Valmiki's Rama is grand, Kamban's Rama is, as we have remarked before, grander still. Kamban would leave no littlenes, no crookedness, no commenness, in his hero"[4]

வ.வே.சு. ஐயரின் கம்பராமாயணப் பணி மகத்தானது. எல்லோராலும் என்றென்றும் ஏத்தத்தக்கது. அவர் கம்பனின் கவிதைகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். கவிதையை மொழிபெயர்ப்பது என்பது கடினமானது. அவர் கவிதையை கவிதையாகவே சுவை குன்றாமல் மொழிபெயர்த்தார். ஆங்கில மொழியின் மரபு மாறாமல் அவரது மொழிபெயர்ப்புப் கவிதைகள் மிளிர்கின்றன என்பது பாராட்டத்தக்கது.

அவர் கம்பனது வாஷிவத விவரிப்பை வான்மீகி வாலியுடன் ஒப்பிட்டுக் கம்பனது வாலியின் வாதமும் சிறப்பாக அமைந்துள்ளது என்கிறார். கம்பனின் வாலி எழுப்பும் வினாக்கள் வனப்பானவை என்று தெளிவுபடுத்தியுள்ளார்.

வான்மீகியில் கூறப்பபடாதது இரணியவதைப்படலம். வீடணன் வாயிலாக இரணியனின் அழிவு பற்றிக் கம்பர், கதையில் பொருத்தமாகச் சேர்த்திருப்பதை வியவாதார் இல்லை. வ.வே.சு. ஐயரும் இரணியகசிபுவின் இடைக்கதை ஏற்றமானது என்றே குறிப்பிட்டுள்ளார்.

வ.வே.சு. ஐயரின் கம்பராமாயண ஆராய்ச்சி, ஒப்பியல் ஆய்வுகளுக்கு ஒரு முன்னோடியாகத் திகழ்வது தமிழில் கம்பராமாயணம் உள்ளளவும், வ.வே.சு.ஐயரின் ஆராய்ச்சியும் இணைந்து நிற்கும் என்பதில் ஐயமில்லை. அவருக்குத் தமிழ் இலக்கியத்தின் ஆய்வு உலகம் என்றென்றும் கடப்பாடுடையது.

[3] Kamba Ramayana - A study - Page 52.

[4] Kamba Ramayana - A study - Page 65.

## கம்பன் திறம்

இலக்கிய விமர்சனம் என்றால் என்ன? விமர்சகரின் நேரிய கொள்கைகள் யாவை? என்பவற்றைத் தொ.மு.சி. ரகுநாதன் தமது "இலக்கிய விமர்சனம்" என்னும் நூலில் விரிவாகக் குறிப்பிடும் முன்னர், வ.வே.சு.ஐயரின் கம்பராமாயண மதிப்பீட்டை முன்னு தாரணமாகச் சுட்டுகிறார்.

"கம்பராமாயணத்தைப் பார்ப்போம். எத்தனை பேர் கம்ப னுக்குக் கொள்ளி வைக்கப் பார்த்தாலும், யாராரோ பாடல்களை "உருவுவதும், சொருகுவதுமாய்" இருந்தாலும், கம்பன் சிரஞ்சீவி யாய் வாழ்வான் என்ற நம்பிக்கை எனக்கிருக்கிறது. இந்த நம் பிக்கை தமக்கும் ஏன் ஏற்படுகின்றது என்பதனை எத்தனை பேர் சிந்திக்கிறார்கள்? இன்னும் கம்பராமாயணம் ராம பஜனை செய் வதற்கும், நூல் போட்டுப் பார்ப்பதற்கும் உபயோகப்படுகிறது. கம்பன் வாழ்வது ராம பஜனையாலா? ராமபஜனை காலப்போக் கில் காலாவதி ஆகிவிடும். அத்தோடு கம்பனும் மறைந்து விடு வானா? மாட்டான். காரணம் அவன் கவிஞன்; வெர்ஜில், ஹோமர், தாந்தே, ஷேக்ஸ்பியர், மில்டன் முதலியவர்களையெல் லாம் அறிந்துவிட்டு 'நமது கம்பன் அவர்களுக்கெல்லாம் மேலானவன்" என்று வ.வே.சு. ஐயர் மதிப்பிடும்போதுதான் கம் பனுடைய ஜீவரகசியம் வெளியாகிறது."

வ.வே.சு. ஐயர் தமது கம்பராமாயண மதிப்பீட்டுக்கு முன் னர், அவர் மேனாட்டு இலக்கியவாதிகளைப் பரந்த நோட்டம் விட்டு அகழ்ந்து பயின்றிருக்கிறார் என்பது வெளிப்படை.

வ.வே.சு.ஐயர் தலைசிறந்த கம்பராமாயண விமர்சகர் என்ப தைத் தொ.மு.சி. ரகுநாதன் எவ்வாறு நிலைநாட்டுகிறார் என்ப தையும் காண்போம்.

"விமர்சகனைப் பற்றி மாப்பஸான் கூறும் இலக்கணம் பொருத்தமானது. "ஒரு விமர்சகனின் முக்கிய குணாதிசயங்கள் - உண்மையில் என்ன? தனக்குத்தானே முடிவு கட்டிய கொள்கைகள், குறிப்பிட்ட கலைக்குழாத்தின் அபிப்பிராய பேதங் கள், இலக்கிய வர்க்க உணர்ச்சியால் ஏற்படும் விருப்பு வெறுப்பு கள் - இத்தனையையும் ஒதுக்கி வைத்துவிட்டு, அந்த நூலிலுள்ள எதிர்ப்பு மனோபாவம், ஒத்துவராத மனப்பாங்கு முதலியவை களைச் சரிவர உணர்ந்து, அவைகளைப் பாராட்டியும் தீர்க்கமாய்த்

தெரிவித்தும், விளக்கியும் எழுதுவதோடு, பல்வேறு கலைகளின் பல்வேறு முயற்சிகளை ஒப்புக் கொள்வதும் முக்கியம்.

"மேற்சொன்ன லட்சணங்களை வைத்துக்கொண்டு, தமிழுக்கு வருவோம். தமிழில் இப்படிப்பட்ட விமர்சகர்கள் இருந்திருக்கிறார்களா என்றால், நாம் யோசிக்க வேண்டியிருக்கிறது. தமிழில் இலக்கணத்தைப் பற்றித்தான் பல்வேறு நூல்கள் இருக்கின்றனவேயன்றி, இலக்கியம், அதன் தத்துவங்கள், முதலியனவற்றை விளக்கும் நூல்களே இல்லை. அதனால் இலக்கிய விமர்சகர்களுக்கும் பஞ்சமாய்ப் போய்விட்டது. ஆங்கிலத்தில் ஷேக்ஸ்பியரைப் பற்றி அரிய ஆராய்ச்சி நூல்கள் வெளிவந்திருப்பது போல, தமிழில் கம்பனை முழுவதும் அறிந்து கொள்வதற்குப் பெரும் நூல் ஒன்றும் வெளிவரவல்லை. காலஞ்சென்ற வ.வே.சு. ஐயர் எழுதிய கம்பராமாயண ரசனைச் சுவைப் பகுதியைத்தான் நாம் இன்றைய இலக்கிய விமர்சனத்துக்கு வழிகாட்டியாகக் கொள்ள முடியும். அவரும் ஓரளவுதான் சாதித்திருக்கிறார். அதற்குமேல் அவர் சொல்லாமற்போனது நமது துரதிர்ஷ்டம் தான்.

"வ.வே.சு. ஐயருக்குப்பின் தமிழில் தோன்றிய இருபதாம் நூற்றாண்டு மறுமலர்ச்சி இயக்கம் விமர்சனத் துறையில் புகுந்தது. ஆங்கில நூல் புலமையோடு தமிழில் இறங்கிய இந்தக் கோஷ்டி புதுப்புது வழிகளில் தமிழை வளர்த்தது. மேல்நாட்டுப் பாணிகளையும் கையாண்டது. தமிழ்நூல்களை விமர்சனம் செய்யும் வழக்கத்தையும் இந்த நூற்றாண்டிலே தான் எழுத்தாளர்கள் பிரதம வேலையாகக் கொண்டார்கள்........"

வ.வே.சு. ஐயரின் கம்பராமாயண ஆய்வைச் செல்வி. ஆர். வசந்தி மையக் கருவாகக் கொண்டு ஆய்வு செய்து எம்.பில். பட்டத்துக்காகத் தமது ஆய்வினைச் சென்னைப் பல்கழகத்திற்குச் சமர்ப்பித்துள்ளார். (1987).

# 13. இலக்கணம் - இலக்கியம் - கட்டுரைகள்

## காவிய உத்தியானம்

காவியப் பூங்கா எவ்வாறு அமைய வேண்டும் என்றும்; பல் வேறு மொழிகளில் புலமையாளர் எவ்வெவ்வாறெல்லாம் கைபு னைந்து இயற்றாக் கவின்பெறும் வனப்பைத் தாம் படைத்த காவி யங்களில் காட்டியுள்ளனர் என்றும் வ.வே.சு. ஐயர் எழில்பட விவரித்துள்ளார். வ.வே.சு.வின் இலக்கியப் பணி பற்றிக் குறிப்பி டும்போது இக்கட்டுரை அதில் இடம் பெறாவிடில் அது முற்றுப் பெறாது.

இக்கட்டுரையை ஒரு மேற்கோள் கட்டுரை எனலாம். அவர் படித்துள்ள நூல்கள் இக்கட்டுரையில் மேற்கோள்களாகக் காட்டப் பட்டுள்ளதைக் கவனித்தால் நாம் வியந்து நிற்கின்றோம். அவர் இவ்வியன்மிகு கட்டுரைகளில் கூறியுள்ள கருத்துக்கள் சிந்திக்கத் தக்கவை. இக்கட்டுரை முதலில் "பாலபாரதி"யில் வெளியிடப் பட்டது.

"சராசரி மனிதன் துன்பத்திலும், இன்பத்திலும் சுவையைப் பெறுகிறான் என்றும், சற்று அறிவுமிக்கவர்கள் ஓவியங்களையும் சிற்பங்களையும் கண்டு கலைவண்ணம் துய்க்கிறார்கள் என்றும் குறிப்பிட்டு, "நூல்களை உயர்ந்த ரஸம் நிறைந்த நூல்களை அனு பவிக்கத் தெரியாதவர் மிகவும் சிறு தொகையினராவர். நூல்களை அளவுக்கு மிஞ்சிப் படித்துக்கெட்டவரை நாம் பார்த்ததில்லை" என்கிறார்.[1]

அவர் இக்கட்டுரையில் குறிப்பிடும் உலக அறிஞர்களின் பட்டியல் அவரது பரந்து உலக இலக்கிய அறிவினைப் புலப்படுத் தும்.

உமர் கையம் (Omar Khyyam) என்னும் புலவன் பூங்காவில் தான் விரும்பியதைக் குறிப்பிட்டு, கம்பரின் சுயம்வரப்படலச் சீதையின் வருணணையை விவரித்து, உலக ஒப்பற்ற நாடகங்கள் அவை நிகழ்ந்த களங்களான, ஒலிம்பியா (Olymbiya), ஆதென்ஸ் (Athens) லண்டன், பாரிஸ், மதரீது (Medrid) ரோமாபுரி முதலான நக ரங்களுக்கும், கண்வரின் ஆசிரமத்துக்கும், வான்மீகியின் தபோ

---

[1] *காவிய உத்தியானம்- பாலபாரதி - 1924 (குமரி மலர் 1981 மறு வெளி யீடு)*

வனத்துக்கும் ஜூலியத்தின் (Juliet) கன்னிகா மாடத்திற்கும், ஓராஸி யரின் (Orosius) யுத்த களத்துக்கும், மகாபாரத சித்ராவின் நந்தவனத் துக்கும் நம்மை ஓட்டிவிடுகின்றன என்கிறார். இத்தனை எழுத் தோவியங்களையும் அவர் ஊறிப் படித்தின்புற்றிருக்கிறார் என்பது பெருமைக்குரியதாகும்.கதைகளில் துருக்கிக் கதைகள், மதன காம ராஜன் கதைகள், சீனத்துப் பதுராவின் கதைகள் நிகழ்ந்த அரண்ம னைகளில் நாம் வசிக்கும் உணர்வை உண்டாக்கி விடுவதாகக் கூறுகிறார்.

பொக்காசியோ (Boccocio) கதை, சாஸர் (Chacer) கதை பற்றி யும் குறிப்பிட்டுவிட்டு, நம் இந்திய வேதங்களின் சிறப்பை விவ ரிக்கிறார். பக்திக்காக நம்மாழ்வார், திருநாவுக்கரசர் ஆகியோரது பாடல்களைப் பயில்க என்கிறார்.

நூல்களில் யோப் (Yob) ஸூலெமொன் (Solomon) சிறந்தவை என்றும், கிறித்துவ நூல்களில் நான்கு சுவிசேஷங்களுடன், பவிஷ யத்தரிசனமும் (Revelations) இஸ்லாமியத்தில் முகம்மது நபியின் ஸூராக்களும், குருகோவிந்த சிங்கரின் சண்டி தோத்திரமும் பயம் நிறைந்த பக்திக்குரியவை என்கிறார். வர்த்தமான மகாவீரரின் திரு வாக்குகளும், ஸ்ரீபாகவதம் பகரும் கண்ணனின் திருவிளையாடல் களும் ஆர்வம் ஊட்டுபவை என்றும் கூறுகிறார். "திட நம்பிக்கை வேண்டியவர்கள் ஜாரதுஷ்டிரனுடைய (Zoraster) மணியான வாக்கு களை ஆழ்ந்து படிக்கட்டும்" என்கிறார்.

மேலும், அவர், தெவிட்டாத இன்பம் பயப்பவையாகக் குறிப்பிடும் சிறந்த இலக்கிய நூல்களாவன: இராமாயணம், பார தம், சிலப்பதிகாரம், மணிமேகலை, இலியாத் (Iliad) ஒதூசியம் (Odyssey) ஏனையம் (Aeneid) ஷாஹநாமா, லூஸியத் (The Lusiads) எருசலேம் மீட்டகாதை (Jerusolem Liberated) சுவர்க்க நஷ்ட காவி யம் (Paradise Lost) ஆகும்.

அரிஸ்தோத்தலன் (Aristotle) கூறும் அவலச் சுவை (Tragedy) பற்றிக் குறிப்பிட்டுவிட்டு, சாகுந்தலம், மாலதி-மாவதம், உத்தர ராமசரிதம், மிருச்சகடிகை ஆகியவற்றை அச்சுவைக்கு எடுத்துக் காட்டாக்குகிறார்.

கிரேக்க அறிஞர்கள் எஸ்கூலன் (Aeschylus) ஸோபோகிளன் (Sophoclas) யூரிபெதன் (Euripides) ஃபிரஞ்சு அறிஞர்கள் கோர்னேயி (Corneille) ர்ாஸீன் (Racine) இத்தாலிய அறிஞருள் கால்தெரன் (Cal-deron) ஜெர்மானிய அறிஞருள் கதே (Goethe), ஷில்லர் (Schiller) ஆங்

கில அறிஞருள் பிளொச்சர் (Fletcher), ஷேக்ஸ்பியர் ஆகியோர் வீர நாடகங்களைப் படைத்தோர் என்கிறார்.

வ.வே.சு. ஐயர் எத்தனை இலக்கியவாதிகளின் படையல் களைச் சுவைத்திருக்கிறார்!

நேற்றைய தமிழ் இலக்கியப் படைப்பாளரில் நாடகத் தந்தை பம்மல் சம்பந்தனார் முதலோரது பின்னணியைப் பற்றிப் பேசுகிறார். மோலியோர் (Moliere) என்னும் பிரெஞ்சு ஆசிரியர், ஜோல்ட்ஸ்மிக், ஷெரிதன் (Shridon) என்னும் ஆங்கில ஆசிரியர்க ளின் நாடகத் திறனை ஆய்ந்து வியக்கின்றார். காளிதாசனையும், பவபூதியையும் குறிப்பிடுகிறார். திருவள்ளுவர், பேகன் எனப் பலபுலவர்களது படைப்புகளைப் பல்சுவை விருந்தாக ஏற்றிருக்கி றார் என்பதைக் 'காவிய உத்தியானம்' பளிச்செனக் காட்டுகிறது. அவரது இலக்கியப் பூங்கா, கட்டுரை இலக்கியத்தையும் சுட்டுகி றது. அவரது இக்கட்டுரை, இலக்கியம் கற்போர்க்கு ஒரு வழி காட்டி என்பது துணிபு.

## கவிதை பற்றிய கணிப்பு

வ.வே.சு. ஐயர் தமிழில் கம்பராமாயணம், குறுந்தொகை, கலித்தொகை, பட்டினப்பாலை போன்ற கவிதை இலக்கிய நூல் கள் முற்றவும் கற்றுத் துய்த்தவர். அவற்றை உள்ளத்துள் அசை போட்டு மகிழ்ந்த அறிஞர். அவரைக் கம்பனும், ஹோமரும் கவிதை உலகில் கவர்ந்த கவிஞர்களாகத் தோன்றுவதை அவரது எழுத்துக்கள் ஆங்காங்கே புலப்படுத்தக் காணலாம். அவர் படித்த காவியங்களில் கண்ட கவிதைச் சுவை அவரை வெகுவாக ஈர்த்தி ருந்தது. எனவே கவிதை பற்றிய கட்டுரையை வடித்தார்.

கவிஞர்கள் இயற்கை அழகில் ஈடுபட்டுத் தங்கள் உள்ளங்க ளைப் பறிகொடுத்தவர்கள்; மனித உள்ளங்களைப் படித்தறிந்த பண்பாபளர்கள்; மானுடம் படைத்த மனித நேயத்தினர்.

அவர் 'கவிதை' என்னும் தலைப்பில் 1931-இல் எழுதிய எளிய கட்டுரை, பின்னர் 16.3.1934, 23.3.1934, 30.3.1934 "சுதந்திரச் சங்கம்" எனும் இதழில் மூன்று தொடர் கட்டுரைகளாக வெளிவந் தன.

அக்கட்டுரைத் தொடரில், கவிதை பாடும் கவிஞனின் உளப் பாங்கு, பாடுபொருள், கவிதையின் கூறுகள் என்றெல்லாம் ஆய்ந்து கவிதை இலக்கணத்தைத் தக்க மேற்கோள்களுடனும், சான்றுகளுடனும் விளக்கியுள்ளார். இக்கட்டுரை இலக்கிய உல கிற்கு அவர் தந்த செல்வம் என்பதில் ஐயமில்லை

அவர் கூறுகிறார்; "ஒரு கவிதையிலாகட்டும், காவியத்திலா கட்டும், இரண்டு உறுப்புகள் உண்டு. அவைகளில் ஒன்று அவை களின் அமைப்பு அல்லது நடை, மற்றொன்று அவைகளின் பொருள் அல்லது பாவம். இந்த உறுப்புக்கள் இரண்டும் எந்தக் கவியில் அழகாக அமைந்துள்ளனவோ, அதுதான் நல்ல கவி, இவ் விரண்டு உறுப்புக்ளினுள்ளும் பொருள்தான் முக்கியமானதாக இருந்தாலும், கவிக்கும் கவியுருவம் அல்லது யாப்பு இன்றியமை யாதது. எவ்வளவு அழகான அல்லது உன்னதமான பாவமிருந்தா லும் யாப்பில்லாதது கவியாகாது. மகோன்னதமான கவிதையின் லக்ஷணத்தைச் சுருக்கமாகச் சொல்லுவதானால், அது மனிதனு டைய அறிவை உலக விவகாரத்தினின்று தட்டி எழுப்பி, அதற் குள் அகண்ட உணர்ச்சியை உண்டாக்க வேண்டியது என்பதே."

எடுத்துக்காட்டுகளாக அவர் கைக்கு உடனே வருபவை பெரும்பாலும் கம்பன் பாடல்களே. இராமன் காட்டுக்கு ஏக வேண்டும் என்று அன்னை கைகேயி கூறியதும், "அப்பொழுது அலர்ந்த செந்தாமரையினை வென்றதம்மா" என்னும் புகழ் வாய்ந்த வரிகள்ள எடுத்துக்காட்டுகிறார்.

"ஜனங்கள் கவிதைக்குப் பறந்து கொண்டிருக்கிறார்கள்" என் றும் குறிப்பிட்டு, "மனிதனின் இந்தத் தாகத்தை ஆற்றுவதற்கு நல்ல கவிஞர் முன்னுக்கு வரவேண்டும்" எனும் கோரிக்கையை முன் வைக்கிறார்.

"கவியானவன் உழைத்து உழைத்துத் தன்னுடைய வாக்கில் நல்ல சொல் நயத்தைத் தேடிக்கொள்வது அத்தியாவசியம்" என்று குறிப்பிட்டு Best Words - சிறந்த சொற்கள் கவிக்கு அழகு தரும் என்னும் கருத்தை வலியுறுத்துகின்றார். கவிஞனுடைய கவிதை யில் சொல்லுக்கு முக்கியத்துவம் வேண்டும் என்ற அவர், மாறும் பொருளுக்கு நிறைவு வேண்டும் என்று அடியிட்டுக் கூறுகின்றார்.

இயற்கை வருணனையில் உள்ளதை உள்ளபடி மிகை படாது, கற்பனை கூடாது வருணிப்பதை வ.வே.சு.ஐயர், 'படிப் போர் மனத்தில் அது இயற்கைக் காட்சிகளில் ஒன்றைச் சித்திரித்

துக் காட்டுகிறதே ஒழிய, இருதயத்தில் இறங்கி யாதொரு பேரு ணர்ச்சியையும் கிளப்பவில்லை' என்கிறார். 'உத்கிருஷ்டமான கவிதைக்கு -இன்னும் ஏதோ ஒரு உறுப்பு வேண்டும்; சங்கப்பாட் டான மலைபடுகடாத்தையும், ஆங்கிலத்தில் தாம்ஸன் எழுதிய ருது வர்ணனையையும், கோல்ட்ஸ்மித் எழுதிய பிரயாணி, பாழாய் விட்ட கிராமம் என்னும் நூல்களையும் இந்த இரண்டாம் தர ஜாதியில் தான் நாம் சேர்க்கிறோம் என்ற கருத்தை மொழிந்துள் ளார்.[1] '

*மலைபடுகடாமில்* (205-210),
*"அகன் மலை இறும்பில் துவன்றிய யானைப்*
*பகல் நிலை தளர்க்கும் கவண் உமிழ் கடுங்கல்*
*இருவெதிர் ஈர்ங்கழை தத்திக் கல்லெனக்*
*கருவிரல் ஊகம் பார்ப்பொடு இரிய*
*உயிர்செகு மரபின் கூற்றத் தன்ன*
*வரும்மிசை தவிராது மரம் மறையாக் கழிமின்'*

என வரும் இயற்கை வருணனை வரிகளுடன், தாம் படித் துள்ள ஸேனாங்கூர் எழுதிய 'ஒபெர்மான்' எனும் நாவலின் (1804) ஒரு பகுதியை ஒப்பிட்டுக் காட்டுகிறார்:

"ஏரியின் கரைமீது ஏறி நின்றேன். ஏரி நீரின் சிற்றலைகள் கரையில் மோதி மோதி மடிந்த வண்ணமாக இருந்தன. காற்று அசைவற்றிருந்தது. ஒரு பொருளேனும் சலிக்கவில்லை. ஜாமத் தோடு ஜாமம் நான் அங்கேயே நின்றுவிட்டேன். வைகறையாகை யால் சந்திரன் தரையின் மீதும் நீரின் மீதும் தன் கடைசிக் கிரணங் களை வீசி மனத்தின் சொல்லொணாத ஒரு சோகத்தை உண்டாக்கிவிட்டான். மலை வாயிலில் விழுந்து கொண்டிருக்கிற சந்திரனுடைய நிலவில் மூழ்கியிருக்கும் இரவின் நிசப்தத்துக்கி டையில் கூரையில் தனியாக நின்று கொண்டு சிற்றலைகளின் மெல்லிய ஓசையைக் கேட்டுக்கொண்டே தியானத்தில் அமிழ்ந்து விடும் போது பிரகிருதியில் தோற்றம் வீறுடைத்தாயிருக்கின்றது."

இதற்குத் துணையாகத் தாகூரின் இயற்கை வருணனைக் கவி தையையும் ஒப்பிட்டுக் காட்டித் தாகூரின் கவிதை இயற்கை வரு ணனையில் சிறந்து விளங்குவதாக வ.வே.சு. ஐயர் குறிப்பிட்டுள் ளார்.

[1] *'சுதந்திர சங்கு'* 16.3.1934, 23.3.1934

வ.வே.சு.ஐயரின் வாதம் இவ்வாறு இருக்க சங்க இலக்கி யங்களின் நூல்களில் ஸேனாங்கூர், தாகூர், ஆகியோரின் வருணை னைக்கு ஈடான பாடல்கள் உள்ளன என்பது தெளிவு. அகப்பாடல் களில் இவ்வகை வருணனையைக் கண்டு மகிழாமல் இருக்க முடியாது. ஏனெனில் சங்கப் புலவர்கள் இயற்கையிடம் தம்மைத் தந்துவிட்டவர்கள். மேலும் 3000 ஆண்டுகட்கு முற்பட்ட மலை படுகடாம் இயற்கை வருணனை இயல்பானது. பத்தொன்பது இருபதாம் நூற்றாண்டு எழுத்தாளர்களின் வளர்ச்சி எத்தனை ஆண் டுகளில் வளர்ந்தது என்பதையும் நாம் எண்ண வேண்டியுள்ளது.

உரைநடையைவிடக் கவிதைக்கே உயர்வு தருகின்றார் வ.வே.சு.ஐயர். சொல்வதை நறுக்கென்று சொல்லவல்லது கவிதை எனும் கருத்துடையவர் அவர்.

'உண்மையான கவி மாத்திரம் நமக்கு அகப்பட்டுவிட்டரானா னால் நமது நாடே ஈடேறிப் போய்விடும். இறந்து போன ஜாதிக ளையும் எழுப்ப வல்லது கவிதை ஒன்றேதான்' என்கிறார் வ.வே.சு. ஐயர்[2] உண்மையில், அவர் பாரதியாருடன் பழகி அவரது கவிதைக்கு அடிமையானவர் அல்லவா?

வ.வே.சு. ஐயருடைய "கவிதை" என்ற கட்டுரை 'தமிழ் இலக்கிய வரலாற்றில் ஒரு முன்னோடி என்பது திறனாய்வாளர் சி.சு. செல்லப்பாவின் கருத்து:

"கவிதை - கட்டுரை - தமிழ் விமர்சனத்துறையில் ஒரு ஆரம் பம் செய்து வைத்திருக்கின்றன என்று துணிந்து சொல்வேன்."

இது உண்மையான கூற்றாகும். வ.வே.சு. ஐயர் போன்று அவருக்குக் முன்னர் கவிதை பற்றி விரிவாக எவரும் தமிழில் ஆய்ந்து எழுதியதில்லை.

## பிரயோக இலக்கணம்

வ.வே.சு. ஐயர் 1916ம் ஆண்டில் படைத்தது பிரயோக இலக் கணம் என்னும் நூலாகும். பலசொல் ஒரு பொருள் தரும் சொற்க ளைத் தர்க்க ரீதியில் ஆராய்ந்து இந்த இலக்கணத்தைத் தமிழ் மக் களுக்கு அளித்திருக்கிறார். ஒவ்வொரு சொல்லுக்கும் அது

[2] சுதந்திர சங்கு 30.3.1934 - வ.வே.சு. ஐயரின் அரசியல் இலக்கியப்பணி கள் பெ.சு.மணி (மேற்கோள்)

பயன்படுத்தப்படுகின்ற இடத்துக்கு ஏற்ப உரிய பொருள் தருவதைத் தக்க எடுத்துக்காட்டுக்களோடு விளக்கியுள்ளார்.

*பிரயோக* இலக்கணம் என்னும் பாலபாரதியின் இக்கட்டு ரைத் தொடரின் நோக்கம் பாமர மனிதனும் எவ்விதக் குழப்பமும் இல்லாமல் உரிய இடத்தில், உரிய சொல்லைப் பயன்படுத்த வேண்டும் என்பதற்குப் பயிற்சி தருவதேயாகும்.

இத்தொடரின் ஏழாம் கட்டுரையில் யோக்கியதை, மரி யாதை, மானம் ஆகிய சொற்களைப் பற்றிப் படிப்போர் மனதில் வியப்பும் பெருமிதமும் உண்டாகும் வண்ணம் பாங்குறப் படைத் துள்ளார். அவர் கூறுகிறார்:

"யோக்கியதை என்பது தகுதி. இதிலிருந்து நாணயம் என் னும் பொருளைக் குறிக்கும்"

"மரியாதை என்பது மனிதரிடத்தில் ஒருவன் நடந்துகொள்ள வேண்டிய ஒழுக்கமுறைமை. இதிலிருந்து பிறர் ஒருவன் விஷயத் தில் நடந்து கொள்ளும் நீதி என்பதையும் குறிக்கும்".

"மானம் என்பது கவுரவம். உத்தமமான பெருமை".

"யோக்கியதைக்கும், மானத்துக்கும் மனிதனுடைய நிச்சயம் தான் பிரதானம்."

"மரியாதைக் குணம் வேண்டுமானால், நல்ல குடிப்பிறந்தா ரோடு பழகித்தான் ஆகவேண்டும்."

"யோக்கியதையும், மானமும் அநேகமாய் சர்வதேசங்களுக் கும், சர்வகாலங்களுக்கும், பொதுவான தர்மங்கள்.".

"ஆனால் ஒரு நாட்டில் மரியாதை என நினைக்கப்படுகிற நடத்தை இன்னொரு நாட்டில் முற்றிலும் மாறாகக் கருதப்பட லாம்".

"சாதாரண நடவடிக்கையில் காட்டப்படும் நேர்மையைப் பற்றிப் பேசும் போது மரியாதை என்ற பதத்தைத்தான் பிரயோ கிக்க வேண்டும்."

"பிறர் நம்மை மரியாதையாக நடத்தவேண்டும் என்று நாம் விரும்பினால், நாம் பிறரை எப்பொழுதும் மரியாதையாகவே நடத்தவேண்டும்".

"வேலையாட்களிடத்திலும், தொழிலாளிகளிடத்திலும் கூட மரியாதையான வார்த்தைகள் பேசுவதுதான் நாகரிகத்துக்கு அழகு"

"சொல் நாணயம் தவறுகிறவர்களுக்கு மரியாதை போய் விடுகிறது."

"யோக்கியதை அற்றவனை மனிதர் நம்பமாட்டார்கள்."

"மரியாதை அற்றவனிடம் ஜனங்கள் நெருங்கமாட்டார் கள்".

"மானம் இல்லாதவனை யோக்கியர்கள் தங்கள் கோஷ்டி யில் சேர்க்கமாட்டார்கள்."

"உயிரை விட்டும் மானத்தைக் காக்க வேண்டியது ஆண் மக்கள் கடன்"

"எப்பேர்ப்பட்ட வறுமையான நிலைமைக்கு வந்துவிட்ட போதிலும் ஒருவன் யோக்கியதையினின்று வழுவக் கூடாது"

வ.வே.சு. ஐயர் மானுடம் வென்ற மாமானுடர். மனித நேயம் மிக்கவா. மனிதனை மனிதனாய் நடத்தவேண்டுமென்று வற்புறுத்தி வந்தவர். மரியாதையின் பெருமையை மதித்தவர். அன்பின் வழிப்பட்டவர். வேகம் கூடியவரானாலும் விவேகம் நிறைந்தவர். அவர் மனித இயல்பையும் நன்கு அறிந்து, அம்மனி தன் நடைமுறை வாழ்க்கையில் சொல்லாலும், செயலாலும், தவ றுவதைக் கூர்ந்து கவனித்தவர். சமுதாயத்தில் மனிதர்கள் நடைமு றைத் தவறுகளைச் செய்யும்போது அவர்களைத் திருத்தும் நோக்கத்தோடு யோக்கியதை, மரியாதை, மானம் முதலிய சொற் களுக்கு உண்மைப் பொருளை உணர்த்தி நயமோடு, அவன் நடை முறையில் யோக்கியதையோடும், மரியாதையோடும், மானத்தோ டும் நடந்து கொள்ள வேண்டிய பாங்கைப் பிரயோக இலக்கணம் என்னும் இத்தொடரில் வலியுறுத்திச் சொல்லுகிறார் இலக்கியப் படைப்பில் இது வியத்தகு படைப்பு.

பழக்கம், வழக்கம் இரண்டுக்கும் இடையே உள்ள வேறு பாட்டை இனிமையாக எளிதாக எல்லோருக்கும் புரியும் வண் ணம் எடுத்தியம்புகிறார். தாம் எழுதியதை எளிய நடையில், நேரி டையான வகையில், சுருக்கமாகச் சொல்லுவதுதானே ஓர் இலக்கியவாதியின் ஆற்றல். அது வ.வே.சு. ஐயருக்குக் கைவந்த கலை.

"ஒரு மனிதனோடு, அல்லது ஒரு தொழிலில், நெடுநாள் பழகி வருவதில் இருந்து பழக்கம் ஏற்படுகிறது."

"ஒரே காரியத்தை அநேக தடவைகள் செய்து வந்தால், அந்த காரியம் செய்வது வழக்கமாகி விடுகிறது"

"மனிதன் துஷ்டர்களோடு பழகினால் தானும் துஷ்டனாகி விடுகிறான்."

"காப்பி, தேயிலை, புகையிலை, அபினி, கஞ்சா, கள், சாராயம் முதலிய விஷயார்த்தங்களை உபயோகிப்பது ஒருவனுக்கு வழக்கமாகி விட்டால் அவைகளால் வரும் கோரமான நோய்களை அனுபவிக்கையில் கூட, அவனுக்கு அந்த வழக்கத்தை விடுவதில் அசாத்தியமாகி விடுகிறது."

"ஒரு தொழிலில் தேர்ச்சியடைய வேண்டுமானால் இடைவிடாது அந்த தொழிலைப் பழகி வரவேண்டும். சித்திரமும், கைப்பழக்கம் செந்தமிழும் நாப் பழக்கம்."

"எல்லா வழக்கமும் மனிதனை அடிமைப்படுத்தி விடுகிறது. ஆகையால் தனக்குத் தீயவழக்கங்கள் படியாதிருக்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டும்"

"தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்" என்கிறார்கள். ஆனால் ஜனங்கள் இந்தப் பழமொழியை வழக்கத்தைக் குறிக்கிறதுக்குத்தான் தவறாக உபயோகிக்கிறார்கள்."

வ.வே.சு.ஐயர் இவ்வாறு கோஷ்டி, கூட்டம், சங்கம் என்னும் கூட்டுச் சொற்களுக்கும், தோற்றம், சாயல், மாதிரிகள் ஆகிய கூட்டுச் சொற்களுக்கும் இன்னும் பல கூட்டுச் சொற்களுக்கும் வியத்தகு முறையில் விளக்கம் தந்து விருந்து படைத்திருக்கிறார். அவருடைய கட்டுக்கோப்பான இந்தக் கட்டுரைத் தொகுதியில் கம்பன் தோன்றுகிறான், திருவள்ளுவர் தெரிகிறார். அரிஸ்டாட்டிலும், சாக்ரடீசும் புலப்படுகிறார்கள், நபிகள் நாயகமும், இயேசு கிறிஸ்துவும், புத்தரும் தென்படுகிறார்கள். கண்ணனும், இராமனும் காட்சி தருகிறார்கள். உலகத்து அறிஞர்கள் அத்தனை பேரும் இக்கட்டுரை வரிசையில் வெளிப்பட்டு மிளிர்கிறார்கள்.

வ.வே.சு. ஐயருக்கு இவ்வகையான இலக்கியங்களைப் படைப்பதற்கு எங்கே, எப்போது தம் உள்ளத்தில் எண்ணம் தோன்றியது என்பது சிந்திப்பதற்குரியது. ஆனால் இவரது "நோட்டுப்புத்தகம்" பல குறிப்புகளைத் தாங்கி "கருத்து வங்கி" (Idea Bank) யாகத் தோன்றக் காணலாம். இலண்டனில் வாழ்ந்த காலத்திலோ, பாரிசில் புகுந்த காலத்திலோ, கெய்ரோவில் காலடி வைத்த காலத்திலோ, கப்பல் பயணவேளையிலோ, புதுவை போந்த நேரத்திலோ அவ்வெண்ண அலைகள் ஏற்பட்டிருக்கக் கூடும். அக்குறிப்புகள் "நோட்டுப் புத்தகத்தில்" நுழைந்திருக்கக் கூடும். பின்னர் உருப்பெற்று நம் போன்றார்க்கு அவரிடமிருந்து படையலாக பரிமாறப்பட்டிருக்கவேண்டும்.

## ராஜகோபாலன் கடிதங்கள்:

வ.வே.சு.ஐயர் இப்பெயரில் பாலபாரதியில் உணர்ச்சி பொங்கும் கடிதங்களை அவ்வப்போது எழுதி வந்தார். கடிதங்களின் முடிவில் ராஜகோபாலன் என்று குறிப்பார். தம்முடைய தகப்பனாரின் தலைப்புப் பெயரை வெ. என்று முன்னால் எழுதி இராஜகோபாலன் என்று தம் பெயரை மாற்றி எழுதி வந்தார். இக் கடிதத் தொடரில் சங்க இலக்கியச் செய்திகளையும் பிறநாட்டு வரலாறுகளையும் தம்மை ஆட்கொண்ட சம்பவங்களையும் சுவைபட எழுதுவார்.

அவர் எழுதியுள்ள ஒரு கடிதத்தின் பகுதியை இலக்கியச் சுவைக்காகக் காண்போம். அவர் தம் வாழ்நாளில் நம் மக்களது வாழ்க்கை பற்றிய விமர்சனம்:

பிரிய நண்ப,

இவ்வூரில் இருந்து வருவதில் ஒரு விஷயம் இடைவிடாது கண்ணில் பட்ட வண்ணமாக இருக்கிறது. ஜனங்கள் எந்தக் காரியத்தைச் செய்தாலும் அலட்சியமாக, வன்மையின்றி, வேகமின்றி, செய்து வருகிறார்கள். 'என்ன மெதுவு என்ன சோம்பல்' என்ன அஸ்வாரஸ்யம்' நிலத்தை உழுகிறவன் நிலத்தில் கொழும்முனை நன்றாக அழுந்தும்படி பிடித்து உழுகிறானில்லை. மரத்தை இழைக்கும்போதும், பலகைகளை அறுக்கும்போதும், கதவு முதலிய சாமான்கள் சேர்க்கும்போதும் தச்சனுடைய கை மிக மிக மெல்லச் செல்லுகிறது. இரும்பு அடிக்கும் கொல்லன் கூடவா "சவுக், சவுக்" என்று அடிக்க வேண்டும்? செம்மட்டியையும் பழுக்கக் காய்ந்த இரும்பையும் காணும் போதே என் புஜங்களின் தசை பூரித்து வஜ்ராயுதத்தின் வேகத்தைப் பெறுகிறது. பூரண பலத்தையும் பிரயோகித்துக் கடுமையாக வேலை செய்து, கடினமான காரியங்களை முடிப்பதில் ஊறிவரும் மனவெழுச்சியையும் மகிழ்வையும் அனுபவியாமல் இவ்வூர் ஜனங்கள் நடைப்பிணங்களாக நிற்பதைக் காண, எனக்கு ஒரு புறம் எரிச்சலும், இன்னொருபுறம் அவமதிப்பும் உண்டாகிறது. ஒரு கூட்டம் தேவாங்கு வாழ்க்கை வாழ்ந்து கொண்டா இருக்கும்? 'ஐயோ பாவம்' பெரு முயற்சியினால் வரும் சுகத்தை இவர்கள் என்று தான் அனுபவிப்பார்களோ[1].

- வெ. ராஜகோபாலன்

---

பாலபாரதி

வ.வே.சு. ஐயர் ஓயாது படிப்பவர். ஆங்கில மொழிக் கட்டுரைகளையும் வேறு மொழி நூல்களையும் விரும்பிப் படிப்பவர். தாம் பெற்ற கல்வியை மற்றவரும் பகிர்ந்துகொள்ள வேண்டும் என்னும் எண்ணத்துடன் அக்கருத்துக்களைப் *"பாலபாரதி"*யில் *ராஜகோபாலன் கடிதங்கள்* என்னும் தலைப்பில் எழுதி வந்தார். தாம் பெற்ற பெருங்கருத்துக்களைப் பண்டைத் தமிழக வரலாற்றுப் பெருமையுடன் ஒப்பிட்டு எழுதுவார். தமிழகப் பண்பாட்டைப் பெரும்பாலும் நினைவு கூர்வதிலேயே அவர் கவனமாயிருந்தார். **ராஜகோபாலன் கடிதங்கள்** தவிர தமிழ்த் தாள்களில் எழுதிய கட்டுரைகள் பல தமிழ்ப் பண்பாட்டைப் பிரதிபலிப்பன.

தமிழ் நாகரிகம் பற்றிப் *"பால பாரதி"*யில் ராஜகோபலன் எழுதிய கடிதமாக வெளிவந்த கட்டுரையின் ஒரு பகுதியைக் காண்போம்.

"தமிழ்நாட்டின் மகாயுகங்களை நினைக்குங் காலத்தில் என் மனம் பூரிக்கின்றது. என் தோளில் புதிய வன்மை பிறக்கின்றது. நான் புதிய மனிதனாகவே போய் விடுகிறேன். முற்காலத் தமிழரின் பெருஞ்செயலை உள்ளது உள்ளபடியே நினைத்துப் பார்க்கும் பொழுது, பிரம்மாண்டமான மனத்தையுமே தன்னுள் அடங்கி வைக்கக் கூடிய ஆற்றலுடைய மனதுகூட இவ் உத்யமத்தை அளந்து பார்க்கத் தனக்கு இராதோ என்று ஐயுறுகின்றது. இவை அனைத்தையும் நினைக்குங்காலத்தில் பழந்தமிழரின் உத்யமம் ஐநூறு வருஷங்களுக்கு முன் ஐரோப்பா காட்டத்துவங்கிய உற்சாகத்துக்கும் புதுமை நாட்டத்துக்கும் கொஞ்சமேனும் தாழ்ந்ததில்லை என்று அடிக்கடி எனக்குள் சொல்லிக் கொள்வேன்."[2]

"தமிழன் என்று சொல்லடா, தலைநிமிர்ந்து நில்லடா" என்னும் நாமக்கல் கவிஞரின் கருத்தின் பிரதிபலிப்புகளை **ராஜகோபாலன் கடிதங்களில்** காணலாம்.

ஒரு கடிதத்தில் இயற்கை வருணனையை எழுத்தோவியமாகத் தீட்டுகிறார்:

'இப்பொழுது கலியாண முருக்கமரமானது கமுக மரத்தோடு கொஞ்சுவது போலிருக்கிறது. சற்று நேரத்துக்கெல்லாம் அது தணல் போன்ற மலர்களை அந்தப் பக்கத்திலிருக்கும் மாமரத்தினிடம் காட்டச் சென்றுவிடுகிறது. கூந்தற்பனை கைகளை ஆட்டிக்கொண்டு சிரிக்கின்றது. இளநீலமாயிருக்கிற இந்த மூங்கிற்

2. **பாலபாரதி டிசம்பர் 1924**

போத்துகள் வெகு ஒயிலாகப் பரதம் பிடிக்கின்றன. தூரத்திலிருக்கும் ஆலமரம் ஆயிரங்கால் மண்டபம் போலக் கம்பீரமாய் நின்றுகொண்டிருக்கிறது. மரங்களுக்கு மத்தியிலும் ஒவ்வொரு மரத்திலும் கிளையின் இடைவெளிகளிலும் தோன்றுகின்ற நீல ஆகாயம் எத்தனை வித உருவத்தைத்தான் எடுத்துக்கொள்ளுமோ! மத்தியில் மேகங்கள் உலவுகின்றன. அவைகள் பூணும் மாறுவேஷங்களுக்கு எல்லையே இல்லை. இப்படியிருக்கையில் நாரைக்கூட்டம் கூட்டமாகப் பறந்து ஆகாயத்திற்கே மாலையிடுகின்றன போலச் செல்லுகின்றன. மயில்கள் மரத்தினின்று மரத்திற்குத் தாவிச் சிறகை விரித்தாடுகின்றன. சூரியப் பிரகாசம் ஆங்கங்கே மரங்களின் அடர்த்திக்கு நடுவே ஊடுருவிப் பாய்ந்து வந்து தரையில் ஒளியையும் நிழலையும் ஆயிரம் 'மோஸ்தராகப்' பின்னிவிடுகின்றது'[3]

நக்கீரர் திருமுருகாற்றுப் படையில் நவின்ற கைபுனைந்தியற்றாக் கவின் பெருவனப்பை இக்கட்டுரை மெய்ப்பித்திருக்கின்றது.

ராஜகோபாலன் கடிதங்கள் பாலபாரதியில் ஒரு பல்சுவை விருந்தாகவே மிளிர்ந்தது எனலாம். வ.வே.சு. ஐயர் நிறையப் படிப்பார் என்பதை அறிந்தோம். அவரைக் கவர்ந்த எழுத்தாளர்களில்' ஒருவரான சார்லஸ் கிங்ஸ்லி பற்றி அவர், Westward Ho! or the Voyages and Adventures of Sir Hunyas Leigh - என்னும் பெயரில் 1885 இல் வெளியிடப்பட்ட புதினம் பற்றி ராஜகோபாலன் கடிதம் வழியாக விவரிக்கின்றார்:

"எல்லோரையும் விட கிங்ஸ்லி எழுதிய போ மேற்கு நோக்கி என்ற கதை எனக்கு உண்டாக்கிய மனவெழுச்சியை என்னால் வர்ணித்தெழுத முடியவில்லை.... அக்கதையை படிப்பவனுடைய மனக்கண்ணின் முன்னே, பொருளும் புகழும் ஈட்டி இவ்வாழ்க்கையை அசாமானியமான வாழ்க்கையாக்க வேண்டும் என்கிற பேராவல்களும், அபாயங்களை எதிர் சென்று தாக்கி வெல்ல வேண்டும் என்கிற வீராவேசமும், போர் முனையில் வீர வெறி கொண்டு பகைவர் மேல் விழுந்து வாகை மாலையைப் பறித்துத் தன் தோளில் அணிய வேண்டும் என்கிற உள்ள வெறுக்கையும் அலைமேல் அலை விழுவது போலவும் கொந்தளித்துக் கொண்டு செல்லாநிற்கும்... தமிழ் நாட்டின் மகாயுகங்களைப் பற்றி ஆராயும் போது போ மேற்கு நோக்கி! என்கிற நூலின் நினைவு வராமல் இருப்பதில்லை".

3. பாலபாரதி 1924 ஐப்பசி

எது படித்தாலும் அதில் காணும் வீர உணர்வைத் தமிழர் பெற வேண்டும் என்று விரும்பி இதழ்களில் எழுதி வந்தவர் வ.வே.சு. ஐயர்

'ராஜகோபாலன் கடிதங்கள்' சிலவற்றைக் கதையாகவும் மதிப்பிட்டுப் புதுமைப்பித்தன் கூறியுள்ளார்: 'அவர் நடத்திய ராஜ கோபாலன் கடிதங்கள் என்பவற்றிலும் அபூர்வமான கதைகள் பல உண்டு. எடுத்துக்காட்டாக, 'சுடலை முத்து' கதையைக் கழறும் கடிதமும், 'வேணுகோபாலய்யர்' எனும் பண்ணையார், 'பார்வதி' ஆகியோர் பற்றிக் கூறும் கடிதமும் சிறுகதைகளாகவே மிளிரக் காணலாம்.'[4]

எனவே கடிதத்திலும் கதை வரைந்த கலைஞராக வ.வே.சு.ஐயர் விளங்கினார். இது எழுத்துலகில் அந்நாளைய புது மையேயாகும்.

## மகளிர் மேம்பாடு

வ.வே.சு. ஐயர் "பெண்ணியம்" பற்றி இரு கட்டுரைகள் எழுதியுள்ளார். இவை 1919 தை 3 ஆம் நாள் 'தேசபக்தன்' நாளிதழ் அனுபந்தத்தில் 'பாரதகண்டத்தில் ஸ்திரிகளின் ஸ்தானம்' என வெளிவந்தது. அது படிப்பவரைப் பரவசப்படுத்த வைக்கும்; வர லாற்றுண்மையை உணரவும் வைக்கும்.

'கலித்தொகை குறுந்தொகைகளையும் மற்றுமுள்ள அகப் பாட்டுக்களையும் படிக்கையில் பண்டைய நாட்களில் தமிழ்ப் பெண்கள் விவாக விஷயத்திலும் மற்ற விஷயங்களிலும் எத்தனை சுதந்திரம் அனுபவித்தார்கள் என்பது நன்கு புலனாகும். மற்றெந் தப் பாஷையில் பாடிய பெண் கவிகளை விடத் தமிழ்ப் பாஷை யில் பாடிய பெண்களின் தொகை மிகவும் அதிகம். மக்களுக்கு வீரியம் புகட்டுவதில் வகதேமோனியப் பெண்கள் நம் தமிழ்த் தாய்மார்களைவிட உயர்ந்தவர்களாய் இருந்ததில்லை'.

பழம்பெருமையைப் புகன்ற வ.வே.சு. ஐயர் அவர் காலத் தில் பெண்கள் 'பாரதியின் புதுமைப் பெண் போன்றிலங்க வேண் டும்' என்னும் கருத்தைத் தமது கட்டுரைகளில் சுட்டியுள்ளார்.

"இது நவயுகம். புதிய எண்ணங்களும் புதிய சக்திகளும் தோன்றியிருக்கின்றன. நாம் மனுவின் காலத்திலும் ஆபஸ்தம்பன் காலத்திலும் வசிக்கவில்லை... இதிலெல்லாம் பழைய ஸ்மிருதிகள்

4. புதுமைப்பித்தன் கட்டுரைகள்

இடம் கொடுக்கின்றனவா, கொடுக்கவில்லையா என்று விவாதிப் பது பிசகு. ஸ்மிருதிகள் இத்தனை இருப்பதே காலதேசங்களுக்கு ஏற்பப் பழக்க வழக்கங்கள் மாற வேண்டியது அவசியம் என்பதை நிதரிசனமாகக் காட்டுகின்றது... தற்காலத்தில் ஐரோப்பியாவில் இரக்கமின்மையும், பேராசையும், தன்னம்பிக்கையும் தாளுட்டி யமும், அறிவு விசாலமும், ஸர்வ ஜன சமத்துவமும் உலகத்தில் சிருஷ்டித்துவிட்டிருக்கிற புதிய சந்தர்ப்பங்களுக்குப் பொருந்திய தாகவும் நமது வாழ்க்கை இருத்தல் வேண்டும்".

விடுதலைப் போராட்டத்தில் பெண்கள் பங்கேற்க வழி வகை காண வேண்டும் என்று விழைந்தவர் அவர். வ.வே.சு. ஐயர் குறிப்பிட்டிருப்பதாவது:

"தேசாபிமான தர்மாபிமானம் இல்லாத குடும்பங்களில் பெண் கொடுப்பதுமில்லை, வாங்குவதுமில்லை என்று நம் சகோ தரிகள் ஒரு சிறிய விரதம் எடுத்துக் கொண்டால் அடுத்த நாளே நம் நாட்டில் ஒளி பிறந்துவிடும்."[5]

"ஸ்திரிகளைச் சம்பாதிக்கும்படி விடுவ்து முடிவில் நல்ல பலனைத் தராது என்று தோன்றுகிறது.... ஐரோப்பிய ஸ்திரிகளில் பெரும்பாலோர் தற்காப்புக்காக ஏதாவது ஒரு தொழில் செய்ய வேண்டியிருப்பதில், அங்கே பெண்மைக்குரிய குணங்கள் குறைந்து வருகின்றன... மனிதனுக்கு நட்பையும், அன்பையும், ஆறுதலையும் தந்து அதற்குக் கைமாறாக முரட்டு வேலைகளிலும் கூலிக்குச் செய்வதனால் சுமை அற்ற வேலைகளிலும் இறங்காமல் காக்கப்பட வேண்டியது ஸ்திரிகளின் உரிமை என்பது என் தாழ்ந்த அபிப்பிராயம்".

'தாயின் கடமை' எனும் கட்டுரையில் தாய்மார்களால் பிள் ளைகள் உருவாக்கப் படுகின்றனர் எனும் செய்தியைத் தக்க மேற் கோள்களோடு கூறுகிறார்:

"சிங்கத்தின் வயிற்றில்தான் சிங்கப் பிள்ளைகள் பிறக்குமாத லால், இவர்கள் தங்களுடைய மனதில் வீரியம் நிரப்பிக் கொள்ள வேண்டியதவசியம். குந்தி பிறந்ததும் நம் நாடன்றோ? சிவா ஜியை வளர்த்த ஜீஜிபாய் நம்முடைய மகாராஷ்டிரத்தின் பெண் ணல்லவா? குலோத்துங்கனைச் சோழ அரசைப் பிடித்துக்கொள் ளும்படி அடிக்கடி தூண்டி வந்து, அவனுக்கு உற்சாகம் தந்தவள் அவன் தாயான அம்மங்காதேவி அல்லவா?

"ஆகையால் இவர்களது சந்ததிகளான நமது தாய்மார்களி

5. தாய்நாடு, வார இதழ் 21.5.1923 மறுவெளியீடு குமரிமலர் பிப்ரவரி 1984

டம் தங்கள் மக்களை வீரர்களாக்கும் சக்தி சஞ்சிதமாகக் கட்டாயம் இருக்கிறது...வன்மையும் உறுதியுமற்ற இக்காலத்தில் பிறந்து, மற்ற நாட்டுப் பெண்டிருக்குள்ள கல்வி, சுதந்திரம் முதலிய சௌகரியங்கள் இல்லாதிருந்தும், தங்களுடைய மனோநிச்சயத் தைச் சாதனமாகக் கொண்டு, நாட்டைக் கைதூக்கி விடக்கூடிய புருஷர்களை வளர்த்துத் தந்து விடுவார்களானால், உலகமே நமது பெண்டிரை மெச்சும்."[6]

உறுதியாகப் பெண்ணால் எதுவும் ஆகும் எனும் நம்பிக்கை கொண்டவர் வ.வே.சு. ஐயர். பெண்மைக்கு ஏற்றம் தந்தவர். வ.வே.சு. ஐயர் பெண்களால் நல்ல பிள்ளைகளை உருவாக்க முடி யும் என்று நம்பியவர். வ.வே.சு. ஐயர். அவர்களது கனவு இனியா வது நிறைவேறுவதாக.

தமிழர் நாகரிகத்தையும் அவரது வரலாற்றுத் தொன்மையை யும் எண்ணி இறுமாந்தவர் வ.வே.சு ஐயர். அவர் எழுதுகிறார்:

"நம்முடைய நாட்டார் குறைந்தது 8000 - வருஷங்களுக்கு முன் 4000 மைலுக்கப்பாலிருக்கிற ஒரு நாட்டுக்குத் தரை மார்க்க மாகவும் சென்று, அங்கே இன்னும் எல்லாராலும் வியக்கத்தக்க ஒரு விஸ்தாரமான நாகரிகத்தை ஸ்தாபித்து, அதைக் குறைந்தது 4000 வருஷங்கள் செழித்தோங்கச் செய்தார்கள் என்று அறியத் தமிழ் நாட்டார் அனைவருக்கும் ஒரு பெரிய உற்சாகம் பிறக்கும் என்பதற்குத் தடையேயில்லை. அந்த உற்சாகம் தற்காலமும் நாக ரிகத்திலும், அறிவிலும், ஆண்மையிலும் தொழில் திறமையிலும் மற்ற ஜாதியாருக்குச் சரியாக வளர வேண்டும் என்ற எண்ணத்தை உண்டாக்கி அதற்காக இரவும் பகலும் முயற்சி செய்து வரும்படி அவர்களைத் தூண்டிவிட வேண்டும் என்று ஈசுவரனைப் பிரார்த்திக் கிறேன்."[7]

தமிழக வரலாற்றுச் சிறப்பு பற்றிய தமது கண்ணோட் டத்தை வ.வே.சு. ஐயர் 'சுதேசமித்திரன் வருஷ அனுபந்த மலரி'ல் எழுதிக் குறிப்பிடுகிறார்.

"சேர, சோழ, பாண்டியர்கள் காலத்திலும் பல்லவ அரசர்

6. வ.வே.சு. ஐயர் அரசியல்-இலக்கியப் பணிகள் பெ.சு.மணி (மேற் கோள்)

7. ஸ்வராஜ்யா - ஜூலை 29, 1925, மறுவெளியீடு குமரி மலர் 1985

காலத்திலும் விஜய நகரத்து ராயர்கள் தென் தேசத்தில் ஏகாதிபத்யம் வகித்த காலத்திலும், தமிழறிவாவது லௌகீக விஷயங்களிலாகட்டும், அத்தியாத்ம விஷயங்களிலாகட்டும் கம்பீரமான வேலைகள் செய்திருக்கிறது. மதுரைச் சங்கத்தின் பழைமையைப் பற்றிச் சொல்லவே வேண்டாம்.''

"அருகில் உள்ள நண்பன் நோய்வாய்ப்பட்டுக் கிடந்தால் அவனைச் சென்று பாத்துவா; தொலைவில் உள்ள நண்பனுக்குத் தொடர்ந்து கடிதம் எழுதிவா". என்று ஸ்பானியப் பழமொழி பகர்கின்றது. கடிதம் எழுதுவது மாணவர்களுக்கு ஒரு கலையாக இருக்கலாம். ஆனால் கடிதம் மனித நேயத்தை வளர்க்கக்கூடியது. கடிதம் எப்போதும் சுருங்கச் சொல்லி விளங்க வைக்க வேண்டும். வ.வே.சு. அய்யர் அவர்கள், பதிலை எதிர்பார்ப்பவர்கள் என்பதை உணர்ந்தவர். உடனே பதிலும் எழுதுவது அவரது கடமையாக இருந்தது.

தாம் "தேச பக்தன்" இதழை நடத்தி வந்தபோது திருச்சியில் இருந்து வா. வாசுதேவன் என்பார் தேசபக்தனுக்கு அடிக்கடி கட்டுரைகள் எழுதியனுப்புவார். அவருக்கு வ.வே.சு ஐயர் மனித நேயத்தோடும், பத்திரிகை ஆசிரியர் பொறுப்போடும் பதில் எழுதுவார்.

சென்னை, வைகாசி - 4

திரு. வா. வாசுதேவன்
காங்கிரஸ் காரியாலயம்

பிரிய சகோதர,

உனக்குப் பணம் அனுப்பி வரும்படி காரியஸ்தலத்தில் சொல்லியிருக்கிறேன். பணம் அனுப்பியாகி விட்டதா, இல்லையா, என்று தெரிந்துகொள்ள, இங்குக் காரியஸ்தரில்லை. வந்து விட்டிருக்கும் என நினைக்கிறேன்.

இப்பால் உன் வியாசங்களை அதிகமாகத் திருத்த வேண்டியிருக்கிறது. எனக்கு அது மிகவும் சிரமமாயிருக்கிறது. ஆகையால் கவனித்து, தொடர்ச்சி தவறாமல், பொருத்தத்தோடு எழுதிவரக் கோருகிறேன்.

வந்தே மாதரம்
வ.வே.சு.ஐயர்

## கட்டுரை வரைதலில் நுணுகி ஆய்வு செய்யும் ஆற்றல்

வ.வே.சு. ஐயர் கம்பராமாயணத்தை ஆழங்கால் பட்டுப் படித்து ஆய்வு செய்தார் என்பது நாம் அறிந்ததே. அவர் தாம் எதைப் பற்றி எண்ணினாலும் ஆழ எண்ணுவார். அதைப் பற்றி அழகாக எழுதுவார். "பொழுதைக் கழிப்பது எப்படி?" என்று வ.வே.சு. ஐயர் தீவிரமாகச் சிந்தித்தார். எவ்வாறெல்லாம் பய னுள்ள முறையில் பொழுதைக் கழிக்க வேண்டும் என்று ஆய்ந்து, ஒரு நாளில் கிடைக்கும் அறுபது நாழிகைகளைச் செலவிடும் வழி முறைகளை வகுத்து, ஒரு கட்டுரையில் தருகிறார். புத்தகம் படிப் பது, விளையாட்டு விடுவது (சதுரங்கம் ஆடுவது அறிவிற்குப் பயன்), நல்ல உரையாடலில் ஈடுபடுவது, குழந்தைக்குப் போதனை செய்வது, இசையில் ஈடுபடுவது, இயற்கை அழகைச் சுவைப்பது, கவிஞர்களின் காவியச் சுவையில் ஈடுபடுவது நல்ல பொழுது போக்குகள் என்று விரிவாகக் கட்டுரையில் விளக்கியுள் ளார். நல்ல நூல்களைப் படித்துப் பொழுது போக்குவது பற்றிக் குறிப்பிடுகிறார்.

"கையில் மிகுதியாக இருக்கும் நேரத்தில் ஒரு பாகத்தைப் பத்திரிகைகள், நூல்கள் முதலியன வாசிப்பதில் செலவிடுவதன் அவசியத்தை அதிகம் எழுத வேண்டுவதில்லை. ஆனால் வாசிப் பது நல்ல நூல்களாக இருக்க வேண்டும். உயர்ந்த அபிப்பிராயங் களும், உயர்ந்த ஆதர்சங்களும் உள்ள நூல்களேதாம் வாசிக்கத் தக் கவை. அவையின்றி அவர்த்தனமான சம்பவங்கள் நிறைந்த கதைகளைப் படித்து, அறிவைக் கெடுத்துக் கொள்வதைவிட நல்ல விளையாட்டுகள் விளையாடுவது எத்தனையோ உத்தமமா னது"[8] எதையும் ஆற ஆய்ந்து தெளிவாகக் கட்டுரை எழுத வேண் டும் என்று அறிவிக்கும் சிறந்த கட்டுரையாளர் வ.வே.சு. ஐயர் என்பதற்குப் 'பொழுதைக் கழிப்பது எப்படி?' என்னும் கட்டுரை சிறந்த எடுத்துக்காட்டாகும்.

"திராவிடர்களின் கடமை" எனும் சிறப்புக் கட்டுரையில் தமிழகத்தின் தனிப்பட்ட பண்பாட்டின் பெருமையைப் பலவாறா கப் பாராட்டிக் குறிப்பிட்டுள்ளார்.

"தமிழ் நாகரிகத்தின் பழமை" பாராட்டி எழுதிய கட்டுரை

8 பாரததேவி நாளிதழ்: புதுவருட மலர் 13.4.1949. மறு வெளியீடு குமரி மலர், 1981

யில் ஆசிரியர், "ஆதிகாலத்தில் வெட்டியிருக்கிற சிலைகளைப் பார்க்கிறபோது அவற்றின் நடை, உடை பாவனையெல்லாம் திரா விட தேசத்திலுள்ள நடை உடை பாவனைகளோடு மிகவும் நெருங்கியிருக்கின்றன என்பது நிஸ்ஸந்தேகமாய் விளங்குகிறது என்னும் கருத்தை பிரிட்டீஷ் கண்காட்சிச் சாலை அலுவலர் எச்.ஆர். ஹால் என்பவரின் ஆய்வை ஆதரித்து, மெஸோபத்தாமி யாவில் பழங்காலத்தில் வாழ்ந்த "அஸ்ஸிரியர்" எனும் இனத்தா ருக்கும் திராவிட இனத்தாருக்கும் இருந்த பல ஒற்றுமைகளை மேற்கோள் காட்டித்தம் தருத்தை நிலை நாட்டியுள்ளார்.

ஐரோப்பிய நாகரிகம் இந்தியருக்கு ஏற்றதல்ல என்னும் கருத்தை அடிக்கடி வலியுறுத்தி வந்தவர் வ.வே.சு. ஐயர்.

"நமது நாட்டில் தற்கால நாகரிகமும், ஐரோப்பிய நாகரிக மும் ஒன்றையொன்று சந்தித்திருப்பதல்லாமல் ஒன்றையொன்று வெல்ல முயன்றும் வருகின்றன. முதலில் ஐரோப்பிய நாகரிகம் வென்றுவிடும் போலிருந்தது. அதன் வெளிப் பகட்டு வெகுநாள் வரையில் நம்மை மயக்கி விட்டிருந்தது. ஆனால் அனுபவம், ஆக ஆக, ஐரோப்பிய நாகரிகமானது ஐரோப்பியருக்கு வேண்டுமா னால் சரியாக இருக்கலாம். ஆனால் நமக்கு அது அறிவு நாசத்தை யும், ஆத்ம .நாசத்தையுமேதான் தருகின்றது. ஆகையால் நாம் அதைப் பின்பற்றி அனுசரிக்கிறது என்பது பேதமை என்னும் விஷ யத்தை நம் ஜாதி கண்டு கொண்டுவிட்டது."

# 14. வ.வே.சு. ஐயர் வழங்கிய முன்னுரை, ஆய்வுரை, விமரிசனம்

பொ. திருகூட சுந்தரம்பிள்ளை இயற்றிய *மார்க்க ஔரேலியன்* என்னும் நூலுக்கு வ.வே.சு. ஐயர் முன்னுரை அளித்துள்ளார்:

"ஸ்ரீமான் பொ. திருகூடசுந்தரம்பிள்ளை அவர்களின் நூல்களுக்கு அன்னியரின் முகவுரை அநாவசியம் என்று தமிழ் உலகம் சொல்லும் என்பதில் சந்தேகம் இல்லை. மகாத்மா காந்தியின் சத்தியாகிரக வியாசங்களில் பலவற்றைத் தொகுத்துத் தமிழ் செய்து ஸ்ரீமான் பிள்ளை அவர்கள் தமிழர்க்குப் பேருதவி செய்திருக்கிறார்கள். மகாத்மாவின் நூல்களை மொழி பெயர்ப்பதற்கிடையிலேயே பிள்ளை அவர்கள் தமிழ் மொழியின் மீதுள்ள ஆர்வ மிகுதியால் உலகப் பிரசித்தமான இன்னொரு நூலை சம்க்ஷேபமாக மொழி பெயர்த்து வெளியிடுகிறார்கள்.

"இந்நூல் தான் **மார்க்கஸ் ஔரேலியன்** என்னும் ரோமானிய சக்கரவர்த்தியின் ஆத்ம-விசார ரூபமான மணிமொழித் தொகுதி. இந்நூலிற்கு உலகத்தின் அறநூல்களில் சிலவற்றைத்தான் இணையாகக் கூறமுடியும். எல்லாவற்றையும் யோசித்துப் பார்த்தால் திருவள்ளுவ தேவரின் திருக்குறளின் யோக்கியதை இந்நூலுக்கு உளது என்று சொல்லலாகும்.

"ஆனால் இதனுள் இன்னொரு விசேஷமிருக்கிறது. திருக்குறள் எழுதியவர் இல்வாழ்க்கையினராக இருந்தபோதிலும் உலக விவகாரங்களில் கொஞ்சமேனும் சிக்கிக்கொள்ளாமல் அவற்றிற்குப் புறம்பாகவே நின்று அவற்றை ஒரு சாட்சியைப் போல் பார்த்து அறிந்து எழுதினவராவார். மார்க்கஸ் ஔரேலியனோ ஒரு சக்கரவர்த்தி. சுமார் பதினைந்து லட்சம் சதுரமைல் விஸ்தீரணமுள்ள ஓர் ஏகாதிபத்தியத்தை "வறிஞன் ஓங்கும் ஓர் செய் எனக் காத்து" ரட்சித்து வந்த அரசர்க்கரசன். அவனுடைய ஆத்ம விசாரணை, போர்க் களத்தினிடையிலும், மந்திர சபைக் கூட்டங்களின் மத்தியிலும், நீதி செலுத்தும் மன்றங்களிலும், சூழ்ச்சிக்காரர்கள் உடைய சூழ்ச்சியைக் குலைக்கச் செய்யும் முயற்சிகளுக்கு இடையிலும் நிகழ்ந்ததாகும்.

"ஜனகர் முதலானவர்கள் கருமத்தினாலேயே மோட்ச சித்தி அடைந்தனர் என்ற கீதாவாக்கியம், மார்க்கஸ் ஔரேலியனுக்கும் பொருந்தும் என்றால் அவனுடைய பெருமை படிப்போர்க்கு ஒரு வாறு விளங்கும். அசோகன், ஹர்ஷன், குலசேகரன், சேரமான் பெருமாள் நாயனார் ஆகிய இம்மகான்களைத் தான் ஔரேலிய னுக்கு ஒப்பிட்டுச் சொல்ல முடியும்.

"ஸ்ரீமான் பிள்ளை ஆங்கில மொழிபெயர்ப்பினின்று இம் மணி மொழிகளைத் தேர்ந்தெடுத்துத் தமிழ்ப்படுத்தி வெளியிடுகி றார்கள். இம் மொழிகளை மொழி பெயர்த்ததோடு நில்லாமல், அவர், ஆசிரியனுடைய சரித்திரத்தையும், அவன் காலத்தில் அவ னது ஏகாதிபத்யம் இருந்த நிலைமையையும் பற்றிய சில செய்தி களை முகவுரையில் எடுத்துக்காட்டிப் படிப்போர்க்கு ஆசிரியரினு டைய உள்ள நிலைமையை நன்கு தெரியும்படிச் செய்து வைத்து இருக்கிறார்கள்.

"அவரைப் பார்த்து மற்றோரும் மேனாட்டு, வடநாட்டு நூல் களைத்தமிழ்ப்படுத்தித் தமிழ் இலக்கியத்தை வளர்த்து வருவார்க ளானால் இன்னும் சில வருஷங்களுக்குள் நமது தாய்மொழியா னது வங்காளி, குஜராத்தி, மராத்தி, தெலுங்கு முதலிய தனது சகோதரிகளின் முன் தலைநிமிர்ந்து நிற்கலாகும்.

படிப்போர் இந்நூலைச் சிரத்தையோடு படித்து ஆயிரத்து எழுநூறு வருஷங்களுக்கு முன் எழுதப் பட்டிருந்தாலும் சத்தியத் தின் சக்தியான நித்தியத் தன்மை பெற்றுவிட்ட மார்க்கஸ் ஔரே லியனுடைய மணிமொழிகள்படி தங்கள் வாழ்நாளை நடத்திவர முயலவேண்டும் என்று வற்புறுத்தி இவ்வுரையை நிறுத்திக் கொள்வேன்"

வ.வே.சு ஐயர் அவர்கள் எந்த இலக்கியக் கூறிலும் சிறந்து இலங்குபவர் என்பதற்கு இந்த முன்னுரை ஓர் எடுத்துக்காட்டா கும். அவரது சிறுகதைத் தொகுதி எவ்வாறு சிறுகதை இலக்கியத் திற்குத் தமிழ்மொழியில் முன்னோடியாக விளங்குகின்றதோ அவ் வாறே, முன்னுரை இலக்கியத்திலும் முதன்மைத் திறனாய்வாளாராக இவர் விளங்கி நிற்கிறார் எனலாம். அத்துடன் வ.வே.சு ஐயரின் தமிழ் சொல்லாட்சித் திறன் சிறந்திருப்பதைக் கண்டு மகிழலாம்.

## ஆய்வாளர் வ.வே.சு. ஐயர்

பாரதியாரின் "கண்ணன் பாட்டு"க்கு வ.வே.சு. ஐயர் எழுதிய முகவுரை, பாரதியின் பாடலுக்குச் சிறந்த மதிப்பீடாக அமைந்தது. அத்துடன் அந்த மதிப்பீடு வ.வே.சு.வின் நயமான நடைக்கும் நல்லதோர் எடுத்துக்காட்டாகவும் அமைந்திருக்கக் காணலாம்.

"கடற்கரையில் சாந்திமயமான சாயங்கால வேளையில், உலகனைத்தையும் மோஹவயப்படுத்தி நீலக்கடலையும் பாற்கடலாக்கும் நிலவொளியில், புதிதாகப் புனைந்த கீர்த்தனங்களாகக் கற்பனை கர்வத்தோடும் சிருஷ்டி உற்சாகத்தோடும் ஆசிரியர் தம்முடைய கம்பீரமான குரலில் பாடினதைக் கேட்ட ஒவ்வொருவரும், இந்நூலிலுள்ள பாட்டுக்களை மாணிக்கங்களாக மதிப்பர்."

"கண்ணன் பாட்டில்" பாரதியார் நாயக-நாயகி பாவத்தை நவீனமான முறையில் நளினமாகக் கையாண்டுள்ளார்.

"கண்ணன் பாட்டுக்கு" வ.வே.சு. ஐயர் வழங்கியுள்ள மதிப்புரையில் மற்றொரு பகுதி சுவைத்தற்குரியது. ஒரு முழுமையான இலக்கியத் திறனாய்வாளாராகத் திகழ்கிறார் வ.வே.சு. என்பதை இவரது வரிகள் தெளிவுபடுத்துகின்றன.

"நாயக-நாயகி பாவம் - இந்தப் பாவத்தை ஆளுவது கத்தியின் கூர்ப்பக்கத்தின் மீது நடப்பதைப் போன்ற கஷ்டமான காரியம். ஒரு வரம்பு இருக்கிறது. அதற்கு அப்புறம் போய்விட்டால், அசந்தர்ப்பமாகிவிடும். ஸ்ரீபாகவதத்திலும்கூட கோபிகா உபாக்யானங்களில் சுகபகவான் இவ்வரம்பை அங்கங்கே கடந்துவிட்டிருக்கிறார் என்பது எனது தாழ்ந்த அபிப்பிராயம்.

"நமது கவியும் இப்பாவத்தை விரிக்கையில் பரபக்தியைவிடச் சாரீரமான காதலையே அதிகமாக வர்ணித்திருக்கிறார். ஆனால் சுகப்பிரம்மம் நிறுத்த முடியாததான தராசுமுறையை நம் ஆசிரியர் நிறுத்தவில்லை என்று நாம் குறை கூறலாமா? இந்தக் கீர்த்தனைகளாகப் பரபக்திக்கும் பேரிலக்கியமாகக் கொள்ள வேண்டுவதில்லை. ஆசிரியர் இந்நூலில் கவி என்கிற ஹோதாவில்தான் நம்மிடம் வருகிறார் என நினைக்கவேண்டும். கவிதா ரீதியாகப் பார்க்கும்போது, இக்கீர்த்தனங்களும் பெரும் பாலானவையிலுள்ள சுவை தேனினும் இனிதாயிருக்கிறது."

## விமரிசகர் வ.வே.சு.ஐயர்

"*பாலபாரதி*"யில் அவர் பணிபுரிந்தபோது விமரிசனத்துக்கு வரும் நூல்களைத் தாமே முழுக்கப் படித்து, சீர்தூக்கும் சமன் கோல் போன்று நடுநிலை பிறழாது மதிப்புரை எழுதி வந்தார். குணமும் நாடிக் குற்றமும் நாடி, அவற்றுள் மிகை நாடி மிக்க கொள்வது மதிப்புரையாளரின் அறன்.

சு.கணேசன் என்பார் எழுதி 29, பைகிராப்ட்ஸ் சாலையில் (திருவல்லிக்கேணி) வெளியிட்ட நீதிதர்மம், ஆரோக்கியவழி என்னும் இரு நூல்களுக்கு மதிப்புரை எழுதுகிறார்.

இரண்டும் மகாத்மா காந்தியாரது எழுத்துகளின் மொழி பெயர்ப்பு நூல்கள்.

"கடைசி ரிஷி மகா சமாதி அடைகிற வரையில், சுருதியின் மந்திரங்கள் முடியமாட்டா. மற்றும் புதிய மந்திரங்கள் தோன்றிக் கொண்டே வரும் என்று ஸ்வாமி விவேகானந்தர் மிக அழகாகக் கூறியுள்ளார். இன்று பரம்பொருள் மகாத்மாகாந்தியின் துவாரா புதிய உபநிஷத்துக்களை மனிதனுக்குத் தந்து கொண்டு வருகிறது. ஆகையால் அவ்வாக்குகளைத் தமிழ் செய்து வெளிப்படுத்தி வருவதற்காக, நாம் பிரசுரக்காரருக்கு வந்தனம் செலுத்த வேண்டியது அவசியம்."

"வியாதி என்பது நம் தேகத்தில் ஏற்பட்டுள்ள அசுத்தங்களை வெளிப்படுத்தும்படி நமக்கு எச்சரிக்கை செய்கின்றது. அவ்வெச்சரிக்கையை நாம் ஏற்றுக்கொண்டு அந்நோயின் மூலமாகவே சரீரத்திலுள்ள அசுத்தங்களையெல்லாம் வெளிப்படுத்தி விடுதல் நன்றாகும். அஃதன்றி மருந்துகளாகச் சாப்பிட்டு, அத்தகைய அசுத்தங்களைத் தேகத்திலேயே அழுத்தி வைத்து அவை பின்னர் வேறு ரூபங்களெடுத்துத் தலைகாட்டும்படிச் செய்கிறோம். வியாதிகளால் சாகிறவர்களைவிட, மருந்துகளால் சாகிறவர்கள் அதிகமென பேக்கர், பிராங்கு என்ற பெரிய வைத்திய நிபுணர்கள் கூறியுள்ளனர். * * * ஆகவே மகாத்மா கூறியுள்ள சாதனங்களை அனுசரித்து அதன்வழி நடப்பின் நாம் வியாதிகளை ஒருவாறு ஜயித்தவர்களாவோம்"

விமரிசனக் கலை வல்லவரான வ.வே.சு.ஐயர் தமது மதிப்பீட்டில் விவேகானந்தரையும், ஃபிராங்கு, பேக்கர் என்னும் மருத்துவ நிபுணர்களையும் தக்கபடி மேற்கோள் காட்டி, தமது அறிவின் அகலத்தைப் புலப்படுத்தியுள்ளார்.

ம.ஸா.சுப்பிரமணிய அய்யர் எழுதி, சென்னை, அய்யப்ப செட்டிவீதி, மயில் வாகன கம்பெனியினர் வெளியிட்ட "இராஜ புத்திரவிஜயம்" நூல் பற்றிய மதிப்புரை:

"இவ்வரிய புத்தகம் தெள்ளிய நடையில் உள்ளங் கவருமாறு எழுதப்பட்டுள்ளது. தமது வீரத்தாலும், பொறுமையாலும், நாட்டன்பாலும், உலகைத் திகைப்பிக்க, மகாராணா பிரதாப சிம்ஹன், அமரசிம்ஹன் முதலியோரின் திருக் கதைகளை உருக்கமுடன் புகட்டும் இந்நூல் படிப்போருக்கு வீரஉணர்வை அளிக்கிறது. **** நாட்டன்பையும், அற உணர்ச்சியையும் எழுப்பக் கூடிய இந்நூலை ஆதரிப்பது தமிழர் கடன். இத்தகைய நூல்களைப் பள்ளிக்கூடங்களில் பாடமாக வைத்தால் நமது வருங்காலத் தமிழ்நாடு வீரசக்தி பெற்று விளங்கும் என்பது எமது எண்ணம்."

## ஜனாப் தாவூத் ஷாவின் வெளியீடுகள்:

"தாருல் இஸ்லாம் பத்திராதிபரான பா. தாவுத்ஷா அவர்களால் எழுதப்பட்ட அரிய புத்தகங்களை வரவேற்கிறோம்."

"நாயக வாக்கியங்கள்: ரசூலல்லாவின் 451 வாக்குகள் அடங்கியது. படிக்கப்படிக்க மனத்திற்குச் சாந்தமளிக்கக் கூடியது. நாயக வாக்கியங்கள் இரண்டு பாகங்களும் வெகுசிரத்தையுடன் தயாரிக்கப்பட்டிருக்கின்றன. இவ்விரண்டும் ஒவ்வொரு தமிழர்களிடமும் அவசியம் இருக்க வேண்டியது."

"ஜீவாஹிருல் புர்கான்: திருக்குரானின் தமிழ்மொழி பெயர்ப்பு. இதன் இரண்டு பாகங்களும் தமிழுலகிற்குப் புதிதாய் அளிக்கப்பட்ட ரத்னங்களாகும். குரான் திருவாக்குகளைத் தெள்ளிய தமிழில் மொழிபெயர்த்து, அதற்கு விரிவான வியாக்கியானமும் விடுத்து இந்நூல் எழுதிய பெரியாரை அன்புடன் ஆதரிக்கத் தமிழ்நாட்டார் அனைவரும் கடமைப்பட்டிருக்கிறார்கள்."

"காந்தி பிள்ளைத்தமிழ்" "ஆசிரியர் ஸ்ரீமான் ராய- சொக்கலிங்கன், காரைக்குடி. ஆத்மசக்தி வீரரான மகாத்மாவுக்கும் பிள்ளைத் தமிழ் பாடித் தமிழ்நாட்டிற்கு அரிய பாத் தொண்டு செய்த திருவாளர் ராயசொக்கலிங்கமவர்களின் அரிய தமிழன்பைப் போற்றுகிறோம். இவ்வரிய நூல் காந்தியைப் பத்து பருவங்களில் இனிய நடையும், விழுமிய கருத்துமுள்ள பாக்களால் பாடுகிறது. இதன் செந்தமிழ் நடைபோற்றத்தக்கது. இச்சீரிய நூல் தமிழுக்கோர் அணியாகுமென்பது எமது எண்ணம்".

# 15. மொழிபெயர்ப்பாளர் வ.வே.சு.

வ.வே.சு. ஐயர் எப்போதும் புதிய நூல்களைக் கற்றபடி இருப்பார். “புஸ்தகம் ஹஸ்தபூஷணம்” என்னும் பழமொழி அவருக்கு மிகவும் பொருந்தும். ஆங்கில நூல்களில் நெப்போலியன் வரலாறு, எமர்சனின் கட்டுரைகள் எனப் பல நூல்களைப் படித்தவர். எதைப் படித்தாலும் அந்நூலில் காணப்படும் சிறந்த கருத்துக்களைத் தமிழர் அறிய வேண்டுமென்ற ஆர்வம் கொள்வார். அதனால் அதனை மொழிபெயர்ப்புச் செய்துவிடுவார்.

தன்னடக்கம் கொண்ட அவர் தமது மொழிபெயர்ப்புப் பற்றி ழான் ழாக் ரூஸோ எழுதிய ‘ஜனசமூக ஒப்பந்தம்’ கட்டுரையை முதன் முதலில் தமிழில் மொழியாக்கம் செய்து வெளியிடுகையில் குறிப்பிடுவதாவது.[1]

“மொழிபெயர்த்தோன் குறிப்பு:”

“சகம் 1682 (கி.பி.1762) ஆம் வருஷத்தில் பிரான்ஸ் தேசத்தில் வித்துவானும் தத்துவ சாஸ்திரியுமான ‘ழான் ழாக் ரூஸோ’ என்பவன் ‘ஜன சமூக ஒப்பந்தம்’ என்ற அரிய கிரந்தத்தைப் பிரசுரப்படுத்தினான்.

“அது வெளிவந்தது முதற்கொண்டு பிரான்ஸ் தேசத்திலும் அதன் கீர்த்தி பரவி, அது இதர பாஷைகள் அநேகங்களில் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. இந்தப் பிரக்கியாதியுள்ள கிரந்தம் தமிழ் நாட்டார் எளிதில் படிக்கும்படித் தமிழில் மொழிபெயர்க்கப்பட வேண்டியது அவசியம்.

“தமிழ் ஞானமும் எழுதும் சக்தியும் என்னைக்காட்டிலும் அதிகமாக உள்ளவர்கள் இந்தக் காரியத்தைக் கையிலெடுத்துக் கொண்டிருக்கும் பட்சத்தில் விசேஷமாக இருந்திருக்கும். ஆனால் இதை ஒருவரும் எடுத்துக்கொள்ளாதிருக்கிற படியாலும், முதல் நூலின் பெருமையையும், அதைப் பாஷாந்திரப் படுத்த வேண்டியதன் அவசியத்தையும் கருதி, என்னுடைய மொழிபெயர்ப்பிலுள்ள குற்றங்களைக் கற்றோர் மன்னிப்பார்கள் என்கிற தைரியத்தைக் கொண்டும். இந்த எளிய மொழிபெயர்ப்பை வெளியிடுகிறேன்....”

---

[1] ‘குமரி மலர், பக்கம்-36, டிசம்பர் 1982இல் மறுபடி வெளியானது.’

எதிலும் தன்னடக்கம் வேண்டும் என்னும் கொள்கையினர் வ.வே.சு.ஐயர். பிறமொழி இலக்கியங்களைப் பெரிதும் போற்றாத அந்நாளில், அவர், பாரதியார் வாக்கிற்கிணங்க "பிறநாட்டார் சாத்திரங்களைத் தமிழில் கொணர்ந்தார்."

தமிழுக்குக் "கதி" இருவர்; அதில் க-கம்பனையும், தி-திருவள்ளுவரையும் சுட்டும் என்று திருமணம் செல்வக் கேசவ ராய முதலியார் செப்பிய கருத்தை உட்கொண்டு, கம்பரையும், திருவள்ளுவரையும் நன்கு கற்றாய்ந்து ஆங்கில மொழிவாயிலாக அயல்நாட்டினர்க்கு மொழிபெயர்த்து அறிமுகப்படுத்திய பெருமையினர்.

"இதை வெளியிடுவதனால் இந்தக் கிரந்தத்தையும் இன்னும் ஐரோப்பிய தேசங்களிலுள்ள இதர ராஜ தந்திரக் கிரந்தங்களையும் நல்ல தமிழில் செவ்வையாக மொழிபெயர்க்க வேண்டுமென்கிற எண்ணத்துடன் அறிஞர்கள்வெளிவரும் பக்ஷத்தில் அதுவே என்னுடைய முயற்சிக்கும் பிரயோஜனமாகிவிட்டது என்று பூரணமான ஆனந்தங் கொள்ளுவேன். இது கேவலம் மொழிபெயர்ப்பே ஆனதால் கிரந்த கர்த்தா சொல்லுகிற அபிப்பிராயங்களில் சிலவற்றை நான் ஆக்ஷேபித்த போதிலும், அப்படி ஆக்ஷேபிக்கப்பட்ட அபிப்பிராயங்களையும் சிறந்த கர்த்தா எழுதிய படிக்கே மொழிபெயர்ப்பேன்."[2]

## கம்பராமாயணப் பாடல்கள் மொழி பெயர்ப்பு:

வ.வே.சு. ஐயர் தமது ஒன்பது மாதச் சிறைவாசக் காலத்தில் (பெல்லாரி - 1921) கம்பராமாயணப் பாடல்கள் பலவற்றை மொழிபெயர்த்தார்.

Kamaba Ramayana - A study என்னும் நூலில் அம்மொழி பெயர்ப்பைக் கண்டு சுவைக்கலாம். தமிழறியாத பிற மொழி இலக்கியக் கலைஞர்களுக்காகக் கம்பராமாயணத்தை, ஆங்கிலத்தில் ஆய்வு செய்த கட்டுரைகளிடையே, பல கம்பன் பாடல்களை மூலக்கருத்து கெடாவண்ணம் மொழிபெயர்ப்பு செய்தது பாராட்டுக்குரியது. படித்துச் சுவைத்தற்குரியது.

ஒரு பாடலைப் பார்ப்போம்: அனுமன் மருத்துவ மலையைக் கொணர்ந்து இலக்குவனையும் வானர வீரர்களையும்

[2] இந்தியா - 5.6.1909 பக்கம் -6

உயிர்ப்பித்ததும் இராமன் அடைந்த மகிழ்ச்சியைக் கம்பன் கூறுவ தாவது:

"முன்னின் தோன்றினோர் முறையின் நீங்கலாது;
என்னின் தோன்றிய துயரின், ஈறுசேர்
மன்னின் தோன்றினோம் முன்னம்; மாண்டுளோம்;
நின்னின் தோன்றினோம் நெறியின் தோன்றினாய்" [3]

தமிழ்க்கலைமகளான இவ்உயிர்ப்புள்ள பாடலை, ஆங்கில வாணியில் வ.வே.சு.ஐயர் அழகுறத் தருகிறார்.

"Once we were born to Dasarath, O friend,
But those our bodies now are dead which took
Their birth from him. And now we're born again,
And thou it is to whom we owe this birth![4]"

வ.வே.சு. ஐயர் பல்துறை வித்தகர். இலக்கிய நூல்கள், சமு தாய நூல்கள், வரலாற்று நூல்கள் எனப் பல்வேறு இலக்கியங்களி லும் ஆர்வம் நிறைந்தவர். எதைப் படித்து அது அவருடைய உள் ளத்தில் ஒரு தாக்கத்தை உண்டாக்குகின்றதோ அதைத் தமிழர்கள் படித்துப் பயன்பெற வேண்டுமென மொழிபெயர்ப்பார்.

**தன்னம்பிக்கை (Self Reliance)**

இயற்கையையும் கடவுளையும், மனிதனையும் ஒன்றாக இணைத்து ஆன்ம நேயம் என்பதனை உலகுக்கு உயர்த்தியவர் ரால்ஃப் வால்ட்டோ எமர்சன் (Ralph Walto Emerson) என்னும் அமெரிக்க அறிஞராவார்.

எமர்சனின் கருத்துகள் அண்ணல் காந்தியாரால் அவ்வப் போது, மேற்கோள் காட்டப்பெற்ற சிறப்பினவாகும். பண்டித ஜவஹர்லால் அவர்களும் எமர்சனின் கருத்துகளில் தம்மைப் பறி கொடுத்தவர். அவர் தமது 'டிஸ்கவரி ஆஃப் இந்தியா' (Discovery of India) என்னும் உலகப் புகழ்பெற்ற நூலை எமர்சனின் வரிகளு டன் முடித்திருக்கிறார்.

எமர்சனின் ஆங்கிலம் வீறுநடை போடுவது; எனவே அது வ.வே.சு. ஐயரைக் கவர்ந்துவிட்டது. எமர்சனின் கருத்துக்கள் ஒரு

[3] கம்பராமாயணம். யுத்தகாண்டம், கம்பன் கழகப் பதிப்பு. பக். 1372.

[4] Kamba Ramayanam - A study - V.V.S. Aiyar Page 209. Bharathia Vidya Bhavan, Bombay

பேரறிஞனின் உள்ளத்திலிருந்து புறப்பட்டவை; எனவே வ.வே.சு. ஐயர் அவற்றில் தம்மைப் பறிகொடுத்து, மொழி பெயர்த்தார்.

இந்நூல் 1909இல் முதல்பதிப்பாக வெளிவந்தது. மூன்றாம் பதிப்பைத் திருப்பூர் ஸர்வோதயப் பிரசுராலயம் வெளியிட்டது. ஐந்தாம் பதிப்பைக் தஞ்சாவூர் ஸர்வோதயப் பிரசுராலயம் 1962 இல் வெளிக்கொணர்ந்தது.

அவர் தமது 'தன்னம்பிக்கை' எனும் மொழிபெயர்ப்பு நூலின் முன்னுரையில் எமர்சனுடன், அவரது குருவான தாமஸ் கார்லைல், மற்றும் ரஸ்கின் ஆகியோருடைய படைப்புகளை ஒப் பிட்டு மகிழ்கிறார். 'கார்லைல் எப்போதும் ஆசிரியனாக இருந்து போதிப்பவர் என்றும், ரஸ்கின் தன்னுடைய விரிந்து பரந்த அறி வைப் பெண் நடையில் மென்மையாகப் பிரதிபலித்தான் என்றும், ஆனால் எமர்சன் கம்பீரத்துடனும், ஆவேசமுடனும், மிடுக்கான சொற்களுடனும் கருத்தை நயம்பட உரைத்தான்' என்றும் வ.வே.சு.ஐயர் குறிப்பிட்டுள்ளார்.[6]

வ.வே.சு. ஐயர், எமர்சனின் 'Self Reliance' எனும் நூலை மொழிபெயர்த்ததன் காரணத்தைக் கூறுகிறார்:

"எமர்சன் தன் வியாசங்கள் மூலமாகத் தர்மோபதேசம் செய் தார்... அவர் ஆயுள் முழுவதிலும் செய்து வந்த உபதேசங்களின் சாராம்சம் அனைத்தும் இந்தத் 'தன்னம்பிக்கை' எனும் வியாசத் தில் பொழிந்து கிடப்பதால் அதையே இப்போது மொழிபெயர்க் கிறோம்.

எமர்சனுடைய கொள்கைகள் அனேக அமிசங்களில் நமது வேதாந்தக் கொள்கைகளை ஒத்திருப்பதால், விசேஷமான பொருத்தங்களைக் காணுமிடங்களில் மொழிபெயர்ப்பாசிரியரின் உபநிஷத்துக்கள், கீதை, சித்தர்களின் நூல்கள் முதலியவற்றி னின்று மேற்கோள்கள் எடுத்து அடிக்குறிப்புகளில் சேர்த்திருக்கி றார் என்று படிப்போருக்கு இங்குத் தெரிவிக்கின்றோம்."

ஆங்கிலத்தில் எமர்சன் அறிவித்த கருத்துகளை அப்படியே. மூலக்கருத்து சிதையாவண்ணம் முழுமையாக அழகுத் தமிழில் அளிக்கிறார்:

6.தன்னம்பிக்கை - வ.வே.சு.ஐயர் - சர்வோதயப் பிரசுரம் - 1962

"ஜன சமூகம் என்று சிறப்பாகச் சொல்லப்படும் கூட்டம் தற் காலம் இருக்கும் நிலைமையைக் கவனிக்கிறவனுக்கு மேலே- நாம் சொல்லியிருக்கிற தர்மாசரணை எத்தனை அவசியமானது என்பது நன்கு விளங்கும். இந்தக் காலத்து மனிதனைப் பார்க்கும் போது அவனுடைய இருதயமும் நரம்புகளும் உக்கிவிட்டன என்று சொல்லும்படி இருக்கிறது. நாம் தன்னம்பிக்கை இழந்த பேடிகளாய் விட்டோம். நமக்குச் சத்தியத்தைக் கண்டால் பயமா யிருக்கிறது; அதிர்ஷ்டம் வந்தால் பயமாயிருக்கிறது; சாவை நினைத்துப் பயப்படுகிறோம்; பரிபூரணமான, கம்பீரியம் நிறைந்த மனிதர் நம் காலத்தில் பிறக்கக் காணோம். வாழ்க்கை யையும் ஜனசமூகத்தின் நீதியையும் முற்றிலும் மாற்றிப் புதுப் பிக்க உண்மையான புருஷர்களும் ஸ்தீரிகளும் வேண்டியிருக்கி றது. ஆனால் நம்மில் பெரும்பாலாருடைய சுபாவம் அவர்க சொந்த விவகாரங்களை நிர்வாகம் செய்யக்கூடச் சக்தியற்றதாக இருக்கிறது. அவர்களுடைய ஆசை மனிதர் சக்திக்கு மீறினதாக இருக்கிறது. அவர்கள் இரவு பகல் ஓயாமல் வேறொருவர் பேரில் சார்ந்து கொண்டும் பிச்சை எடுத்துக்கொண்டுமேதான் இருக்கிறார் கள். நமது கல்வி, தொழில், விவாகம், கொள்கை ஒன்றையும் நாமாக நாம் நிர்ணயம் செய்துகொள்ளவதில்லை; ஜன சமூகம் தான் நமக்காக நிர்ணயிக்கிறது. நாம் வெறும் மடப்பள்ளி வீரர்கள் ஆகிவிட்டோம். விதியோடு கடும்போர் புரிந்து நமது வலி மையை விருத்தி செய்துகொள்ள நாம் அஞ்சுகிறோம்."

"ஊழையும் உப்பக்கம் காணும்" திருக்குறள் கருத்து இங்கே ஆழமாகப் பதிக்கப்பட்டிருக்கிறது. நம் இந்திய மக்கள் திண் ணைத் தூங்கிகளாய், விதியின் மேல் பழிபோட்டு விலகி ஒதுங்கி வாழ்பவராக இருப்பதை இக்கட்டுரைப் பகுதி சுட்டிக் காட்டு வதை நாம் உணரலாம். தன்னம்பிக்கையின்றி மனிதன் முன்னேற முடியாது என்பதை இம்மொழிபெயர்ப்பு நூல் உணர்த்துகிறது. மனிதன் நம்பிக்கையைத்தான் ஆதாரமாகக் கொண்டவன் என் னும் கருத்து இச்சிறு நூலில் எங்கெங்கும் எதிரொலிக்கக் காண லாம்.

'விதியா? விடாமுயற்சியா?' என்று ஒரு வினாவைத் தமக்குள் கேட்டுக்கொண்டபடி, வ.வே.சு. ஐயர் தன்னம்பிக்கை (Self Reliance) மொழி பெயர்ப்பில் குறிப்பிட்டிருப்பது எண்ணி இறும்பூது எய்தத்தக்கது. "ஆகூழ் என்பது மனிதன் உள்ளமே.

என்று குறிப்பிட்டு, 'எது வந்திடினும், எப்போ வந்திடினும், பொல்லாப் பொழுதினில் வந்தன என்று வல்லவன் சோர்ந்திடான்' என்று குறிப்பிட்டுத் தன்னம்பிக்கை மனிதனைத் தளர விடாது என்ற கருத்தை வலியுறுத்தியுள்ளார். மூல நூலின் முழுச் செய்தியை முற்றவும் கொணர்ந்த பெருமையாளர் வ.வே.சு.

வ.வே.சு. ஐயரின் இம்மொழிபெயர்ப்பு நூலில் கணக்கற்ற வட சொற்கள் விரவியுள்ளன. அவர் அச்செய்திகளைத் தன்னியல் பாகப் பெய்துள்ளார் என்பது, இந்நூலில் 135 சமஸ்கிருதச் சொற்க ளுக்கு அரும்பதவுரை அளித்திருப்பதிலிருந்து தெரிகிறது.

## அகஸ்தீன் என்னும் மகாத்மாவின் விண்ணப்பம்

வ.வே.சு. ஐயர் 'இந்தியா'வில் எழுதுவதை 1909இல் விட்ட பின்னர், 'ஞானபானு'வில் மொழிபெயர்ப்பைத் தொடர்ந்தார். 'அகஸ்தீன் என்னும் மகாத்மா'வின் விண்ணப்பம் என்னும் தொடரை 1914 ஜனவரியில் தொடங்கினார். 1914 அக்டோபர் வரை தொடர்ந்தார்.

கிறிஸ்தவ சமய ஒப்பற்ற ஞானியார் அகஸ்தீன் என்னும் மகாத்மாவாவார். St. Augustine - Aurelius Augustines - 354 - 430). அவர் இத்தாலிய நாட்டின் ஞானி. இவர் "On the Trinity", "The city of God", "My Confessions in Thirteen Books" என்னும் படைப்புகளை அளித்தார். அவற்றுள் My confessions in Thirteen Books எனும் நூல் தன்வரலாறு கூறும் வடிவம் கொண்டது. சமயச்சார்பான தியானம் பற்றியும், பல விளக்கங்களையும் வழங்கிய நூலாகும். இத்தொ டர் நூல்களில் முதல் பத்துப் புத்தகங்களில் தன் குடும்பத்தார் பற் றியும், ஏனைய நூல்களில் புனித ஞானம் பற்றியும் எழுதியுள் ளார்.[7] Master plots from the world's fine Literature. Frank N. Magile (Ed) Salem Press, New York 1964.

"அத்தியாத்ம ஞானம்தான் நமது பாரத ஜாதியின் ஜீவநாதம்" என்னும் கொள்கையை, "மறுமலர்ச்சி"யில் வலியுறுத்திய வ.வே.சு. ஐயர் உலக சமய ஞானங்களை வியந்து போற்றியவர். அவர் தமது "அகஸ்தீன்" நூலின் சிறப்பைப் பற்றிக் குறிப்பிடு கிறார்:

---

7 வ.வே.சு. ஐயர் அரசியல் இலக்கியப்பணிகள், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் 1993. பெ.சு.மணி (மேற்கோள்)

"ஈசுவர சந்நிதானத்தில் தன்னுடைய சரித்திரத்தைச் சொல்லு கிற பாவமாக இந்த விண்ணப்பம் எழுதப்பட்டுள்ளது. இது மிக வும் அற்புதமான புத்தகம். பக்தியோகம், ஞானயோகம் இரண்டி லும் கரைகாணாதவன் இதை எழுதியிருக்க முடியாது. இதன் பொருளும் நடையும் மகாகாவியங்களின் உன்னத ஸ்தாயியைப் போய்த் தொடுகின்றன. எந்த மதத்தினரேனும் சரி. எந்தக் கொள் கையரேனும் சரி, உண்மையான ஆத்தும ஞானத்தைப் பெற்றுள ரேல், அவர்கள் பேசுவது ஒரே பாஷை; பாடுவது ஒரே கானம்: நிற்பது ஒரே நிலை. இந்த ஸத்தியத்தை இந்த மகானுடைய விண் ணப்பம் நன்றாக எடுத்துக் காட்டுகிறது. லத்தீன் பாஷையில் எழு தப்பட்ட இந்த அரிய கிரந்தத்தை ஆங்கிலத்திலிருந்து நம்ம னோர்க்காகத் தமிழில் மொழிபெயர்த்தெழுதலானேன்[8]"

வ.வே.சு. ஐயர் புனித அகஸ்தீனின் முதல் நூலின் ஒன்பது அத்தியாயங்களை மட்டுமே மொழியெர்த்துள்ளார். நூல் முழுவ தையும் அவர் மொழிபெயர்க்கவில்லை.

இளமைப் பருவத்தில் ஒருவருக்குக் கல்வியோடு, நல்லொ ழுக்க ஆன்மிக சிந்தனையும் கைவரப் பெற வேண்டும் என்ப தைப்·புனித அகஸ்தீன் விண்ணப்பம் வழியே உய்த்துணர வைத் தார். வ.வே்.சு. ஐயருக்கு ஆன்மிக உணர்வு மிகுதியாக இருந்ததால், ஆர்வத்துடன் அகஸ்தீன் விண்ணப்பத்தை மொழி பெயர்க்க முனைந்தார். என்ன காரணத்தாலோ அதை அவர் புதுச் சேரி வாழ்வில் முடிக்க முடியவில்லை. ஆயினும் அவரது கிறிஸ் தவ சமய இலக்கியத்தொண்டு பாராட்டுக்குரியது என்பதில் ஐயம் இல்லை.

## மொழிபெயர்ப்புக்கொள்கை

வ.வே.சு. ஐயர் எழுத்தைவிட ஒலி (சப்தம்) தான் முக்கிய மானது என்னும் கொள்கையை வலியுறுத்தியவர். இதனாலேயே ஆங்கிலத்தில் "அஸ்ஸிரியர்" என்பதை "அஸீரியர்" என்று ஒலி பெயர்த்துள்ளார்.[9]

மண்டயம் ஸ்ரீநிவாசாச்சாரியார் தாகூரின் கதைகள் சில வற்றை வங்க மொழியிலிருந்து நேரடியாக மொழிபெயர்த்துள் ளார். அத்தமிழ் மொழி பெயர்ப்பில் வ.வே.சு. ஐயர் புரிந்த

8. ஞான பானு - ஜனவரி 1914

துணைபற்றி மண்டயம ஸ்ரீநிவாச்சாரியார் குறிப்பிட்டிருப் பதாவது:

"என் மொழிபெயர்ப்பில் தமிழ் வழுவிய இடர்களைக் கண் ணும் கருத்துமாய்ப் பரிசோதித்துக் கொடுத்த ஸ்ரீமான் வ.வே.சு. ஐயர் அவர்களுக்கு நான் பட்டுள்ள கடமையும் சிறிதன்று" என அவர் குறிப்பிட்டிருப்பதைப் பெ.சு. மணி தமது "வ.வே.சு. ஐயர் அரசியல் இலக்கியப் பணிகள் எனும் நூலில் (பக்181) சுட்டியுள் ளார்."

9 தமிழ் நாகரிகத்தின் பழைமை: வ.வே.சு. ஐயர் மறுவெளியீடு குமரி மலர், ஜூலை 1981.

# 16. தமிழ்நடை

வ.வேசு. ஐயரின் தமிழ் மொழி நடைபற்றி பெ.சு.மணி அவர்கள் தமது நூலில் விரிவாகவே ஆராய்ந்துள்ளார்.

வ.வே.சு. ஐயர் தமிழ் எழுதுகையில் ஆங்கிலச் சொற்களை விலக்குவதில் அதிக அக்கறை கொண்டிருந்தார்.

எழுத்தில் மட்டுமின்றி தமது பேச்சிலும் ஆங்கிலச் சொற்கள் விரவாவண்ணம் அவர் பார்த்துக்கொண்டார். என்று வெ.சாமிநாதசர்மா குறிப்பிடுகிறார்.

"தேசபக்தனி'ல் எல்லோராலும் சர்வ சாதாரணமாக வழங்கப்பட்டு வந்த ஆங்கிலச் சொற்களுக்குப் பதில் தமிழ்ச் சொற்களையே வழங்க வேண்டுமென்ற நியதியைக் கைப்பிடித்தார்.[10]

தமிழ்மொழி உரைநடை வல்லுநர்களில் ஒருவராக வ.வே.சு. ஐயரை, "தற்காலத் தமிழ் இலக்கியம்" பற்றி ஆய்வு செய்த ஏ.வி. சுப்ரமணிய ஐயர் குறிப்பிடுவதாவது;

"நல்ல இலக்கியத் தன்மை பெற்ற வசன கர்த்தர்களாயிருந்து மறைந்தவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் வேதநாயகம் பிள்ளை, வீராசாமி செட்டியார், பி.ஆர். ராஜமையர், கவி சுப்பிரமணிய பாரதி, வ.வே.சு. ஐயர் ஆகிய ஐவரே."[11]

வ.வே.சு. ஐயரின் சமஸ்கிருதச் சொல்லாட்சி பற்றிப் பெ.சு.மணி தமது நூலில் குறிப்பிட்டிருப்பதாவது:

"வ.வே.சு. ஐயர் தமிழ்நடையில் சமஸ்கிருதச் சொற்களைச் சில சமயம் இடமறிந்தும், சில சமயம் இடர வைத்தும் பெய்துள்ளார். எதிர்மறைச் சொற்களைச் சம்சுகிருத வடிவத்திலேயே ஆள்வது ஒரு நெருடலாகத்தான் இருக்கிறது. சான்றாக, யதார்த்தமற்ற என்பதற்குப் பதிலாக 'அயதார்த்தம்' என்றும், 'ஸ்வாதீனமில்லாத' என்பதற்கு 'அஸ்வாதீனதா' என்றும் ஆண்டிருக்கிறார். ஒரு சொற்றொடரில் முன்னும் பின்னும் இயல்பாகப் பொருந்துவதற்கிடமில்லாத் வகையில் சில சொற்கள் குத்திட்டு நிற்கின்றன. 'என் சைசவத்தில் எனக்கு ஜீவனை அளிப்பது' என்னும்

---

[10] வெ. சாமிநாத சர்மா கட்டுரைகள்.

[11] தற்காலத் தமிழ் இலக்கியம் - ஏ.வி. சுப்பிரமணிய ஐயர், மக்கள் வெளியீடு - 1985

சொற்றொடரில், குழந்தைப் பருவத்தில் என்னும் தமிழ்ச்சொல்லைச் "சைசவத்"தில் என்பதற்குப் பதிலாகப் போட்டிருக்கலாம். குமரிமலர் அதன் ஆசிரியர், அமரர் ஏ.கே. செட்டியார் இந்த சொற்றொடர் அடங்கிய கட்டுரையை வெளியிட்ட இடத்தில் "சைசவம்" என்பதை விடுத்து "குழந்தைப்பருவம்" என்று மாற்றியுள்ளார். இந்த மாற்றம் நியாயமற்றது."[12]

கம்பராமாயண ஆய்வுரை வல்லுநர் அறிஞர் பி.ஸ்ரீ. அவர்கள்; வ.வே.சு. ஐயர் அவர்கள் பயன்படுத்திய சமஸ்கிருதச் சொற்கள் இயல்பாய் விழுந்தவை என்று குறிப்பிடுகின்றார்:

"ஐயர் அதிக அளவில் வட சொற்களைக் கையாண்டார் என்று இவர் நடைக்கு ஒரு குறை சொல்வதுண்டு. ஆனால் கருத்துகளை அணி அணியாக வகுத்துச் சேனா சமுத்திரம் போல் காட்டும் நடையில், ஆங்கிலத்தில் வெளியிடக்கூடிய அரும்பெருங் கருத்துகளையெல்லாம், தமிழிலும் காட்டிவிட வேண்டும் என்னும் ஆத்திரத்தில், "எது வடமொழி? எது தமிழ்? என்று நிறுத்துப் போட அவகாசம்தான் எது? அப்படிச் செய்யத்தான் முடியுமா?"[13]

மணிப்பிரவாள நடையில் வ.வே.சு. ஐயர் எழுதி வந்தார்.

அவரது தமிழ் நடைபற்றித் "தமிழ்த்தென்றல்" திரு.வி.க. குறிப்பிடுவதாவது:

"ஐயர் அவர்கள் மணிப்பிரவாள நடைபிடித்து எழுதுகிறார். அது தமிழொன்றே பயின்றிருப்பவர்க்கும் பெரிதும் பயன்படாது. அவர்க்கும் பயன்படுமாறு வெண்முத்து நிலவு பெரிதாய் கனலுமாறு ஆசிரியர் செய்வார் என நம்புகிறோம்"[14]

அவரது தமிழ் நடை கற்றோரிடையே கருத்தார்வத்தை உண்டாக்கியுள்ளது. 'லக்ஷ்மி' மாத இதழில் ஆசிரியர் கே.எஸ்.முத்தையா... " பாலபாரதியின் தமிழ்நடை மணிப்பபிரவாள நடையைத் தழுவியிருக்கும் வரை தமிழ் அதன் இயற்கையான முதன்மை 'ஸ்தானத்தைப்' பெறுமா என்று ஐயுறுகிறோம்" என்று தெரிவித்துள்ளார். எனினும் வெ. சாமிநாதசர்மா இது பற்றி வாதிட்டு எழுதுகையில், "வடசொற்களைக் கலந்து எழுதுவதனால், தமிழ்ப்பாஷையில் கௌரவம் குன்றிவிடாதென்பதும்,

---

12 வ.வே.சு. ஐயர் - அரசியல் இலக்கியப் பணிகள்: பக் 186.

13. "தேசியம் தந்த தமிழ்" - சுதேசமித்திரன் வாரப்பதிப்பு 28.12.1947 மறு வெளியீடு - குமரிமலர் 1982 நவம்பர்

14. நவசக்தி டிசம்பர் 5, 1924

உண்மையில் அது தமிழ்ப்பாஷைக்கு ஒரு கம்பீரத்தையே கொடுக்கிறதென்பதும் அவர் கருத்து" என்று வ.வே.சு. ஐயரின் எழுத்து பற்றிக் குறிப்பிடுகிறார்.

1920களில் தமிழ் எழுத்து புதிதாகப் பத்திரிகைகளில் இடம் பெற்ற போது, சமஸ்கிருதம் பயின்ற பலரே அதன் ஆசிரியர்களாக விளங்கினர் என்பதை மறத்தற்கியலாது. ஏ.வி. சுப்பிரமணிய அய்யர் தமது தற்காலத் தமிழ் இலக்கிய நூலில் குறிப்பிடுவதாவது:

"ஓர் இலக்கிய நடை அதை ஆக்குவோர் கலைப்பயிற்சிக்கும் மனோபாவத்திற்கும் தகுந்தபடிதான் அமையும். இப்படித்தான் இருக்கவேண்டுமென்கிற விதிகளைக் கையாண்டு ஒருவன் இலக்கிய நடையை அமைத்தால் அதில் சத்து இராது. அவனுடைய சக்தி விளங்காது".

வ.வே.சு. ஐயர் அவர்கள் கம்பனைக் கற்றவர். திருக்குறளைத் தெரிந்தவர். இரு நூல்களும் இனிய தமிழ் நடையில் படைக்கப் பெற்றவை. எனினும் கம்பனைக் கற்றார் அவன் கையாண்ட சொற்களைச் சலசலக்கும் ஓடை போலப் பயிலவிடுவது வழக்கம். வ.வே.சு.ஐயர் தாம் இளமையில் படித்துத் தாக்கம் பெற்ற சமஸ்கிருதச் சொற்களினால் அதிகம் ஆளப்பட்டுள்ளார் என்பதும், அக்காலத்தில் வெளிவந்த பத்திரிகைகள் மணிபிரவாள நடையினவாகவே இருந்தன என்பதும் இவ்வேளையில் கவனத்திற் கொள்ளத்தக்கது.

# 17. வ.வே.சு. ஐயரின் பேச்சும், எழுத்தும், நகைச்சுவை உணர்வும்

வ.வே.சு.வின் தமிழ்ப்பேச்சிலும், எழுத்திலும் வடமொழிச் சொற்கள் கணக்கு வழக்கின்றி விரவியிருந்தன. காந்தியடிகளார் தமது உண்ணாநோன்பை முடித்தபோது அவர் சேர்மாதேவி தமிழ்க் குருகுலததில் திகழ்ந்த கூட்டமொன்றில் பேசிய பேச்சின் சில வரிகளை அதற்கு எடுத்துக்காட்டாக்காலம்:

"மஹா ஜனங்களே! இன்று ஒரு சுபதினம். நமது புண்ய பூமி யின் புணருத்தாரணத்திற்காக எழுந்த மஹாத்மா காந்தி இருப்ப தோரு நாள் சல்லேஹனம் இருந்து, இன்று பாரணை செய்தார்."

அவர் தமது பேச்சிலும் எழுத்திலும் அடிக்கடி 'தர்ஜுமா', 'ஸகனசக்தி' என்னும் சொற்களைப் பயன்படுத்தி வந்தார். வட சொற்களை வேணமட்டும் அவர் பயன்படுத்தியிருப்பினும் அது அவரது நடைக்கு வலுவூட்டி வனப்பை அளித்து, அவரது கருத்தை நிலை நாட்டியது என்றும் கொள்ளலாம். அவர் பன் மொழி வித்தகராகையால், அவரது பேச்சுக்களிலும், எழுத்துக்களி லும், கருத்தாழம் நிரம்பியிருந்தது. உயிர் ஓட்டம் நிலவியது. அவரது பரந்த அறிவு புலப்பட்டது.

ஆங்கில, ஃபிரெஞ்சு, இலத்தின் முதலான மொழிகளில் அவருக்கு நாட்டமும், புலமையும் மிக்கிருந்த போதிலும், அவர், நமது அன்றாடப் பேச்சிலும், பிறமொழிச் சொற்களை அவர் அடி யோடு தவிர்த்தார். தகுந்த தாய்மொழிச் சொற்களையே பயன்ப டுத்துவதில் கவனத்துடனும் கண்டிப்புடனும் இருந்தார் என்பதும் கவனிக்கத்தக்கது.

வள்ளுவரையும், கம்பனையும் வகையுடன் பயின்ற அவர், தம் எழுத்து நடையைப் பாமர மக்களுக்காகப் படைத்தார். சந்தி சேர்த்து எழுதுவதைத் தவிர்த்தார். சுத்தானந்த பாரதியாருக்குச் சந்தி கூட்டிச் சங்கடம் விளைவிப்பது பற்றி அவர் நகைச்சுவையு டன் எழுதினார். "தாங்கள் விருத்தங்களில் பதங்களைப் பிரித்து எழுதவேண்டும், இல்லாவிடில் 'கருவி ஆதி' என்பது "கருவி யாதி" ஆய்விடும் என்று எச்சரித்தார்.

இலண்டனில், "இந்திய விடுதியில்" தமது நண்பர்களுடன் கூடி உரையாடும்போது, வ.வே.சு. ஐயர் அழுத்தம், திருத்தமாக

எந்தக் கருத்தையும் எடுத்துச் சொல்லுவார். அவருக்கு எழுத்து வன்மையோடு நாவன்மையும் மிகுந்திருந்தது. ஆழ எதையும் சிந் தித்து வந்தவராதலால் எதையும் தெளிவாகவும், திருத்தமாகவும் சொல்லுவார். வ.வே.சு.ஐயர் இந்திய விடுதியில் வாரம் ஒரு முறை கூடும் நண்பர்களதுகூட்டத்தில் நாட்டு விடுதலை பற்றிப் பேசுவார். அவரது அனல் தெறிக்கும் பேச்சில் கரிபால்டியின் வர லாறும், மாஜினியின் வரலாறும் மேற்கோளாகக் காட்டப்பெறும்: இப்பேச்சு பெருங்கூட்டச் சொற்பொழிவாக அமையாமல், முப் பது அல்லது நாற்பது பேர் அடங்கிய சிறு குழுவில் நேருக்கு நேர் பேசுவது போல் அமையும். ஒவ்வொரு கூட்டத்தின் மையக்கருத் தும், "இந்தியா அடிமைத்தனத்திலிருந்து விடுவிக்கப்பட வேண் டும். எழுச்சி பெறுவோம். மேற்கத்திய பிரிட்டிஷாரை வென்றி டப் படைக்கலப் பயிற்சி பெறுவோம்." என்பதாகவே இருக்கும்.

இந்தியா வந்தபின்னர் காங்கிரஸ் கட்சிக்கூட்டங்களில் தம்மை அழைத்தால் போய்ப் பேசுவார். அவர் முதலில் தீவிர மான காங்கிரஸ்காரராயிருந்தார். காங்கிரஸ் சபைகூடும் பொழுதெல்லாம் அவர் செல்வார். சில சொல்வார்.

கிலாபத் இயக்கப் பொதுக்கூட்டங்களிலும், ஒத்துழை யாமை இயக்கப் பொதுக் கூட்டங்களிலும் அவர் பங்கு பெற்றுப் பேசியிருக்கிறார். அவர் பிரபலமான பேச்சாளார் அல்லர். ஆனால் அழுத்தமாக அரசியல் கருத்துக்களை அனைவரும் புரியும் வண் ணம் சிறிது நேரமே பேசுவார்.

வ.வே.சு.ஐயர் பேச்சில் தமிழோடு வழக்கில் கலந்துவிட்ட வட சொற்கள் அவரது பேச்சில் இடையிடையே வெளிப்படும். ஆனால் ஆங்கிலச் சொற்கள் அவரது சொற்பொழிவில் விரவி வரவே வராது.

அவரது பேச்சு நயமானது, வாக்குவாதம் செய்யும் போது கூட, நிதானம் இழக்காமல், அமைதியாகப் பேசினார். சொல்லி லும் சரி; செயலிலும் சரி அவர் நிதானமானவர், உறுதியானவர் என்பது உண்மை.

### வளமான நகைச்சுவை

எப்போதும் தீவிர சிந்தனையிலேயே ஈடுபட்ட அவர் இலக் கியவாதியாகவும் பத்திரிகையாளராகவும் சிறுகதையாளராகவும்

விளங்கியதால் தாமும் சிரித்தார்; சிரிக்கவும் வைத்தார். அவரது சிறுகதைகளில் ஆங்காங்கே நகைச்சுவை மிளிரும்.

'பாலபாரதியில்' வெளியான அரசியல் நகைச்சுவை:

**ஆங்கிலேயன்:** (கம்பீரமாய்) எங்கள் ஏகாதிபத்தியத்தில் சூரியன் அஸ்தமிக்கிறதேயில்லை.

**ஐர்லாந்தானி:** கடவுளை முட்டாள் என்று நினைத்தாயா! வெளிச்சமில்லாத இடத்தில் அவன் உங்களை நம்பி எப்படி விட்டுவைப்பான்.

அயர்லாந்து நாட்டினர் (ஐர்லாந்தானி) சுதேச கீதம் பாடிச் சுதந்திரம் பெற்றவர்கள், நயமானவர்கள். நகைச்சுவைக்கு ஆங்கில ஐரிஷ் பகையை, வ.வே.சு. அழகுற நகைச்சுவையாக்கிச் சிரித்துவிட்டு, 'பாலபாரதி' வாசகர்களையும் வாய்விட்டுச் சிரிக்க வைத்துள்ளார்.

"சந்திரகுப்த சக்கரவர்த்தி சரித்திரம்" எனும் அருமையான வரலாற்று நூலை வ.வே.சு. ஐயர் எழுதியுள்ளார். சாணக்கியரின் சாதுரியத்தையும் சாகச் செயல்களையும் படிப்போரது நெஞ்சங்களைக் கவரும் வண்ணம் நாடகம் பார்ப்பது போல் அடுக்கடுக்கான சம்பவங்களை விவரித்து எழுதியிருப்பது படித்தின்புறத்தக்கதாகும்.[1]

இந்நூலினை ஆசிரியர் இரண்டு பகுதிகளாக அமைத்துள்ளார். முதல் பகுதியில் 'சந்திரகுப்த சக்கரவர்த்தி சரித்திரம்' கூறப்படுகிறது.

இதில் பல்வேறு வரலாற்று ஆய்வாளர்களின் கருத்துக்களை வ.வே.சு. ஐயர் ஆராய்ந்துளார். இரண்டாம் பகுதியான 'அனுபந்தத்தில்'. சாணக்கியர் எவ்வாறெல்லாம் சந்திரகுப்தனின் பகைவர்களைத் தன் அறிவுத் திறமையால் வீழ்த்தியிருக்கிரார் என்பதை விளக்கியுள்ளார்.

முதல் பகுதியில் அவர், வரலாற்று ஆசிரியர்களின் விரோதமான ஆய்வுகளை நையாண்டி செய்து இருக்கிறார்.

---

1. சந்திரகுப்த சரித்திரம் - அமுத நிலையம் இரண்டாம் பதிப்பு - 1961

சந்திரகுப்தன் ஒரு பாரசீகனே என்று ஸ்பூனர் என்னும் ஆங்கில அறிஞர் அறிவிக்கின்றார். பாரசீக மொழியில் மெர்வு, மேரு, மௌர் என்னும் பல ஊர்கள் உள்ளன. அந்த ஊர்ப் பெயர்களுக்கும் மௌரியன் என்னும் பெயருக்கும் தொடர்பை உண்டாக்கி, ஸ்பூனர் சந்திரகுப்தன் பாரசீகன் என்று அவர் வாதிட்டார். அந்த வாதத்தை வ.வே.சு. ஐயர் மறுத்தும் இருப்பதைக் காணலாம்.

"சந்திரகுப்தனே பாரசீகன் என்ற கதைக்கு ஆதாரம் கூறுவது இன்னும் விநோதமாயிருக்கிறது. மௌரிய வம்சம் என்ற பெயர் சந்திரகுப்தன் தாயாரின் பெயரான முரை என்னும் பதத்தினின்று வந்தது என்று சொல்லும் வாதம் அறியாமையாம். உண்மை என்னவென்றால் , பாரஸீகத்தில் மெர்வு, மேரு, மௌர் என்று பலவாறு வழங்கும் ஊர் ஒன்று இருக்கின்றதாம். அந்தப் பெயருக்கும் மௌரியன் என்னும் பெயருக்கும் எவ்வளவு நெருங்கிய சம்பந்தம் இருக்கிறது பாருங்கள்; இவ்விதமாக ஸ்ரீமன் ஸ்பூனர் என்பவர் அபூர்வமான வாதங்கள் செய்கிறார். இம்மாதிரி வாதங்களை ஒப்புக்கொண்டால், ஸர் டாமஸ் மோர் என்னும் ஆங்கில மகான் கூடக் தமஸா நதிக்கரையில் வசித்த ஒரு மௌரியன் என்றும், அதிலிருந்து ஒரு பாரஸிகன் என்றும் ஏற்பட்டுவிடும்." வ.வே.சு. ஐயர் மௌரிய சொல் ஆய்வை நகைச் சுவைபடக் குறிப்பிட்டிருக்கக் காணலாம்.

# 18. நிறைவுரை

வ.வே.சு. ஐயரின் வாழ்க்கை ஒரு மாவீரரது வாழ்க்கையா கும். அஞ்சா நெஞ்சம் கொண்ட அவர் தொடக்கத்தில், தனிநபர் தீவிர அரசியலில் இறங்கினார். பயங்கர அரசியலாகவும் அது திகழ்ந்தது. அவரது வாழ்க்கை, அரசியலில் தொடங்கினாலும் அது இறுதியில் அவரது பாரத்துவாஜ தமிழ்க் குருகுலத்தின் தொடக்கப்பணியினால் சமூக சேவையில் நிறைவுற்றது.

இடையியே அவர் இலக்கியப் பணியில் ஈடுபட்டார். அவ ரது புரட்சி இயக்கச் செயல்பாடுகள் இந்தியாவின் "லண்டன் கடி தத்தில்" வெளியாயின. அவரது இலக்கியப் பணிகள் பல்வேறு இதழ்களில் அச்சில் வெளிவந்து நம்மை மகிழ்விக்க வைத்துள் ளன. அவரது சமூகப் பணி தமிழ்க்குரு குலத்தில் அமைந்தது.

அவரது வாழ்க்கையைப் பற்றி அவருடன் லண்டனில் தங்கி யிருந்த டாக்டர் டி.எஸ்.எஸ். ராஜன் அவர்கள் சிறுநூலில் அழகு றச் சுருக்கமாக எழுதியுள்ளார். சென்னை, கலைமகள் பதிப்பகத் தார் அதனை வெளியிட்டுள்ளனர். வெ. சாமிநாத சர்மா "நான் கண்ட நால்வரில்" வ.வே.சு.ஐயரது வாழ்க்கையையும், எழுத்தை யும் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். பின்னாளில் ரா. அ. பத்மநாபன் அவர்களும், பெ.சு.மணி அவர்களும் வ.வே.சு. ஐயரின் வாழ்க்கை, தொண்டு பற்றி விரிவாகவே எழுதியுள்ளார்.

வ.வே.சு. ஐயர் அருவியுடன் இணையாது இன்னும் சில ஆண்டுகள் வாழ்ந்திருந்தால் அவர்தம் வரலாற்றை இவர்கள் விரி வாக எழுதியிருக்க வாய்பிருந்திருக்கும்.

அவர் பாரதியார், மண்டயம் சீனிவாச்சாரியார், வ.உ.சி., சுப் பிரமணிய சிவா, திரு.வி.க., சாவர்க்கர், மதாம்காமா முதலான பெருமக்களுடன் பழகிய பண்பாளர்.

அவரது தீவிரமான அரசியல் ஈடுபாட்டுக்கு, அவரது இலக் கிய ஆர்வம் வடிகாலாக விளங்குகிறது. கம்பனும், திருவள்ளுவ ரும் கைகொடுத்தனர். மேனாட்டு இலக்கிய நூல்கள் அவருக்குச் சுவை நல்கி இதயத்துக்கு இதம் அளித்தன.

எதைப்படித்தாலும் அவர் ஆழப்படிப்பார் என்பதை அவரது படைப்புகள் புலப்படுத்துகின்றன.

அவரது பரபரப்பான வாழ்விற்கு இடையே அவர்

எண்ணற்ற நூல்களைத் தமிழுலும் ஆங்கிலத்திலும் தந்துள்ளார். சுயமான சிந்தனைக்கு அவரது படைப்புகள் எடுத்துக்காட்டாக விளங்கக் காணலாம். கற்பனை மிக்க கதாசிரியர், எழுத்து வன்மை மிக்க பத்திரிகாசிரியர், சங்க இலக்கியச் சுவையாளர், பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்களைத் தமிழாக்கம் செய்த வித்தகர், கம்பனைப் பெல்லாரிச் சிறையில் ஊடுரிவிப் பயின்று ஆய்ந்த அறிஞர். திருக்குறள் என்னும் மாபெரும் படையலை உலகிற்கு ஆங்கிலத்தில் அளித்த விற்பன்னர். அவர் தொட்ட இலக்கியப் படையல்கள் யாவும் துலங்கின என்பது வெளிப்படை.

அவர் திருக்குறள்பால் கொண்ட ஆர்வம் அக்குறளை ஆங்கிலமாக்கியது. எச். ட்ரூ, ஜி.யூ. போப் போன்றோர் முன்னரே ஆங்கிலத்தில் மொழி பெயர்த்திருப்பினும், தமிழ்மகனான வ.வே.சு அக்குறிப்புகளில் திளைத்துத் தாம் உய்த்துணர்ந்த கருத்துக்களை உலகிற்குத் தந்து அன்றே அதனை உலக நூலாக்கினார் என்பது பாராட்டுக்குரியது. தம் நண்பரான பாரதியார் கூற்றான, ‘வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான் புகழ் கொண்ட தமிழ்நாடு’ என்பதைத் தம் மொழிபெயர்ப்பால் செயல்படுத்திய உலக இலக்கிய வாதி. இம்மொழிபெயர்ப்பால் தமிழ் தனி ஏற்றம் பெற்றுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

அவரது கம்பராமாயண ஆராய்ச்சி இலக்கிய நாயகர்கள் உலகில் பீடுநடை போடும் ஓர் ஒப்பற்ற ஆங்கிலப்படைப்பாகும். இது இனியேனும் தமிழ் வடிவம் பெற்றால் பலப்பலர் துய்த்துப் பயன் பெறுவர்.

வ.வே.சு. ஐயர் உரக்கப்படிப்பார், உணர்ச்சியுடன் படிப்பார் என்பதை ராய. சொக்கலிங்கம் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

“ஹோமரின் வீர காவியத்தை ஐயர் மூல பாஷையில் உரக்க பப் படிப்பதைக் கேட்கும் எவரும் ஓர் உணர்ச்சி கொண்டு துள்ளி எழுந்துவிடுவர். கேட்போர்க்கும் பாஷை உதவிட வேண்டும் என் பது கூட இல்லை[2]

அவரது இலக்கியச் சிந்தனைகள் பற்றிய கட்டுரைகளும், அவரது தமிழ் சமூக- பண்பாட்டு வரலாற்றுக் கட்டுரைகளும் ஆய் வாளர்க்கு அருந்துணையாக நிற்க வல்லன.

---

2. வ.வே.சு. ஐயர், ராய சொ. குமரிமலர்.

## பார்வைக்காகப் பயன்பட்ட நூல்கள்


1. இலக்கிய விமரிசனம்: தொ.மு.சி. ரகுநாதன், மீனாட்சி புத்தக நிலையம்
2. க.நா.சு. பார்வையில் இலக்கிய வளர்ச்சி, மணிவாசகர் நூலகம்
3. கம்பன் கவிதை: கம்பராமாயண ரசனை: நவுயகப் பிரசுராலயம், காரைக்குடி
4. குரு கோவிந்த சிங்கள்: அமுத நிலையம் பிரைவேட் லிமிடெட், 1961. சென்னை
5. தமிழில் சிறுகதை வரலாறும் - வளர்ச்சியும் சோ. சிவபாத சுந்தரம் - உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் - சென்னை கருத்தரங்கம்.
6. திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புகள் 1967
7. நான் கண்ட நால்வர்: வெ. சாமிநாத சர்மா, 1959
8. நீக்ரோ மகான் புக்கர் வாஷிங்டன்: சர்வோதயப் பிரசுராலயம் (1960)
9. பாரதி நினைவுகள், யதுகிரி அம்மாள்: 1958
10. பாரதியார் சரித்திரம் - செல்லம்மாள் பாரதி.
11. பால பாரதி - இதழ்கள் (டாக்டர் வ.வே.சு. கிருஷ்ணமூர்த்தியிடம் உள்ளவை)
12. புரட்சிவீரர் பாரிஸ்டர் மகரிஷி வ.வே.சு. ஐயர் - டாக்டர் வ.வே.சு. கிருஷ்ணமூர்த்தி.
13. வ.வே.சு. ஐயர் ரா. அ. பத்மநாபன் -நேஷனல் புக்டிரஸ்ட் (1980)
14. வ.வே.சுப்பிரமணிய ஐயர்: புலவர் அரசு - சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகம்: (1951)
15. வ.வே.சு. ஐயர்: பெ.சு. மணி அரசியல், இலக்கியப் பணிகள் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம். (1993)
16. KAMBARAMAYANA - A STUDY - V.V.S. IYER Bharathiya Vidhya Bhavan, Bombay
17. KURAL OR THE MAXIMS OF THIRUVALLUVAR: Amutha Nilayam Ltd Fourth Edition 1961.
18. மற்றும் 'குமரி மலர்' இதழ்கள்.

**வ.வே.சு. ஐயர்** பத்துமொழிகள் பாங்குற அறிந்த பன்மொழி வித்தகர், விடுதலை இயக்கத் தீவிரதீரர் விநாயக தாமோதர சாவர்க்கரின் அறிமுகத்தால் இங்கிலாந்தில் வசித்த போதே, தேசிய இயக்கத்தில் ஈடுபட்டவர். கிரேக்கம் முதலான மொழி வல்லமை காரணமாகப் பல நூல்களைத் தமிழில் தந்தவர். திரு.வி.க. போன்றோர் ஈர்ப்பால் பத்திரிகை ஆசிரியர் ஆனவர். திருக்குறள் அவரை முழுவதுமாக ஆட்கொள்ள அதனை ஆங்கிலத்தில் அருமையாக மொழிபெயர்த்த அறிஞர். கம்பராமாயணத்துக்கு முதன் முதல் ஆங்கிலத்தில் திறனாய்வு செய்த பெருமையாளர். தமிழில் முதல் சிறுகதையைப் பெற்றெடுத்த தந்தை.

**திரு.கோ. செல்வம்** அவர்கள் பல்லாண்டு வானொலியில் பணியாற்றிப் பல நாடகங்கள், சொற்சித்திரங்கள் படைத்தவர். இந்தியாவின் பல நிலையங்களில் இயக்குநர் பொறுப்பு வகித்த இவர் முதன் முதலில் தமிழில் வருணனை வழங்கியவர் பனிரண்டு நூல்களின் ஆசிரியரான அவரது இலக்கிய வரலாற்று நாடகத் தொகுப்பான "புகழ்கோபுரமும்", வினாவிடை நூலான "இந்து மதம்-இது என்ன சொல்கிறது" என்பதும் தமிழக அரசின் முதற் பரிசுகளைப் பெற்றவையாம்.

Va.Ve.Su Iyer (Tamil)
ISBN-81-260-0827-X

**Rs.25**